# ‘‘திருக்குறள் ஆய்வு வரலாறு - ஒப்பிட்டாய்வுகள் (இலக்கியம்)’’

Thirukkural Ayvu Varalaru Oppeetaivugal (Illakiyam).

முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு.


கு. வெங்கடேசன் K. Venkatesan

ஆய்வாளர்
தமிழ்த்துறை
அஞ்சல் வழிக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை - 600 005.

M. Gunasekaran


ஏப்பிரல் 1994

முனைவர் மு. குணசேகரன்
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
அஞ்சல்வழிக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

"திருக்குறள் ஆய்வு வரலாறு - ஒப்பீட்டாய்வுகள் (இலக்கியம்)" என்னும் தலைப்பினைக் கொண்ட இவ்வாய்வேடு, சென்னைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் (பிஎச்.டி) பட்டம் பெறுவதற்காக என் மேற்பார்வையில் சென்னைப் பல்கலைக்கழக அஞ்சல்வழிக் கல்வி நிறுவனத் தமிழ்த்துறை மாணவர் கு. வெங்கடேசன் அவர்களால் டிசம்பர் 1991 முதல் ஏப்ரல் 1994 முடிய ஆய்வு நிகழ்த்தி உருவானதாகும். இதற்குமுன் இவ்வாய்வேடு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்பதற்கு நான் சான்றிதழ் வழங்குகிறேன்.

மு.குணசேகரன் 11-4-94

சென்னை 600 005 (மு. குணசேகரன்)
நாள் : 11.4.1994. மேற்பார்வையாளர்

கு. வெங்கடேசன்
ஆய்வாளர்
தமிழ்த்துறை
அஞ்சல்வழிக் கல்வி நிறுவனம்
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை 600 005.

## ஆய்வாளர் உறுதிமொழி

சென்னைப் பல்கலைக் கழகம் அஞ்சல்வழிக் கல்வி நிறுவன தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் மு. குணசேகரன் அவர்களின் மேற்பார்வையில், "திருக்குறள் ஆய்வு வரலாறு – ஒப்பீட்டாய்வுகள் (இலக்கியம்)" என்ற தலைப்பில், முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக நான் முழுநேர ஆய்வு நிகழ்த்தியதால் உருவான இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியின் பயன் என்றும், இதற்குமுன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

சென்னை 600 005.
நாள் : 11.04.1944.

(கு. வெங்கடேசன்)

## நன்றியுரை

'திருக்குறள் ஆய்வு வரலாறு – ஒப்பீட்டாய்வுகள் (இலக்கியம்)' என்ற தலைப்பில் ஆய்வினை நிகழ்த்துவதற்கு வாய்ப்பளித்த சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும், சென்னைப் பல்கலைக் கழக அஞ்சல்வழிக் கல்வி நிறுவனத்தின் இயக்குநர் டாக்டர் எம். சண்முகம் அவர்களுக்கும்,

தமிழ் ஆராய்ச்சி வரலாற்றில் விரிந்த பரப்பினை எடுத்துக்கூறி, அதில் உள்ள நோக்குகளையும் போக்குகளையும் அறியச் செய்தவரும், இவ்வாய்வேடு சிறப்பாக அமையப் பெரிதும் ஊக்கம் கொடுத்து அன்புடன் வழிகாட்டிய எனது மேற்பார்வையாளருமாகிய இணைப்பேராசிரியர் முனைவர் மு. குணசேகரன் அவர்களுக்கும்,

ஆய்வுத் தொடர்பாகச் சந்தித்தபொழுது விளக்கங்களைக்கூறி உதவிய பேராசிரியர் முனைவர் எம். கோதண்டராமன், முனைவர் அரங்க. இராமலிங்கம் ஆகியோர்க்கும்,

என்னை வாழவைத்துக் கொண்டிருக்கும் உலகின் முதல் திருக்குறள் தூதவர் என் ஆசிரியர் உலகத் திருக்குறள் மைய நிறுவனர் பேராசிரியர் முனைவர் குறள்ஞானி கு. மோகனராசு அவர்களுக்கும்,

ஆய்விற்குத் துணைபுரியும் வகையில் அமைந்த நூல்கள் பலவற்றைத் தந்து உதவிய மறைமலையடிகள் நூலகத்தாருக்கும், தேவநேயபாவாணர், சென்னைப் பல்கலைக்கழக நூலகங்களின் பொறுப்பாளர்களுக்கும்,

இவ்வாய்வேட்டைச் சிறப்பான முறையில் தட்டச்சு செய்த திரு. எஸ்.சி. மணி அவர்களுக்கும், என்னைச்சான்றோனாக ஆக்க நினைத்த என் தாய் தந்தையர்க்கும் உடன்பிறப்பான சகோதரர்களுக்கும் அண்ணிகளுக்கும் இவ்வாய்வேடு உருவாகத் தோன்றாத் துணை நின்ற ஏனையோருக்கும்

நெஞ்சம் நிறைந்த நன்றிகள்.

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | ... | அகநானூறு |
| அர்த். | ... | அர்த்தசாத்திரம் |
| அறப். | ... | அறப்பளிச்சுர சதகம் |
| இன்னா. | ... | இன்னா நாற்பது |
| இனியவை. | ... | இனியவை நாற்பது |
| ஐங். | ... | ஐங்குறுநூறு |
| கம்ப. | ... | கம்பராமாயணம் |
| க.ஆ.கோ. | ... | கருத்தரங்க ஆய்வுக்கோவை |
| கலி. | ... | கலித்தொகை |
| கழகம் | ... | திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். |
| கி.பி. | ... | கிறித்துப் பிறப்பதற்குப் பின் |
| கி.மு. | ... | கிறித்துப் பிறப்பதற்கு முன் |
| கிரே.பா.தொ. | ... | கிரேக்கப் பாடல் தொகுதி |
| குறள். | ... | திருக்குறள் |
| குறுந். | ... | குறுந்தொகை |

| | | |
|---|---|---|
| சிலம்பு. | ... | சிலப்பதிகாரம் |
| சிறுபஞ்ச. | ... | சிறுபஞ்சமூலம் |
| சிறுபாண். | ... | சிறுபாணாற்றுப்படை |
| சீவக. | ... | சீவகசிந்தாமணி |
| தணிகை. | ... | தணிகைபுராணம் |
| தாயுமா. | ... | தாயுமானவர் |
| தேம்பா. | ... | தேம்பாவணி |
| நற். | ... | நற்றிணை |
| நான். | ... | நான்மணிக்கடிகை |
| நாலடி. | ... | நாலடியார் |
| நாலா. | ... | நாலாயிரத் திவ்விய பிரபந்தம் |
| நீதி. வி. | ... | நீதிநெறி விளக்கம் |
| ப. | ... | பக்கம் |
| பக். | ... | பக்கங்கள் |
| [illegible] | [illegible] | [illegible] |
| பட்டி. | ... | பட்டினத்தார் |
| பதிற். | ... | பதிற்றுப்பத்து |

| | | |
|---|---|---|
| பரி. | ... | பரிபாடல் |
| புறம். | ... | புறநானூறு |
| பெரிய. | ... | பெரியபுராணம் |
| பெரியாழ்வார். | ... | பெரியாழ்வார் திருமொழி |
| பெரும். | ... | பெரும்பாணாற்றுப்படை |
| பொரு. | ... | பொருநராற்றுப்படை |
| மணி. | ... | மணிமேகலை |
| மதுரை. | ... | மதுரைக்காஞ்சி |
| மலை. | ... | மலைபடுகடாம் |
| மனு. | ... | மனுஸ்மிருதி |
| மனோ. | ... | மனோன்மணீயம் |
| முது. | ... | முதுமொழி |
| முருகு. | ... | முருகாற்றுப்படை |
| மேரு. | ... | மேருமந்தர புராணம் |
| வே. நா. | ... | வேலையும் நாள்களும் |

***

"திருக்குறள் ஆய்வு வரலாறு - ஒப்பீட்டாய்வுகள் (இலக்கியம்)"

## பொருளடக்கம்



***

# முன்னுரை

## 0. நுழைவாயில்

ஓர் உயர்ந்த இலக்கியம் அது தோன்றிய காலத்தில் வாழும் மக்களின் வாழ்க்கை நிலைகளை உணர்த்தி, அடுத்துவரும் மக்களின் நலனுக்கு வழிவகுப்பதாக அமைய வேண்டும். இந்த எதிர்பார்ப்பைத் தமிழ் இலக்கியங்களில் – குறிப்பாகத் திருக்குறளில் காணலாம்.

திருக்குறளுக்கு உரிய தனிப்பெருஞ் சிறப்பினால் அதனை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு வகையான ஆய்வுகள் இன்றுவரை மேற்கொள்ளப்பட்டுள்ளன; மேற்கொள்ளப்பட்டும் வருகின்றன.

இதுவரை வெளிவந்துள்ள திருக்குறள் ஆய்வுகளை வகை தொகை செய்து காணும்பொழுதுதான், இதுவரை நடைபெற்றுள்ள ஆய்வுகளை இனம் கண்டு இனி என்னென்ன நோக்குகளிலும் போக்குகளிலும் ஆய்வுகளை மேற்கொள்ளலாம் என்பதைத் தெளிந்து அறியமுடியும். ஆகவே, இதுவரை வெளிவந்துள்ள திருக்குறள் ஆய்வுகள் பற்றிய வரலாறு தேவையான ஒன்றாக அமைகிறது.

திருக்குறள் பற்றிய ஆய்வுகள் இலக்கிய நோக்கிலும், சமுகவியல் நோக்கிலும், மொழியியல் நோக்கிலும், இலக்கண நோக்கிலும், ஒப்பீட்டியல் நோக்கிலும், பிற பல்துறை நோக்கிலும் என மிக விரிவாக – பலவாக ஆராயப்பட்டு வெளிவந்துள்ளன.

எனவே, விரிவஞ்சியும், காலம் கருதியும் இலக்கிய நோக்கிலான ஒப்பீட்டாய்வுகள் மட்டும் ஆய்வுத் தலைப்பாக மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## 0.1 ஒப்பீட்டாய்வு

திருக்குறளினை விளக்கி உரைக்கவும், ஒத்த கருத்துகளை மேற்கோள் காட்டவும் உரையாசிரியர்களால் இவ்வொப்பீடுகள் உருவாயின. மேலும், சில இலக்கியங்கள் திருக்குறளை எடுத்துக் கூறி விளக்கமே தந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டிற்குப் பிறகே மேலை நாட்டினரின் அச்சு வரவால் திருக்குறள், திருக்குறள் உரைகள், பிற இலக்கியங்கள் அனைத்தும் அச்சடித்த நூல்களாக வெளிவந்தன. அவற்றில் ஆய்வு முன்னுரைகள், ஒப்புடைய இலக்கியப் பாக்கள், கருத்துகள் வழங்கப்பட்டன. பின்னர் இதழ்கள், நூல்கள் வழியாகத் திருக்குறள் ஆய்வுகள் வெளிவந்தன.

திருக்குறள் ஒப்பீட்டாய்வை இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1. திருக்குறளின் உள்நின்று அதன் அகநிலைச் செய்திகள் அனைத்தையும் திரட்டி ஆராய்தல், 2. பிற இலக்கியங்களோடு திருக்குறளை ஒப்பு நோக்கி அதன் பெருமையைத் தெளிதல். இவற்றை முறையே அகநிலை, புறநிலை ஆய்வுகள் என வகைப்படுத்தலாம். ஆய்வு விரிவஞ்சி அகநிலை ஆய்வு வரலாற்றை ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை. புறநிலை ஆய்வுகள் மட்டுமே எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. மேலும் திருவள்ளுவ மாலையுடன் ஒப்பிட்டுக் கூறிய ஆய்வுகளும் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

ஒப்பியல் முறையின் அடிப்படையை ஒட்டிப் புறநிலை ஆய்வில் மேலும் இரு உட்பிரிவுகளைச் செய்து கொள்ளலாம். தமிழ் மொழியிலுள்ள

பிற இலக்கியங்களோடு மட்டும் திருக்குறளை ஒப்பிட்டு ஆராய்தல் ஒருவகை. இதனை ஒருமொழி ஒப்புமை ஆய்வு என்று குறிப்பிடலாம். தமிழல்லாத பிற மொழிகளில் காணப்படும் இலக்கியங்களோடு திருக்குறளை ஒப்புநோக்கி ஆராய்தல் மற்றொரு வகையாகும். இதனைப் பன்மொழி ஒப்புமை ஆய்வு என்றழைக்கலாம்.

சமயத் தத்துவங்கள், அரசியல், சமூகத் தத்துவங்கள் இலக்கியங்களாக ஆய்வுக்கு ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. இவற்றுள் அர்த்தசாத்திரம், சுக்கிரநீதி, காமசூத்திரம், வேதங்கள் போன்றவை ஆய்வுக்குச் சான்றுகளாக மேற்கொள்ளப் பட்டுள்ளன.

## 0.2 ஒப்பீட்டாய்வின் பயன்

திருக்குறள் ஒப்பீட்டாய்வு (இலக்கியம்) ஆய்வின் விளைவு பெரும்பயனை ஏற்படுத்தும். திருக்குறளின் கால ஆராய்ச்சிக்குக்குறிப்பிட்ட காலத்தைக் கூறமுடியாவிட்டாலும் வரையறை கூற இவ்வொப்பீட்டாய்வு பெரும்பயனாக அமைகின்றது. மேலும் சமயங்கடந்த நாடு, மொழி இனங்கடந்த நிலையினைத் திருக்குறள் ஒப்பீட்டாய்வினால் அறிய முடிகின்றது. உலக அரங்கில் பிற இலக்கியங்களினின்று திருக்குறள் சிறந்த நீதி இலக்கியமாக – வாழ்வியல் நூலாக – பண்பாட்டு வளர்ச்சிபெற்ற நூலாக விளங்குவதை உலகினர்க்கு எடுத்துக்காட்ட முடிகிறது. மனித நேயம் – ஒருமைப்பாட்டு உணர்வு – சமுத மேம்பாடு என்னும் உயரிய சிந்தனையுடைய இலக்கியமாகத் திருக்குறள் விளங்குவதை இவ்வொப்பீட்டினால் அறியமுடிகிறது.

## 0.3 ஆய்வு எல்லை

திருக்குறள் தொடர்பான நூல்களனைத்தும் முதன்மை ஆதாரங்களாகவும், மற்ற நூல்கள், இதழ் கட்டுரைகள் துணைமை ஆதாரங்களாகவும் கொண்டு இவ்வாய்வேடு அமைகின்றது.

## 0.4 ஆய்வேட்டின் அமைப்பு முறை

இவ்வாய்வேட்டின் முதலாவது இயல், "திருக்குறள் ஒப்பீடும் உரையாசிரியர்களும்." இதில், திருக்குறள் பழைய, புதிய உரையாசிரியர்களையும், அவர்கள் எந்தெந்த நோக்கில் உரை ஆய்வுகள் மேற்கொண்டுள்ளனர் என்றும், மதிப்பிடப்பட்டுள்ளது. மேலும், உரையாசிரியர்களிடையே சமயச்சார்பும், வடமொழிச்சார்பும், பரிமேலழகர் உரை மறுப்பும், சமன்மைச் சமூகப் பொருளியச் சிந்தனையும் கொண்டு உரை எழுதிய ஆசிரியர்கள், பிற இலக்கிய உரையாசிரியர்களின் உரைகளில் திருக்குறள் மேற்கோளாகக் குறித்த ஆய்வுகளும், மதிப்பிடப்படுகின்றன.

இரண்டாவது இயலான "திருக்குறள் ஒப்பீடும் கால ஆய்வும்" என்பதில், சமயநோக்கிலும், புலவர்களின் கால அளவைக்கொண்டும், சங்க இலக்கியத்திற்கு முன், பின், சமகாலம் என்ற மூன்றுவகைப்பட்ட நோக்கிலும், காப்பியத்திற்கு முற்பட்டது என்றும், வடநூல்களுடன் தொடர்புபடுத்தியும் வெளிவந்துள்ள திருக்குறள் ஆய்வுகள் மதிப்பீடு செய்யப்பட்டுள்ளன.

"திருக்குறள் ஒப்பீடும் சமய ஆய்வும்" எனும் மூன்றாவது இயலில், திருக்குறளின் சமயத்தைக் காண சைவம், வைணவம், வேத சமயம், சமணம், பௌத்தம், கிறித்தவம் எனும் பல்வேறு நோக்கிலும் ஒப்பிட்டு ஆய்வுகள் வெளிவந்தவை மதிப்பிடப்பட்டுள்ளன.

"திருக்குறள் ஒப்பீடும் அரசியல் ஆய்வும்" என்னும் நான்காவது இயலில், அரசனும் அரசும், அரசனது இயல்புகள், அரசனும் மழையும், அரசாட்சி முறைகள், அரசனின் துணைகள், வடநூல் அரசியலும் திருக்குறளும், கிரேக்க அரசியலும் திருக்குறளும் எனும் நோக்கிலான ஆய்வுகள் மதிப்பிடப்பட்டுள்ளன.

"திருக்குறள் ஒப்பீட்டில் பண்பாட்டு ஆய்வுகள்" என்னும் ஐந்தாவது இயலில் தனிமனித அறம், இல்லறம், தனிமனிதப் பண்பாடு, சமூகப் பண்பாடு, கலை, பழக்கவழக்கம், நம்பிக்கை, தமிழ்ச்சங்கம் இருந்தமை எனும் பண்பாட்டியலான ஆய்வுகள் தொடர்பான ஆய்வு வரலாறு கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

"திருக்குறள் ஒப்பீட்டில் அறிவியல் - தொழிலியல் ஆய்வுகள்" என்னும் ஆறாவது இயலில் வேதியியல், உயிரியல், தாவரவியல் தொடர்பான அறிவியல் ஆய்வுகளும் வேளாண்மை, மருத்துவம், வாணிகம் போன்ற தொழிலியல் சார்ந்த ஆய்வுகளும் வந்துள்ள வரலாறு மதிப்பிடப்பட்டுள்ளது.

ஏழாவது இயலான "திருக்குறள் ஒப்பீட்டு ஆய்வின் நோக்கும் போக்கும்" என்பதில், திருக்குறளில் பிற இலக்கியத்தின் தாக்கம் உள்ளதையும், பிற இலக்கியங்களில் திருக்குறளின் தாக்கம் உள்ளதையும், திருக்குறளுடன் பிற இலக்கியத்தை ஒப்புமைக்கான முயன்றுள்ளதையும், ஒற்றுமை வேற்றுமைகளையும், வளர்ச்சி நிலைகளையும் காணும், நோக்கிலான ஆய்வுகள் இனங்காட்டப்பட்டுள்ளன, மதிப்பிடப்பட்டுள்ளன; அவற்றின் ஆய்வு வரலாறு காணப்பட்டுள்ளது.

## 0.5 சான்றுகள் குறித்த முறை

இவ்வாய்வேட்டில் அடிக்குறிப்புகள் அல்லது குறிப்புகள் என ஒரு தனிப்பகுதி ஒவ்வோர் இயலின் பின்னும் தரப்படவில்லை. மாறாக ஒவ்வோர் இயலிலும் இடம்பெறும் சான்றுகளுக்குரிய மூலக்குறிப்புகள் கட்டுரை ஓட்டத்திலேயே பிறையடைப்பில் நூல்/கட்டுரை அடைவுக்குரிய வரிசை எண்ணும் (இவ்வரிசை எண், நூலாசிரியர், நூல் முதலியவற்றைச் சுட்டும் எண் குறியீடாகும்) சான்று குறிப்பு இடம் பெறும் பக்கம் அல்லது பக்கங்களும் குறிக்கப்பட்டுள்ளன.

***

## 1.0 திருக்குறள் உரை விளக்கம்

திருக்குறளுக்குக் காலந்தோறும் பல உரைகள் தோன்றிக் கொண்டேயுள்ளன. பொழிப்புரைகளும், விளக்கவுரைகளும், குறிப்புரைகளும், தெளிவுரைகளுமாகப் பல உள்ளன. பழைய உரை நூல்கள், புத்துரைகள், ஆய்வு நூல்கள் உட்படக் குறளைப் பற்றிப் பல நூல்கள் தோன்றியுள்ளன. இவ்வுரைகளுள் திருக்குறளின் விளக்கத்திற்கு மேற்கோள்களாகவும், ஒப்புமைகளாகவும் உரையாசிரியர்கள் பயன்படுத்தியுள்ள ஒப்பீட்டுக் கருத்துகளின் வரலாறு இவ்வியலில் மதிப்பிடப்படுகின்றது.

## 1.1 உரையாசிரியர்கள்

திருக்குறளுக்கு உரை எழுதியவர்களாகக் கருதப்படும் பழைய உரையாசிரியர்கள் பதின்மர். அப்பதின்மருள், மணக்குடவர், பரிப்பெருமாள், காலிங்கர், பரிதியார், பரிமேலழகர் ஆகிய ஐவர் எழுதிய உரைகளே கிடைத்துள்ளன. மற்றவர்களுடைய உரைகள் ஒரு சில குறள்களுக்கு மட்டுமே கிடைத்துள்ளனவாக அறியப்படுகிறது. மற்றும், கவிராஜ பண்டிதர் எழுதிய திருக்குறள் உரையும், உ.வே.சாமிநாதையர் வெளியிட்டுள்ள ஒரு பழைய உரையும் இவற்றொடு கருதத்தக்கவை.

திருக்குறளுக்கு எழுந்த பழைய உரைகளுள் பரிமேலழகர் உரையையே அறிஞர்கள் பெரிதும் போற்றினர். அவ்வுரை எல்லோரும் புரிந்துகொள்ளும் அளவிற்கு எளிமையாக இல்லாததால் அவ்வுரை எளிமைப்படுத்தும் நோக்கில் உரைகள் பல எழுதப்பட்டன. இதற்கு முதலில் வித்திட்டவர் சரவணப் பெருமாளையர் (1838) எனலாம். இவருடைய தழுவல் உரை வெளிவந்ததும், தமிழுலகம் அதனையே பெரிதும் போற்றி வரவேற்றது. இராகவலு நாயுடு, கந்தசாமிப் பிள்ளை, கருகுவந்த சுவாமிகள், குப்புசாமி நாயுடு, சோமசுந்தர உபாத்தியாயர், பார்த்தசாரதி நாயுடு,

பொன்னுசாமி முதலியார், வீராசாமிப்பிள்ளை, வேதபுரி முதலியார், அ. சண்முகப்ப செட்டியார் ஆகியோர் பரிமேலழகர் உரையைப் போற்றிப் பதிப்பித்துள்ளனர்.

சரவண பெருமாளையருக்குப் பின் பரிமேலழகர் உரையைத் தழுவி உரை செய்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் இராமாநுசக் கவிராயர் (1840), முருகேச முதலியார் (2885), வடிவேலு செட்டியார் (1919) திருஉண்ணாம்பேட்டை குப்புசாமி முதலியார் (அறம். 1924; பொருள் 1926; காமம் 1926), பி. இரத்தின நாயகர் (1952), சாமி. சிதம்பரனார் (1959), ச. சாம்பசிவன் (1970) ஆகியோராவர்.

பரிமேலழகர் உரையில் காணும் ஆரியக் கருத்துகளின் தாக்கங்களைக் களைந்து பலர் உரை எழுத முனைந்தனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் புலவர் குழந்தை (1949), வெ. இராமலிங்கம் பிள்ளை (1954), செந்துறை முத்து (1967), தேவநேயன் (1969), கு.ச. ஆனந்தன் (1986), இரா. நெடுஞ்செழியன் (1991) ஆகியோராவர்.

திருக்குறளுக்கு எளிய தெளிவான உரை எழுதி, வள்ளுவத்தை எல்லாரிடமும் பரப்ப வேண்டும் என்று முனைந்தவர்கள் பலர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் கா. சுப்பிரமணியப்பிள்ளை (1928), மு. ரா. அருணாசலக் கவிராயர் (1930), சுகவனம் சிவப்பிரகாசம் (1949), ந.சி. கந்தையா பிள்ளை (1949), மு. வரதராசன் (1949), பால்வண்ணனார் (1953), ஜி. வரதராசன் (1954), எம்.இ. வீரபாகு பிள்ளை (1954), ஈக்காடு சபாபதி முதலியார் (1956), மயிலை சிவ. முத்து (1960),

வ.சுப. மாணிக்கம்(1963), புலியூர்க் கேசிகன்(1969), ஐயன் பெருமாள் கோனார்(1973), முனைவர் கு. மோகனராசு (1994) முதலியோராவர்.

திருக்குறளுக்கு அரிய விரிவான உரை விளக்கங்கள் காண முனைந்தவர்கள் நாகை. சொ. தண்டபாணி பிள்ளை(1933), திரு.வி.கலியாண சுந்தரனார்(1941), கா. அப்பாதுரையார்(1968) ஆகியோராவர்.

திருக்குறளுக்கு உரை எழுதுவதில் புதிய போக்குகளைக் கையாண்டவர்களும் உண்டு. அவர்களுள் குறளுக்கு உரை எழுதாமல் ஒவ்வொரு குறளிலும் காணும் நயங்களைச் சுட்டி நயவுரை கண்டவர் மு.கோவிந்தசாமி(1962); அந்தாதி அமைப்பில் திருக்குறளை அமைத்து (151 குறள்களை மட்டும்) உரை எழுதியவர் ஆர்.கே. அரங்கசாமி (1946); ஈற்றுச் சீர்களைக் கொண்டு தொகை வகைசெய்து உரை வகுத்தவர் ரா.ந. கல்யாண சுந்தர கவுண்டர்(1955).

திருக்குறள் உரைகளுக்கிடையிலான உரைவேற்றுமைகளைச் சுட்டி, அவற்றின் தகைமைகளை விளக்கித் தம் மதிப்பீட்டைத் தரும் வகையில் உரை கண்டவர்கள் நாகை. சொ. தண்டபாணி பிள்ளை(1933), முனைவர் இரா. சாரங்கபாணி(1989) ஆகியோராவர்.

## 1.2 திருக்குறள் உரையில் பிற இலக்கிய ஒப்பீடு

உரைகளில் பிற இலக்கியச் சான்றுகளைக் கூறி ஒப்புமை செய்வது உரையாசிரியர்களின் புலமையினையும், திருக்குறளின் உண்மைக் கருத்தினையும் அறியத் துணை செய்யும். இவ்வாறு ஒப்பிட்டுள்ள உரையாசிரியர்களின்

ஒப்பீடுகளைப் பின்வரும் வகைகளாக முறைப்படுத்தலாம். 1. ஒப்பு நோக்கும் முறை - தொடர்புபடுத்துதல், 2. கால மரபுடனான ஒப்புமை, 3. பிற இலக்கியச் செய்திகளைப் புகுத்தல், 4. கதையைப் பொருத்தல், 5. கொள்கை முனைப்பு.

## 1.2.1 ஒப்பு நோக்கும் முறை - தொடர்பு படுத்தல்

திருக்குறளுக்கு உரைகாணும்போது பிற இலக்கிய ஒப்புமைக் கருத்துகளைத் தொடர்புபடுத்தி உரையாசிரியர்கள் எழுதியுள்ளனர்.

பரிமேலழகர் அறன் வலியுறுத்தல் அதிகார விளக்கத்திற்கு,

"அஃதாவது அம் முனிவரான் உணர்த்தப்பட்ட
அம்மூன்றனுள் ஏனைப் பொருளும் இன்பமும்
போலாது, அறன் இம்மை, மறுமை, வீடு
என்னும் மூன்றனையும் பயத்தலான், அவற்றின்
வலியுடைத்து என்பது கூறுதல். அதிகார
முறைமையும் இதனானே விளங்கும். "சிறப்புடை
மரபின் பொருளும் இன்பமும், அறத்துவழிப்
படூஉம் தோற்றம் போல" (புறம்.31:1-2)
என்றார் பிறரும்" (192, ப.35)

என்று பழந்தமிழ் இலக்கியத்திலிருந்தும்,

"ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்" (குறள்.370)

என்னும் குறளுக்கு,

"அவா நீத்தவழிப் பெறுதல் ஒருதலையாகலின் அந்நிலையே தரும் என்றும் கூறினார். "நன்றாய் ஞானம் கடந்துபோய் நல்லிந் திரியம் எல்லாம்ஈர்த் தொன்றாய்க் கிடந்த அரும் பெரும்பாழ் உலப்பில் அதனை உணர்ந்துணர்ந்து......" (திருவாய் மொழி 8. 8:6) என்பதும் இக் கருத்தே பற்றி வந்தது" (192, ப.255)

இடைக்கால இலக்கியமான திருவாய்மொழியிலிருந்து பரிமேலழகர் சான்று தருகிறார். இவரைப் போன்று பரிதியார், பரிப்பெருமாள் போன்ற பழைய உரையாசிரியர்களும் ஒப்பிட்டுள்ளனர். நாகை சொ.தண்டபாணி (1933), மயிலை சிவமுத்து (1952), கா. அப்பாதுரை (1968), ஞா. தேவநேயன் (1969), கு.ச. ஆனந்தன் (1986), இரா.சாரங்கபாணி (1989, 1992, 1993), இரா. நெடுஞ்செழியன் (1991) போன்றோர்களும் பழந்தமிழ் இலக்கியம், இடைக்கால இலக்கியங்களிலிருந்தே சான்றுகள் தருகின்றனர். ஆனால், சி.வா. ஜகந்நாதன் (1963), ச. தண்டபாணி தேசிகர் (1986), தி. மாணிக்கவாசகம் (1965), போன்றோர் பழந்தமிழ் இலக்கியம், இடைக்கால இலக்கியம், இக்கால இலக்கியங்களிலிருந்து மேற்கோள்களையும், ஒப்புமைப் பகுதிகளையும் குறித்துள்ளனர்.

"தன்னைத்தான் காக்கின் சினம்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்" (குறள். 305)

என்னும் குறளுக்கு,

"......... மல்லல் பெறத்
தன்னைத்தான் காக்கின் சினம் காக்கின் என்றதனைப்
பொன்னைப்போல் போற்றிப் புகழ்ந்திலையே"
(-வள்ளலார், நெஞ்சறி. 434)

என்றும் இக்கால இலக்கியங்களிலிருந்து சான்றுகள் தருகின்றனர்.

### 1.2.2 கால மரபுடன் ஒப்புமை

திருக்குறள் வெளிப்படுத்தும் கருத்துகளை, அது தோன்றிய கால இலக்கியங்களுடன் ஒப்பிடும் பொழுதுதான் திருக்குறளின் உண்மைப் பொருளை அறிய முடியும் என்று புதிய உரையாசிரியர்கள் கருதித் தம் உரையில் சங்க கால இலக்கியங்களை ஒப்பிட்டுள்ளனர்.

1985-களுக்குப் பிறகு திருக்குறளுக்கு உரை எழுதிய ஆசிரியர்கள் திருக்குறளின் சமகாலமானச் சங்க இலக்கியங்களுடன் ஒப்பிட்டு, மரபு வழிப்பட்ட நிலையினைக் கூறித் திருக்குறளின் உரை முடிவைக் குறிப்பிடுகின்றார்கள்.

1986-இல் கு.சு. ஆனந்தன் "திருக்குறளின் உண்மைப் பொருள்" என்னும் நூலில்,

"இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை" (குறள்.47)

என்பதில், சங்க இலக்கியங்களில் 'இயல்பு' என்ற சொல் 'இலக்கணம்' (மலைபடுகடாம் 537; கலித்தொகை:111; திருமுருகாற்றுப்படை;177) 'தன்மை' எனப் பொருள்படும்படிப் பயிலப்பட்டுள்ளது என்று ஒப்புமைப் படுத்துகிறார். (21, ப.20) இவர் திருக்குறளில் வரும் சொற்களுக்குப் பொருள் காண, அக்காலப் பொருள் மரபை ஒப்பிட்டுக் காணுகின்றார்.

இவருக்குப்பின் 1989-இல் இரா. சாரங்கபாணி "திருக்குறள் உரைவேற்றுமை" என்னும் நூலில்,

"புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை" (குறள். 59)

என்னும் குறளுக்கு, "'ஏறு' என்பதற்குச் சிங்க ஏறு, யானை என்று

பொருள் கொள்வதிலும் காளை எனப் பொருள் கொள்வதே பொருத்தம். பீடு நடைக்குக் காளையைக் காட்டுதல் 'பெருமிதப் பகட்டுக்குத் துறையுமுண்டோ' (புறம்.90) என்னும் அடியால் அறியலாம். ஏறு போல் என உவமையாகக் கூறியிருத்தலின், பீடு நடைக்குப் பெருமை ஒழுக்கம் என்னும் பொருள் சிறப்பில்லை; பெருமித நடை என்பதே பொருந்தும்" என்கிறார். (86, ப.119)

தொடர்ந்து இரா. நெடுஞ்செழியன் 1991-இல் "திருக்குறள் தெளிவுரை" என்னும் நூலில், ஊழ் (குறள்-371, 372, 380, 620) பற்றிய விளக்கத்திற்கு,

> "ஊழ் என்ற சொல்லைச் சங்ககால இலக்கியங்கள் பலவும், எப்படிப்பட்ட பொருளில் பயன்படுத்தி வந்தனவோ, அதே பொருளில் தான் வள்ளுவரும் அந்தச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். 'ஊழின் உருப்ப' (புறம்.237), 'ஊழ் மாறுபெயரும்' (புறம்.283), அரிஉலை ஊழ்த்து (மலை.180) என்ற அடிகள் 'இயற்கை முறையாக வெளிப்பட்ட', 'இயற்கை முறையாக அமைந்த' என்ற பொருள்களைத்தான் குறிக்கின்றன" (152, பக்.29-30)

என்கிறார். கு.ச. ஆனந்தன், இரா. சாரங்கபாணி, இரா. நெடுஞ்செழியன் போன்றோர் திருக்குறளின் உண்மைக் கருத்தைக் கண்டறிய குறளின் சமகால இலக்கியங்களை ஒப்பிட்டுக் கூறுவதை மேற்கண்ட சான்றுகளின் வழி அறியமுடிகின்றது.

### 1.2.3 பிற இலக்கியச் செய்தியைப் புகுத்தல்

திருக்குறளுக்கு உரைகண்ட ஆசிரியர்கள் திருக்குறள் கருத்தினை விளக்கும் பொழுது பிற இலக்கியங்களைப் புகுத்தி ஒப்பிட்டுள்ளனர். இத்தகைய நோக்கில் பழைய உரையாசிரியர்கள் சில இடங்களில் உரைகண்டுள்ளனர். புதிய உரையாசிரியர்களிடம் இப்போக்குக் காணப்படவில்லை.

"இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன்உடையான் கண்ணே உள" (குறள். 223)

என்னும் குறளுக்கு உரை எழுதிய காலிங்கர், பரிதியார் இருவரும் பிற இலக்கியக் கருத்தினைப் புகுத்துகின்றனர்.

மேற்குறிப்பிட்ட குறளுக்குக் காலிங்கர் உரை எழுதும்போது,

> "மற்று எவ்வாற்றானும் தம்மாட்டு வந்தோர் யாவர், மற்று அவர், "எமக்கு வகையிலோம்" என்று சொல்லும் இத்துயருறு சொல்லினைச் செவி கேட்பச் சொல்லுவதற்கு முன்னமே கொடுத்தல் யாவர் மாட்டுளவோ எனில், குல மரபுடையோன்மாட்டே உளவாம்." (192, பக்.159-160)

என்கிறார். இவ்வுரையில் "முன்னம் முகத்தின் உணர்ந்தவர், இன்மை தீர்த்தல் வன்மை யானே" (புறம். 3) என்னும் புறநானூற்றுப் பாடலின் கருத்தினைப் புகுத்தி ஒப்பிட்டுள்ளார்.

இதே குறளுக்குப் பரிதியாரும் "நிற்பாடிய அலங்கு செந்நாப் பிறர் இசை நுவலாமை" (புறம். 22) என்னும் புறநானூற்றுப் பாடலின் கருத்தினைப் புகுத்துகிறார்.

மேலும், பரிமேலழகர் "திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து"(குறள்.157) என்னும், குறளில் 'நோநொந்து' என்பதற்கு, "எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று பரிவதூஉம் சான்றோர் கடன்" (நாலடி.48) என்னும் பாடலின் கருத்தினைப் புகுத்துகிறார்.

மேற்கண்ட சான்றுகளின் வழியே பழைய உரையாசிரியர்களான காலிங்கர், பரிதியார், பரிமேலழகர் போன்றோர் தம் உரைகளில் பிற இலக்கியக் கருத்துகளைப் புகுத்தியுள்ளதை இனங்காண முடிகின்றது.

1.2.4 கதையைப் பொருத்தல்

திருக்குறள் உரையாசிரியர்கள் திருக்குறளை விளக்குவதற்குச் சில புராணக்கதைகளை மேற்கோள்காட்டியுள்ளனர். பழைய உரையாசிரியர்களுள் மணக்குடவர், பரிதியார், பரிமேலழகர் போன்றோர் தம் உரைகளில் கதைகளைப் பொருத்தி விளக்குகின்ற முயற்சியைக் காணமுடிகின்றது.

மணக்குடவர் "குணம் என்னும் குன்றேறி நின்றார்"(குறள்.29) என்பதற்கு,

> "குணமாகிய மலையை மேற்கொண்டு நின்றார் மாட்டு
> உளதாகிய வெகுளியால் வரும் தீமையைச் சிறிது பொழுதாயினும்
> வாராமல் காத்தல் அரிது. நகுலன் பெரும் பாம்பாயி
> னான். இது வெகுளி பொறுத்தல் அரிது என்றது"(192,ப.33)

என்கிறார். இவர் தம் உரையில் சினத்தைப் பற்றிய சிந்தனைக்கு நகுலன் கதையினைக் குறிப்பிட்டுச் செல்வதைக் காணமுடிகிறது.

இதே நோக்கில் காலிங்கரும் "ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்" (குறள். 5) என்பதற்கு,

"மற்றது என் சொல்லியவாறோ எனின், ஈண்டுத் தன் பதம் கருதித்தவம் செய்யும் நீத்தார் மாட்டுத் திலோத்தமை முதலிய தெய்வ மகளிரை விடுத்து, மற்று அத்தவம் அழித்து, தவம் அழியாமை நிலை நிற்கையாலும், தனது பதம் விரும்பாமையாலும் தானே சான்றாய் அமையும்" (192, ப.29)

என்கிறார். இவர் திலோத்தமை முதலிய தெய்வ மகளிரைக் குறிப்பிடும் புராண இலக்கியக்கதைச் சான்றுகளைத் தம் உரையில் குறிப்பிடுகிறார்.

பரிமேலழகர், "கவறும் கழகமும் கையும் தருக்கி" (குறள். 935) என்னும் குறளுக்குச் சூதினால் நாடிழந்த பாண்டவர் கதையினைச் சான்றாகக் கூறுகிறார்.

புதிய உரையாசிரியருள் மு. கோவிந்தசாமி(1962) "திருக்குறள் நயவுரையில்; "ஒருமை மகளிரே போல" (குறள். 974) - என்பதற்கு, "கண்ணகியை, ஆதிரையை நினைத்துக் கூறியதாகலாம் இது" என சிலப்பதிகார, மணிமேகலைக் காப்பியக் கதைகளை மேற்கோள் காட்டுகிறார்.

### 1.2.5 கொள்கை முனைப்பு

உரையாசிரியர்கள் திருக்குறளை உள்ளத்தே வைத்துத் திருக்குறள் உரை எழுதினாலும், தம் உள்ளத்தில் ஆழமாக அமைந்துள்ள சார்பினை இணைத்தும் கூறியுள்ளனர். இவற்றை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்.

1. சமயச்சார்பு, 2. வடமொழிச் சார்பு, 3. வடமொழிச் சார்பை மறுத்தல், 4. சமன்மைப் பொருளியச் சமூகச் சிந்தனைச் சார்பு.

### 1.2.5.1 சமயச் சார்பு

திருக்குறளுக்கு உரை எழுதிய ஆசிரியர்கள் தம் உரையில் தமக்குத் தெரிந்த சமயக் கருத்துகளுடைய இலக்கியங்களைச் சான்று தருகின்றனர். சில உரையாசிரியர்களின் உரைகள் சிலவற்றுள் சமயச் சார்பு காணப்படுகிறது.

#### 1.2.5.1.1 வைணவச் சார்பு

பரிமேலழகர் தம் உரையில் பல இடங்களில் வைதீகச் சார்புள்ள இலக்கியங்களை மேற்கோள்காட்டுகிறார். மேலும், இவர் பெயரை வைத்துக்கொண்டு வைணவ சமயத்தினர் எனக் கூறுவோரும் உண்டு.

இறைமாட்சி அதிகாரத்தின் தோற்றுவாயில், "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்று பெரியாரும் பணித்தார்" என்று நம்மாழ்வாரின் பாடலை (4, 4.8) மேற்கோளாகக் காட்டுகிறார்.

'பற்றற்ற கண்ணே' (குறள். 349) என்னும் குறளின் உரையில் திருவாய் மொழியை (1, 2, 5) மேற்கோள்களாகக் காட்டியுள்ளார்.

'அவா நீப்பின் அந்நிலையே பேரா இயற்கை தரும்' (குறள். 370) என்பதற்குத் திருவாய்மொழிப் பாடலான 'நன்றாய் ஞானம் கடந்து போய்' ( 8. 8. 6) என்னும் பாடல் முழுவதையும் எடுத்துக்காட்டாகத்

தருகின்றார். மேற்கண்ட சான்றுகளின் வழியே பரிமேலழகர் வைணவச் சார்புடன் திருக்குறள் உரை எழுதியுள்ளதைக் காணமுடிகிறது.

### 1.2.5.1.2 சைவச் சார்பு

பரிதியார் தம் உரை விளக்கங்களில் சைவச் சிந்தனைகளை மேற்கோள் காட்டுகிறார். இவர் சைவசித்தாந்தத்தில் ஊன்றிய பற்றுடையவர் என்பதை 'நற்றாள்' (குறள்.2) என்பதற்குச் 'சிவன்ஸ்ரீ பாதத்தை' எனப் பொருள் எழுதுவதால் அறியலாம். மேலும், கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் 'இருள்சேர் இருவினையும்' (குறள்.5) என்பதற்கு "மும்மல வித்தாகிய பாவமானது சிவ கீர்த்தி பாராட்டுவானிடத்தில் இல்லை" (192, ப.9) என்கிறார்.

### 1.2.5.2 வட மொழிச் சார்பு

திருக்குறளுக்கு உரை எழுதிய பழைய உரையாசிரியர்கள் தம் உரைகளில் வடநூல் கருத்துகளை ஒப்பிட்டுக் கூறியுள்ளனர்.

திருக்குறள் உரையாசிரியருள் ஒருவரான பரிதியார் கல்வி அதிகார முன்னடையில்,

> "கல்வியானது அரசற்கு மனு சாஸ்திரம், மந்திர
> சாஸ்திரம் தொண்ணூற்றுஎட்டு ஆயுதக் கல்வி வேணும்"
> (192, ப.271)

என்கிறார். இவர் மனுசாத்திரத்தைக் கூறுவதைப் பார்க்கும் பொழுது திருக்குறளை வடமொழிச்சார்பாகக் கருதிய நோக்கினை அறியலாம்.

அடுத்து, பரிப்பெருமாளும் காமத்துப்பாலின் முன்னுரையில் 'வாற்சனீயம்' என்னும் காமதந்திரத்தைக் கூறுவர். மேலும், அரசன் தான் காதலித்துள்ள பொருள்களைப் பிறர் அறியுமாறு செலுத்திக் கெட்டமைக்கு (குறள். 440) வந்தராயனையும், தெரிந்து தெளிதலின் (குறள். 582) சுக்கிரர் மதத்தையும், துரோணாச்சாரியார் மதத்தையும் (குறள். 503), கௌடில்யர் மதத்தையும் (குறள். 504), மயோச்சுரர் மதத்தையும் (குறள். 506), வியாதர் மதத்தையும், உத்தவாச்சார்யா மதத்தையும் (குறள். 510) எடுத்துக் கூறுவதால் இவர்தம் வடமொழிச்சார்பை அறியமுடிகிறது.

தொடர்ந்து, காளிங்கர் "நிறைமொழி மாந்தர்" (குறள். 28) என்பதற்கு,

> "ஐம்புலன்களையும் அடக்கி, இனியொரு கல்வி கேள்வியும் விரும்புதலின்றி, முத்தி இன்பத்தை முழுதுணர்ந்து அமைந்த நீத்தோரது பெருமையை இவ்வுலகத்து வேதங்களும் மற்றுமுள்ள நூல்களுமாகிய இவை எல்லாம் எடுத்துக்காட்டிய மொழிகளே கூறும்" (192, ப.33)

என்று வடநூல்களைத் திருக்குறளுடன் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

திருக்குறள் உரைகளுள் மிகச் சிறந்த உரை பரிமேலழகர் உரையாக இருப்பினும், வடநூற் சார்பு பெருமளவு உள்ளது. குறிப்பாக, திருக்குறள் அறத்துப்பால் முன்னுரையில்,

> "அறமானது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும். அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய

வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளில் நின்று அவ்வவ்வறத்திற்கு ஒதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல்... தண்டமாவது அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்தற்பொருட்டு "ஒப்பநாடி அதற்குத் தக ஒறுத்தல்"(புறம்.10:3-4)"

(192, ப.10)

என்று பரிமேலழகர் குறிப்பிடுகிறார். இவர் அறம் என்பதற்கு வடநூற்கருத்துகள் மூன்றைக் கூறி, மூன்றில் ஒன்றாகிய தண்டம் பற்றிக் கூறப் புறநானூற்றுப் பாடலை ஒப்பிடுகின்றார். இதனால், இவர் வடநூல்மீது கொண்டுள்ள மதிப்பு வெளிப்பட்டு நிற்பதை அறியமுடிகின்றது.

### 1.2.5.3 வடமொழிச் சார்பை மறுத்தல்

உரைகளுள் சிறந்த உரையாகிய பரிமேலழகர் உரையைப் பெருமளவு பாராட்டினாலும், சில குறள்களுக்கான பொருள்களில் வடநூற் கருத்துகள் முழுவதும் ஆதிக்கம் செலுத்துகிறது என்று குறிப்பிட்டுப் பல உரையாசிரியர்கள் தம் உரைகளில் அக்கருத்துக்களை மறுத்துள்ளனர். அவர்களுள், பிற இலக்கியத்தை ஒப்பிட்டு மறுத்தவர்களுள் புலவர் குழந்தை(1952), ஞா. தேவநேயன்(1969), கு.ச. ஆனந்தன் (1986), இரா. நெடுஞ்செழியன்(1991) போன்றவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள்.

1952-இல் புலவர் குழந்தை "திருக்குறளும் பரிமேலழகரும்" என்னும் நூலில்,

"மனு முதலிய ஆரிய நூல்களில் கூறும் அறங்களே திருக்குறளில் கூறும் அறங்கள் என்பது முழுப்பொய் என்பதை அறிதற்குத் திருக்குறளுக்கும் மனுவுக்குமுள்ள வேற்றுமையைப் பாருங்கள்.

> திருக்குறள் தமிழர் அறங்கூறு நூல்; மனு ஆரியர் அறங்கூறு நூல் என்பதை மட்டும் மறவாமல் மனதில் வையுங்கள்", (பப.52-58)

என்கிறார். இவர் பரிமேலழகர் கருத்துகள் பலவற்றை மறுத்துள்ளார். அவற்றுள் ஒன்று, "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" (குறள்.972). இதற்குப் பரிமேலழகர்,

> "வினைவயத்தால் பஞ்ச பூத பரிணாமமாகிய யாக்கையைப் பொருந்தி நின்று அதன் பயன் அனுபவித்தல் எல்லா வருணத்தார்க்கும், ஒத்தலின் பிறப்பொக்கும் என்றும், பெருமை சிறுமைகட்குக் கட்டளைக் கல்லாகிய தொழிற் பாகுபாடுகள் வருணந்தோறும் யாக்கை தோறும் வேறுபடுதலின் சிறப்பு ஒவ்வா என்றும் கூறினார்" (192, ப.588)

என்கிறார். இதனைப் புலவர் குழந்தை "பிராமணன் முதல் வருணத்தான் ஆனதாலும் பிரம்மாவின் முகமாகிய உயர்ந்த இடத்தில் பிறந்ததினாலும் எல்லா வருணத்தாருடைய பொருள்களையும் தானம் வாங்கத் தலைவனாகின்றான்" (மனு.அத்.1, சு.60) என்னும் மனுவின் கருத்துடன் ஒப்பிட்டுத் திருக்குறளுடன் முரண்படுகிறது என்று கூறுகிறார்.

தொடர்ந்து 1967-இல் ஞா. தேவநேயன் "திருக்குறள் தமிழ் மரபுரை" என்னும் நூலில்,

> "பரிமேலழகர் உரையே தலைசிறந்ததென்பதும், ஏனை உரையாசிரியர்கள் காணமுடியாத உண்மைப் பொருளைப் பரிமேலழகர் நுண்மையாக நோக்கிக் கண்டுள்ளார் என்பதும் உண்மையே. சில குறள்கட்கு முழுத் தவறாகவும், சில குறள்கட்கு அரைத் தவறாகவும் பொருள் கூறியுள்ளார்."
> (144, ப.1)

என்கிறார். இவர்,

"அறனிழுக்கா தல்லவை நீக்கி" (குறள். 384)

என்பதற்குப் பரிமேலழகர் கூறும் ஓதல், படைக்கலம் பயிறல் என்பவை அரசன் கடமைகளே அன்றி அறமாகா என்கிறார். இதனை மறுத்து,

"அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" (புறம். 55)

என்பதையும்,

"ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ" (பெரிய. 4:36)

என்பதையும் கூறித் தமிழ் மரபையே திருவள்ளுவர் கூறியுள்ளார் என்கிறார்.

தொடர்ந்து, 1991-இல் இரா. நெடுஞ்செழியன் "திருக்குறள் தெளிவுரை" என்னும் நூலில், மனுவைத் திருக்குறளுடன் ஒப்பிட்ட பரிமேலழகரின் கருத்துகளை மறுக்கிறார். இவர்,

> "மனுவின்படி மனிதகுலம் நான்கு வருணத்தாராகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு வருணத்திற்கும், ஒவ்வொரு வகையான சட்ட விதியின்கீழ் நீதிகூறும் தன்மையதே 'தருமம்' ஆகும். ஆனால், வள்ளுவரின் கருத்துப்படி, மனிதகுலம் அனைத்திற்கும் அன்புநெறி, அருள்நெறி, அறிவு நெறி, பண்பு நெறி, ஒழுக்க நெறி போன்றவற்றின் கீழ் விதிக்கப்பட்ட கடமையைக் கூறும் தன்மையதே அறம் ஆகும்" (152, ப.14)

என்கிறார். மேலும் வள்ளுவர் நெறிக்கும், தமிழர் பண்பாட்டிற்கும், உலகியல் நடைமுறைக்கும், பகுத்து அறியும் ஆராய்ச்சி அறிவுக்கும் ஏற்றமுறையில், உண்மைப்பொருள் விளக்கம் காணும்பொருட்டு, மேற்கொண்டுள்ள முயற்சிதான் தம் திருக்குறள் தெளிவுரை என்று இரா. நெடுஞ்செழியன் குறிப்பிடுகிறார்.

"பிறப்பு ஒக்கும்" (குறள். 972) என்னும் குறளுக்குப் பரிமேலழகர் தரும் விளக்கத்தை ஞா. தேவநேயன் போன்று மறுக்கிறார். மேலும், ஊழ் பற்றிய பழவினை-விதிக் கொள்கையினை மறுத்துத் தமிழ் மரபு வேறு என்கிறார். குறள்கள் 371, 372, 380, 620 என்பவற்றிற்கு உரையாசிரியர்கள் பழவினை, விதி என்ற முறையில் கையாண்டுள்ளனர் என்று கூறும் இவர்,

"ஊழின் உருப்ப" (புறம். 237)

"ஊழ்மலர் ஒழிமுக" (மலைபடு. 130)

என்ற சங்க இலக்கியச் சான்றுகளைக் கூறி, ஊழ் என்பதை முறைமை என்ற பொருளிலேயே வள்ளுவர் கூறியிருக்கிறார் என்கிறார்.

(152, பக். 29-30)

1.2.5.4 சமன்மைப் பொருளியச் சமூகச் சிந்தனைச் சார்பு

திருக்குறள் உரைகள் எழுதிய ஆசிரியர்கள் பல கண்ணோட்டங்களில் திருக்குறள் உரைகளை எழுதும்போது பிற இலக்கியங்களைத் தம் உரையில் ஒப்பிட்டுள்ளனர். குறிப்பாக 1986-இல் கு. ச. ஆனந்தன் "திருக்குறளின் உண்மைப் பொருள்" என்னும் நூலில்,

"வாழ்க்கைக் குறிக்கோள்களையும், சமனிய நடைமுறைகளையும் இணைத்து உருவாக்கி, வளர்த்து இன்கலவை செய்து, முற்றிலும் புதிய மாற்றீட்டுக் கோட்பாடுகளைத் தரும் ஒரு "சமுதாயப் புரட்சி நூல்" (21, ப. 9)

என்கிறார். இவர்,

"பழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின்" (குறள். 44)

என்னும் குறளை,

"இனியவை பெறினே தனித்தனி நுகர்கேம்" (பதிற். 38:13)

"தமதுபகுத் துண்ணுந் தன்னிழல் வாழ்நர்" (புறம். 46:34)

என்னும் சங்க இலக்கியப் பாக்களுடன் ஒப்பிட்டுத் திருக்குறள் சமனியச் சமூகச் சிந்தனை உடையது என்கிறார். மேலும், பொருளியல் சமத்துவத்தைக் கொண்ட ஒரு சிறந்த சமுதாயத்திற்குத் தேவையான சில அடிப்படைப் பொருளியல் நெறிமுறைகளைத் திருக்குறளில் வகுத்தளிக்கிறார் என்று கு.ச. ஆனந்தன் குறிப்பிடுகிறார்.

## 1.3 பிற இலக்கிய உரையாசிரியர்களும் – திருக்குறளும்

திருக்குறளுக்கு உரை எழுதியதைப் போன்று தமிழிலுள்ள பிற இலக்கியங்கள் பலவற்றிற்கும், பல்வேறு உரையாசிரியர்களால் பல உரைகள் எழுதப்பட்டுள்ளன. பழைய இலக்கிய உரையாசிரியர்கள் தங்கள் உரை விளக்கத்திற்குத் திருக்குறளை மேற்கோள்காட்டியுள்ளதைப் பற்றியும் ஆய்வுகள் வந்துள்ளன. இவ்வாறான ஆய்வுகளை 1975-களுக்குப் பிறகே மேற்கொண்டுள்ளனர்.

1975-இல் மு. கோவிந்தசாமி "திருக்குறளும் பிற உரையாசிரியர்களும்" என்னும் நூலில்,

"பழைய இலக்கிய உரைகாரர்களும், வியாக்கியான உரைகாரர்களும் பல சொற்களுக்கும், தொடர்களுக்கும் தம் உரையில் விளக்கம் தருகின்றனர். அவ்விளக்கங்களை அப்படியே அத்தகைய சொற்களுக்கும், தொடர்களுக்கும் கூட்டிப் பொருள் கொண்டால், குறட்பாக்கள் எவ்வளவோ தெளிவும் ஒளியும் பெறுகின்றன. எனவே இப்பகுதி

குறள் ஆராய்ச்சியில் ஒரு திருப்பு முனையாக நிற்கின்றது" (67, ப.9)

என்கிறார். இவர், பிற இலக்கிய உரைகளில் திருக்குறளை மேற்கோளாகக் காட்டியுள்ள பட்டியல் பின்வருமாறு :-

| | இலக்கியங்களின் பெயர்கள் | குறள் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | திருவாய்மொழி வியாக்கியான உரை | 110 |
| 2. | திருப்பாவை வியாக்கியான உரை | 17 |
| 3. | பத்துப் பாட்டு நூல்களின் உரைகளுள் | 73 |
| 4. | கலித்தொகை (12), பரிபாடல் (17), பதிற்றுப்பத்து (8), புறநானூறு (16) ஆகிய நூல்களின் உரைகளில் | 53 |
| 5. | சிலப்பதிகார உரை | 31 |
| 6. | சீவகசிந்தாமணி உரை | 21 |
| 7. | நீலகேசி உரை | 3 |
| | மொத்த மேற்கோள்கள் | 308 |

மு. கோவிந்தசாமி பிற இலக்கிய உரைகளுள் திருக்குறள் இலக்கிய நோக்கில் 308 இடங்களில் மேற்கோளாக எடுத்தாளப் பட்டுள்ளன என்று குறிப்பிட்டுள்ளார். அவற்றுள் ஒரு எ.கா.

"பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" (குறள்.5)

என்னும் குறளினை,

"புகழ்ந்து – எங்களைத் தோற்பித்த குணங்களைச் சொல்லி... விளக்கம்; குணத்தால் வருவதே புகழ் என்பது" (67, ப. 256)

என்று திருப்பாவை வியாக்கியான உரையில் திருக்குறளினை மேற்கோள் காட்டியுள்ளார்.

1.00. முடிவுரை

1. திருக்குறளுக்கு எழுந்த உரைகளுள் பரிமேலழகர் உரையில் மிகுதியான மேற்கோள்கள் பிற இலக்கியங்களிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளன.

2. பழைய உரையாசிரியர்கள் பெரிதும் பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்தும், ஓரளவு இடைக்கால இலக்கியங்களிலிருந்தும் மேற்கோள் காட்டியுள்ளனர். கி.வா. ஜகந்நாதன், தண்டபாணி தேசிகர், தி. மாணிக்கவாசகம் போன்ற உரையாசிரியர்கள் – பதிப்பாசிரியர்கள் இக்கால இலக்கியங்களிலிருந்தும் சான்றுகள் ஓரளவுக் காட்டியுள்ளனர்.

3. திருக்குறளுக்கு உரை எழுதிய கு.ச. ஆனந்தன், இரா. சாரங்கபாணி, இரா. நெடுஞ்செழியன் போன்றோர் 1980-களில் திருக்குறளின் சமகால இலக்கிய மரபுகளுடன் ஒப்பிட்டுள்ளனர்.

4. பழைய உரையாசிரியர்களான காலிங்கர், பரிதி, பரிமேலழகர் போன்றோர் தம் உரைகளில் சில இடங்களில் பிற இலக்கியக் கருத்துகளை இணைக்கும் நோக்கைக் காணமுடிகிறது.

5. திருக்குறள் உரையில் காப்பிய, புராண இலக்கியக் கதைகளைக் கூறி விளக்குவதை மணக்குடவர், காலிங்கர், பரிமேலழகர் போன்றோர் மேற்கொண்டுள்ளனர்.

6. சமயச் சார்பு நோக்கில் பரிமேலழகர், பரிதியார் போன்றோர் திருக்குறள் உரை எழுதும்போது பிற இலக்கியங்களைத் திருக்குறளில் ஒப்பிட்டுள்ளனர்.

7. வடமொழிச் சார்பு நோக்கில் பரிமேலழகர், பரிதியார், காலிங்கர் போன்றோர் தம் உரைகளில் பிற இலக்கியங்களை மேற்கோள் காட்டுகின்றனர்.

8. வடமொழிச் சார்பை மறுத்துத் தமிழ் இலக்கிய மரபு நிலையில் – பகுத்தறிவுச் சிந்தனையில் புலவர் குழந்தை, தேவநேயன், இரா. நெடுஞ்செழியன் போன்ற உரையாசிரியர்கள் 1950–களுக்குப் பிறகு திருக்குறள் ஒப்பீட்டாய்வை மேற்கொண்டுள்ளனர்.

9. சமன்மைப் பொருளியச் சமூகச் சிந்தனைச் சார்பு நோக்கில் 1986-இல் கு.ச. ஆனந்தன் திருக்குறள் உரையில் பிற இலக்கியங்களை மேற்கோள்காட்டுகிறார்.

10. பிற இலக்கிய உரையாசிரியர்களின் உரைகளுள் திருக்குறள் மேற்கோள்கள் காணப்படுவதை 1975-இல் மு. கோவிந்தசாமி தொகுக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார்.

***

## 2.0 கால ஆய்வு விளக்கம்

பைந்தமிழ் இலக்கியங்களில் தொன்மை வாய்ந்ததும், சிறப்புடையதுமான திருக்குறள் பற்றி எழுந்த ஆராய்ச்சி நூல்கள் பலவாகும். இவ்வாராய்ச்சியின் தொடக்க ஆய்வுகள் பெரும்பான்மையும் திருக்குறளின் சிறப்பினையும், பெருமையினையும் திருவள்ளுவரின் பிறப்பினையும் வெளிப்படுத்தியனவே தவிர, திருவள்ளுவரைப் பற்றியோ திருக்குறள் காலத்தைப் பற்றியோ தெளிவாக ஆராய்ந்து வெளிப்படுத்தவில்லை.

இருபதாம் நூற்றாண்டிற்குப் பின்னரே திருவள்ளுவரின் காலம் பற்றிய வரையறுத்த ஆராய்ச்சிகள் வெளிவரத் தொடங்கின.

திருக்குறள் ஆராய்ச்சி வரலாற்றில், திருக்குறளின் காலத்தைக் காணப் பிற இலக்கியங்களைத் திருக்குறளோடு ஒப்பிட்டவற்றை இவ்வியலில் விரிவாகக் காணலாம்.

## 2.1 சமயமும் திருக்குறள் காலமும்

திருக்குறளின் காலத்தைக் கண்டறிய சமயச் சார்புள்ள இலக்கியங்களைத் திருக்குறளுடன் ஒப்பிட்டுள்ளனர்.

### 2.1.1 சமணம்

வடநாட்டிலிருந்து தென்னிந்தியாவிற்கு வந்த சமணர்கள் தமிழ் கற்றுத் தமிழில் தம் கொள்கைகளைப் பரப்பினார்கள். இக்கொள்கைகள் தமிழ் அறிஞர்களின் இலக்கியங்களிலும் காணப்பட்டன. இதனை மையமிட்டு

1953-இல் சி.எம். இராமச்சந்திரன் "திருவள்ளுவர் காலம்" என்னும் கட்டுரையில், 'திருக்குறளில் சமணக் கருத்துகள் காணப்படுகின்றன' என்கிறார். மேலும், புத்தர் கொள்கைகளைத் திருவள்ளுவர் கண்டிக்கிறார் என்றும் அவர் கூறுகின்றார். இதற்கு அவர்,

"கறுத்தின்னா செய்தவக் கண்ணும்" (குறள். 312)

என்னும் திருக்குறள் கருத்தில்,

"சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமக்கொழிய நீந்து" (நாலடி. 30:3-4)

என்னும் நாலடிப் பாடலின் சமணக் கருத்து உள்ளதை ஒப்பிடுகிறார். நிறைவாக,

"மௌரியர் காலத்திற்குப் பின் தென்னாட்டில் சமண முனிவர்கள் குடியேறித் தமிழ் கற்றுத் தம்முடைய சமய நூல்களைத் தமிழில் ஆக்கிய பின்னர், கிறித்துமதம் ஏற்படுவதற்கு முன்னர், திருவள்ளுவர் திருக்குறளைச் செய்திருக்க வேண்டும். அதாவது கி.மு. 2 (அ) 3-ஆம் நூற்றாண்டைத் திருக்குறளின் காலமாகக் கொள்ளலாம்" (32, ப.321)

என்கிறார்.

இதேயாண்டில், அ. சக்கரவர்த்தி 'திருக்குறள்' என்னும் நூலில்,

"திருவள்ளுவர் சமண மதக் கருத்துகளைக் கற்றுத் தம் நூலில் கூறியுள்ளார். எனவே, இவர் காலம் கி.மு. முதலாம் நூற்றாண்டு" (73, ப.11)

என்கிறார்.

திருக்குறளைச் சமண மதக் கருத்துகளுடன் சி. எம். இராமச்சந்திரனும், அ. சக்கரவர்த்தியாரும் ஒப்பிட்டுள்ளவற்றில் கருத்து ஒற்றுமை இருப்பினும், கால எல்லையில் மாறுபட்டுக் கூறுவதைக் காணமுடிகிறது. திருக்குறளுக்கும் சமண மதக் கருத்துகளுக்கும் சில ஒப்புமைக் கருத்துகள் இருப்பினும், முரணான கருத்துகளும் உள்ளன. எனவே, இவ்வாய்வுகள் மேலும் சிந்திக்கத் தக்கனவாகும்.

## 2.1.2 பௌத்தம்

திருக்குறள் கருத்துகளை மணிமேகலைக் காப்பியம் பெருமளவு எடுத்தாண்டுள்ளது. மணிமேகலை பௌத்த மதச் சார்புடையது. எனவே, பௌத்த மதக்கருத்துகளைத் திருக்குறளுடன் ஒப்பிட்டுத் திருக்குறளின் காலத்தைக் காண முயற்சி செய்துள்ளனர்.

1954-இல் மா. இராசமாணிக்கனார் "திருவள்ளுவர் காலம்" என்னும் நூலில், திருவள்ளுவரின் காலம் கி.பி. 1 முதல் 300-க்கு உட்பட்டது என்கிறார். மேலும்,

> "மணிமேகலை 29-ஆம் காதையிலும், பிற காதையிலும் குறிக்கப்பட்டுள்ள பௌத்த சமயக் கொள்கைகள் கி.பி. 200-250 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த நாகார்ச்சுனரால் உண்டாக்கப்பட்ட பௌத்தமதக் கொள்கைகள் அல்ல. அவை உரிமையான பௌத்த மதக் கொள்கைகள். எனவே, நாகார்ச்சுனர் கொள்கைகள் தமிழகத்தில் பரவும் முன்காலத்தது மணிமேகலை எனலாம்" (25, பப. 1-21)

என்கிறார். இவ்வாய்வு சற்றுப் புதிய கண்ணோட்டத்தில் மேற்கொள்ளப் பட்டுள்ளது.

## 2.2 சங்கப் புலவர்களும் - திருக்குறள் காலமும்

திருவள்ளுவரின் காலத்தைக் கண்டறிய முனைந்த அறிஞர்கள் பலரும் பெரிதும் சங்கப் புலவர்களின் காலத்தையும்-பாடல்களையும் தொடர்பு படுத்தியுள்ளனர்.

### 2.2.1 ஔவையார்

சங்ககாலப் பெண்பாற் புலவர்களுள் ஒருவர் ஔவையார். இவரையும், திருவள்ளுவரையும் ஒப்பிட்டுத் திருவள்ளுவரின் காலத்தைக் கண்டறிய சில அறிஞர்கள் முற்பட்டுள்ளனர்.

1956-இல் வெ.சு. சுப்பிரமணியனார் "திருக்குறளும் காலமும்" என்னும் நூலில்,

> "ஔவையார் பாடல்களில் குறளின் கருத்துகள்
> இருப்பதால் ஔவையார் காலத்துக்கு முன்னரே
> குறளின் கருத்து மக்களிடைப் பரவி அரங்கேற்றமாகி
> இருக்க வேண்டும்" (109, ப.12)

என்கிறார். மேலும்,

> "குழலினிது யாழினிது என்ப" (குறள். 66)

என்ற திருக்குறள் அடியை,

> 'யாழொடும் கொள்ளா பொழுதொடும் புணரா' (புறம்.92)

என்று ஔவையார் எடுத்தாளுகிறார் என்று சான்று தருகிறார்.

இவருக்குப் பின் 1989-இல் பே.க. வேலாயுதம் "திருவள்ளுவர் காலம்" என்னும் கட்டுரையில், ஔவையாரும் திருவள்ளுவரும் சமகாலத்தவர் என்கிறார்.

"சிறியகள் பெறினே எமக்கீயும் மன்னே" (புறம். 235:1)

என்ற பாடலுக்கு முரணாகத் திருவள்ளுவர் 'கள்குடியாமை' வலியுறுத்துகிறார். எனவே, சமுதாயத்திற்கு வழிகாட்ட வள்ளுவர், ஔவையார் காலத்திலே தோன்றியிருக்க வேண்டும் என்கிறார். நிறைவாக,

> "ஔவை அதியனிடம் பரிசில் நீட்டிக்கவே சினந்து சென்றார். அமைதியை விரும்பிய அதியமானைப் போருக்கெழத் தூண்டினார் (புறம். 90). அசோகரின் கல்வெட்டான சம்பைக் கல்வெட்டுக் கொண்டு கணித்ததில் கி.மு.259-இல் அதியமான் இறந்தான். திருக்குறள் ஏறக்குறைய கி.மு.235 அளவில் அரங்கேறியிருக்க வேண்டும். இதுவே ஔவையார் காலத்திற்கும், ஏலேல சிங்கன் ஆட்சிக் காலத்திற்கும் ஒத்து வருகிறது" (188, ப.847)

என்கிறார்.

## 2.2.2 கபிலர்

கபிலர் சங்கப் பாடல்கள் பல இயற்றியவர். இவர்தம் பாடல்கள் திருக்குறளை எடுத்தாளுகின்றன எனச் சிலர் ஒப்புமைகளைக் காட்டி ஆய்வு மேற்கொண்டுள்ளனர்.

1956-இல் வெ.சு. சுப்பிரமணியனார் "திருக்குறளும் காலமும்" என்னும் நூலில்,

> "திருக்குறள் ஒரு நீதி நூல். அந்நூல் அனைவரும் கற்று மனதில் வைத்தற்கு இடமுண்டு. கபிலருடைய பாடல்கள் அகமும் புறமும் பற்றிய தனிச்செய்யுட்கள். படித்தாலும் அவற்றை மனத்தே வைத்தற்கு நியாயமில்லை. எனவே, குறளையே கபிலர் எடுத்தாண்டுள்ளார்" (109, ப.13)

என்கிறார். மேலும், கபிலர் காலம் கி.மு. 505 என்று கொண்டு திருவள்ளுவர் காலத்தைக் கி.மு. 500-க்கு முற்பட்டது என்கிறார்.

2.2.3 அம்மூவனார்

சங்க இலக்கியப் புலவர்களுள் ஒருவரான அம்மூவனாரைத் திருவள்ளுவருடன் ஒப்புமைப்படுத்தி ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1989-இல் பே.க. வேலாயுதம் "திருவள்ளுவரின் காலம்" என்னும் கட்டுரையில் "அம்மூவனார் பாடல்களில் தலைவன் தான் விரும்பிய பரத்தையுடன் காவிரி நீற்றில் தழுவி ஆடுகின்றான். பரத்தைகளை இன்பத் துணையாக அம்மூவனார் காட்டுகிறார். ஆனால், வள்ளுவரோ, கள்குடியாமை, பரத்தமை எதிர்ப்பு போன்றவைகளைத் தன் குறட்பாக்களின் வழியாகக் கூறியுள்ளார்" என்கிறார். நிறைவாக,

> "இவ்வாறு எதிர் எதிரான கருத்துகளைக் கொண்டு சமுதாயத்திற்கு வழிகாட்ட இந்தக் காலத்தில்தான் வள்ளுவர் தோன்றித் திருக்குறளை எழுதினார். திருக்குறள் ஏறக்குறைய கி.மு.235-இல் அரங்கேறியிருக்க வேண்டும். இதுவே ஔவையார்

காலத்திற்கும், ஏலேல சிங்கன் ஆட்சிக் காலத்திற்கும்
ஒத்து வருகின்றது" (186, ப.848)

என்கிறார். முரண்பட்ட கருத்துகளைக் கொண்டு திருக்குறளின் காலத்தைக் கூறுவது சிறந்த ஆய்வு நோக்கு. ஆனால், வள்ளுவரின் காலத்தை நிறுவியதில் தெளிவு கிடையாது.

## 2.2.4 காக்கைப்பாடினியார்

காக்கைப்பாடினியார் சங்ககாலப் பெண்பாற் புலவர்களுள் ஒருவர். இவர் பாடலையும், திருக்குறளையும் ஒப்பிட்டுத் திருக்குறள் தொடர்பான கால ஆய்வுகள் வந்துள்ளன.

1953-இல் சி.எம். இராமச்சந்திரன் "திருவள்ளுவர் காலம்" என்னும் கட்டுரையில்,

"காக்கைப்பாடினியார் காலம் கி.மு. முதல் நூற்றாண்டு.
வள்ளுவர் காலமும் இதுவே" (32, ப.98)

என்கிறார். காக்கைப்பாடினியாரின்,

"ஈன்ற ஞான்றினும்" (புறம். 277:4)

என்னும் பாடல்,

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்" (குறள்.69)

என்ற குறட்பாவை எடுத்தாளுகிறது என்று சி.எம். இராமச்சந்திரன் சான்று காட்டுகிறார்.

இருவரும் சமகாலத்தவரா என்பது ஆய்வுக்குரியது, மேலும், பாடல்களின் கருத்தொற்றுமையைக் கொண்டு திருக்குறளின் காலத்தை உறுதியாகக் கூறமுடியாது.

## 2.2.5 நக்கீரர்

நக்கீரர் என்னும் சங்ககாலப் புலவருடன் திருக்குறளை ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1956-இல் வெ.சு. சுப்பிரமணியன் "திருக்குறளும் காலமும்" என்னும் நூலில்,

> "சாராயத்தைக் கிரேக்கர்கள் என்ற யவனர்கள் தமிழகத்திற்குக் கொண்டுவந்தார்கள் என்ற கிரேக்க நாட்டுக்கதைகள் உண்டு. இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறன் என்ற பாண்டியனை, மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர் புறம்.56-இல் பாடும்பொழுது, "நன்கலந்தந்த தண்கமழ்( ) தேறல்" என்ற தொடரால் தமிழகத்திற்குத் தேறலைக் கிரேக்கர்கள் கொண்டு வந்து உதவினார்கள் என்பது புலப்படுகிறது" (109, ப.13)

என்கிறார். திருக்குறளும் "உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம் போல்" (குறள்.1090) என்று தேறலைக் குறிப்பிடுகிறது. உரையாசிரியர்கள் 'அடுநறா' என்பதைக் காய்ச்சப்பட்ட சாராயம் என்கின்றனர். இக் கருத்தைக் கொண்டு நக்கீரர் கூறும் தேறலுடன் வெ.சு. சுப்பிரமணியன் ஒப்பிடுகிறார். இறுதியாக வள்ளுவர் நக்கீரர்க்கு முற்பட்டவர் என்றும், அவர் காலம் கி.மு.500 எனவும் கூறுகிறார்.

2.2.6 ஆலத்தூர் கிழார்

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான புறநானூற்றில் 34-ஆம் பாடலை ஆலத்தூர் கிழார் பாடியுள்ளார். "செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென" (புறம்.34:6) என்ற இப்பாடலடியுடன் "எந்நன்றி கொன்றார்க்கும்" (குறள்.110) என்னும் திருக்குறளை ஒப்பிட்டுத் திருக்குறளின் கால ஆய்வைச் சில அறிஞர்கள் மேற்கொண்டுள்ளனர்.

2.2.6.1 அறம் திருக்குறளே

புறநானூற்றுப் பாடலில் இடம் பெறும் அறம், திருக்குறளையே கூறுகின்றது என்றும், புறநானூறு திருக்குறளுக்குப் பிற்பட்டது என்றும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. மேற்கண்ட, ஒத்தக் கருத்திலேயே பின்வரும் அறிஞர்கள் கூறினாலும், காலம் நிறுவுவதில் வேறுபடுகின்றனர்.

2.2.6.2 கி.மு. நோக்கில்

1. சி,எம். இராமச்சந்திரன் (திருவள்ளுவர் காலம்.1954)-கி.மு.2.
2. தேவநேயப்பாவாணர் (திருக்குறள் தமிழ் மரபுரை.1969)-கி.மு. 2.
3. சி. இலக்குவன் (வள்ளுவர் வாழ்ந்த காலம், 1978)-கி.மு.3.

2.2.6.3 கி.மு. - கி.பி. நோக்கில்

1. அ. நடேசன் (திருக்குறள் உரைவிளக்கம், 1954)-கி.பி.1 அல்லது கி.மு.1.

### 2.2.6.4 சி.பி. நோக்கில்

1. கா. அப்பாதுரை (வள்ளுவர் நிழல், 1957)-சி.பி.2.
2. தெ. பொ. மீனாட்சிசுந்தரம் (திருவள்ளுவரின் தத்துவம்,1969) -சி.பி.3.

### 2.2.6.5. சம காலம்

புறநானூற்றுப் பாடலில் வரும் 'அறம்' என்பதைத் திருக்குறளுடன் ஒப்பிட்டு இரண்டும் சமகாலத்தது என்ற நோக்கில் ஆய்வுகள் வந்துள்ளன.

1970-இல் ரா. கிருட்டிணமூர்த்தி "காலக்கண்ணாடியா கலங்கரை விளக்கமா?" என்னும் கட்டுரையில்,

> "அறம் பற்றிய புறநானூற்றுக் கருத்தைக் கொண்டு
> திருக்குறள் புறநானூற்றுக்கு முற்பட்டது என்று
> கூறக்கூடாது. புறநானூற்றில் முச்சங்கப்
> புலவர்களும் பாடிய பாடல்கள் இருத்தலால்,
> திருக்குறளானது சங்க காலத்து நூலாகவே
> இருக்கலாம்" (58, ப.52)

என்கிறார். இவர் திருக்குறளின் காலத்தை வரையறுக்காமல் சமகாலத்தது என்றே முடிவு தருகிறார்.

### 2.2.6.6 'அறம்' என்பது மனுவே

மனு எழுதிய நூல் மனுஸ்மிருதி. இது அறம் பற்றி எழுந்த வடநூலாகும். தமிழில் புறநானூற்றுப் பாடல் கூறும் அறச் சிந்தனை

திருக்குறளைக் கூறவில்லை; மாறாக மனுவையே கூறுகின்றது என்று ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1968-இல் ப. அருணாசலம் "குறளின் செய்தி" என்னும் நூலில், "அறங்களையும், அவற்றை மீறினால் விளையும் தண்டனைகளையும் தெளிவாகக் கூறும் நூல் மனுதருமமே" என்றும், குற்றங்களின் கழுவாய் என ஓர் அத்தியாயமே அதில் உள்ளது என்றும் (8, ப.285) கூறுகிறார். மேலும் அவர்,

> "குழந்தை, பெண் கொன்றவன், நன்றி கொன்றவன்,
> அண்டியவனை அழித்தவன் ஆகிய இவர்கள் கழுவாய்
> செய்து கொண்டாலும் அவர்களோடு உறவாடக்
> கூடாது" (மனு XI : 190)

என்னும் மனுவின் கருத்தையே புறநானூறு கூறுகிறதே தவிர, திருக்குறளை எதிரொலிக்கின்றது என்பதை ஏற்கமுடியவில்லை என்கிறார்.

2.2.6.7 <u>'அறம்' என்பது தனி நூல்</u>

'அறம்' என்பது புறநானூறும், திருக்குறளும் கூறும் ஒரு தனி நூல் என்றும் ஆய்வுகள் வந்துள்ளன.

1936-இல் ஆர். நரசிம்மன் "திருவள்ளுவர் காலம்" என்னும் கட்டுரையில்,

> "திருக்குறளை அறம் என்று எந்த உரையாசிரியரும்
> கூறவில்லை. திருவள்ளுவ மாலையைப் பாடியப்
> புலவர்களும் அறம் என்று கூறவில்லை.

அறம் என்ற வேறொரு நூலையே புறநானூறு
குறிப்பிட்டிருக்க வேண்டும்" (244, ப.220)

என்கிறார். இவர், உரையாசிரியர்கள் கருத்தை முதன்மைப் படுத்தி அறம் என்பது தனி நூல் என்கிறார். மேலும், திருக்குறளின் காலத்தைச் சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்டது என்கிறார்.

1948-இல் ச. வையாபுரியார் "தமிழ்ச்சுடர் மணிகள்" என்னும் நூலில், 'அறம் என்ற நூலை, திருக்குறளும் புறநானூறும் எடுத்தாளுகின்றன என்று கூறித் திருக்குறள் காலம் கி.பி. 5-ஆம் நூற்றாண்டு என்கிறார்.

இவர்களுக்குப் பின் 1988-இல் முனைவர் கு. மோகனராசு "திருவள்ளுவர் காலம்" என்னும் தொடர் கட்டுரையில், அறம் என்பது தனி நூல் என்று விளக்கம் தருகின்றார். அறம் பற்றிய ஆய்வுச் சிந்தனையில் இவரின் ஆழமான - நுண்ணிய, பின்வரும் ஒப்பீட்டாய்வின் முடிவினால் அறம் என்பது தனி நூல் என நிரூபிக்கப்படுகிறது. (257, ப.6)

1. புறநானூற்று 34-வது பாடல் கருத்து, திருக்குறளோடு முழுமையான தொடர்பு பெற்று விளங்காமை.

2. திருக்குறளுக்கு முற்பட்ட தொல்காப்பியத்திலேயே அறநூல்களைக் குறிப்பிடும் 'அம்மை' என்னும் இலக்கிய வழக்கு இருப்பது.

3. அறம் என்னும் பெயரில் ஒரு நூல் இருந்ததை,

"ஏரணம் உருவம் யோகம் இசைக்கணக் கிரதம் காலம்
தாரணம் அறமே சந்தம்" (பழம் பாடல்)

என்னும் பழம்பாடல் ஒன்றை வையாபுரியார் குறிப்பிட்டுள்ளமை. மேற்கண்ட

சான்றுகளைக் கூறும் முனைவர் கு. மோகனராசு அவர்கள், புறநானூற்றுக்குத் திருக்குறள் பிற்பட்டது என்ற முடிவினையே கூறுகிறார்.

## 2.3 சங்க இலக்கியத்திற்கு முன்

திருக்குறளின் சொல், பொருள் கருத்துகள் சிலவற்றைச் சங்க இலக்கியப் பாடல்கள் எடுத்தாண்டுள்ளதை மையமிட்டுத் திருக்குறள் சங்க இலக்கியத்திற்கு முற்பட்டது என்னும் நோக்கில் ஆய்வுகள் சில வந்துள்ளன. அவற்றை 1. வரையறுக்கப்படாத காலம், 2. வரையறுக்கப்பட்ட காலம் என இரு பிரிவாகக் கூறலாம்.

### 2.3.1. வரையறுக்கப்படாத காலம்

திருக்குறள் சங்க இலக்கியத்திற்கு முற்பட்டது என்ற கருத்துகளின் அடிப்படையில் ஆய்வுகள் வந்துள்ளன. ஆனால், அவற்றில் திருக்குறளின் காலத்தை வரையறுத்துக் கூறவில்லை.

1929-இல் ச. சோமசுந்தர பாரதியார் "திருவள்ளுவர்" என்னும் கட்டுரையில், 'திருக்குறள் பாக்களைச் சங்க இலக்கியப் பாக்கள் எடுத்தாளுகின்றன' என்கிறார். மேலும், 'திருக்குறள் சங்க நூல்கள் தோன்றுவதற்குப் பல்லாண்டுகட்கு முற்பட்டது' (24, ப.9) என்கிறார். (எ.கா) "வேட்ட பொழுதின்" என்னும் (குறள் 1105) குறள் "வேட்டார்க்கு வேட்டனவே" (சிறு. 192) என்னும் பாடலில் எடுத்தாளப்பட்டுள்ளதைச் சான்றாகத் தருகின்றார்.

இவருக்குப்பின் கா. அப்பாதுரை, (வள்ளுவர் நிழல், 1957) உ.வே.வை.மு. கோபாலகிருட்டிணன் (திருக்குறள், 1965) போன்றோர் திருக்குறளைச் சங்க இலக்கியப் பாக்கள் எடுத்தாளுகின்றன என்று குறிப்பிட்டுச் சங்க இலக்கியத்திற்குத் திருக்குறள் முற்பட்டது என்று குறிப்பிடுகின்றனர்.

2.3.2 வரையறுத்த காலம்

சங்க இலக்கியத்திற்குத் திருக்குறள் முற்பட்டது எனக் கொண்டு ஒரு குறிப்பிட்ட காலத்தைத் திருக்குறளுக்குச் சில சான்றோர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

2.3.3 கி.மு. நோக்கில்

1. கா.சு. பிள்ளை (திருவள்ளுவர் திருக்குறள், 1928)
– கி.மு. 12-5 ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டது.

2. ஆ. செகநாதன் (வள்ளுவச் செல்வம், 1969)
– இரண்டாயிரத்து நூறு.

2.3.4 கி.மு. – கி.பி. நோக்கில்

1. மா. இராசமாணிக்கனார் (திருவள்ளுவர் காலம், 1954)
– கி.மு.1 – கி.பி. 300 வரை.

2. பா. நடராசன் (வள்ளுவர் தந்த பொருளியல், 1965)
– கி.மு.1 நூற்றாண்டுக்கும் கி.பி.1 ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டது.

3. அ. நடேசன் (திருக்குறள் உரை விளக்கம், 1954)
– கி.மு.1 ஆம் நூற்றாண்டுக்கும் கி.பி.1 ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டது.

2.3.5 கி.பி. நோக்கில்

1. பொதிகைப் பதிப்பகத்தார் (திருக்குறள் மூலம் ஆராய்ச்சிக் குறிப்புகளுடன், 1950)
   - கி.பி. 30.

2. ந.சி. கந்தையாப்பிள்ளை (திருவள்ளுவர், 1953)
   - கி.பி. 30.

3. டி.ஆர். சீனிவாசன் (திருக்குறள் ஆராய்ச்சியும்-ஜைன சமய சித்தாந்த விளக்கமும், 1932)
   - கி.பி. முதல் நூற்றாண்டு.

4. அ. சிதம்பரம் (திருவள்ளுவர், 1936)
   - கி.பி. முதல் நூற்றாண்டு.

5. மு. கோவிந்தசாமி (குறள் மணம், 1965)
   - கி.பி. 2-ஆம் நூற்றாண்டு.

2.4 சங்க இலக்கியத்திற்குப் பின்

திருக்குறள் சங்க இலக்கியத்திற்கு முற்பட்டது என்ற ஆய்வுகளுக்கு முரணாகச்சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்டது என்றும் ஆய்வுகள் வந்துள்ளன.

2.4.1 சமூகச் சிந்தனை

சங்க இலக்கியத்திற்குத் திருக்குறள் பிற்பட்டது என்ற ஆய்வுகளில் ஒரு சில சமூக அடிப்படையிலும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1936-இல் ஆர். நரசிம்மன் "திருவள்ளுவர் காலம்" என்னும் கட்டுரையில்,

"திருக்குறள் கருத்துகளையும், சொற்றொடர்களையும் புறநானூறு முதலிய சங்கச் செய்யுட்கள் எடுத்தாளுகின்றன என்பது தவறு. திருவள்ளுவர் சங்கச் செய்யுட்களையே எடுத்தாண்டுள்ளார். சங்க காலத்தில் புலாலும், கள்ளும் உண்ணத் தகாத செயல்களாகக் கருதப்படவில்லை. மாறாக, அவை அக்கால மக்களின் வழக்கில் இருந்து வந்தன. ஆனால், திருக்குறளில் இவை கடிந்து கூறப்பட்டுள்ளமை இந்நூல் மிகவும் பிற்பட்டது என்பதை உறுதி செய்கிறது" (244, ப.220)

என்கிறார். இவர் சங்க கால மக்கள் வாழ்க்கை முறையைக் கொண்டு திருவள்ளுவரின் கருத்தை ஒப்பிட்டுத் திருக்குறள் பிற்பட்டது என்று கூறினாலும், திருக்குறளின் காலத்தை வரையறுக்க வில்லை.

இவருக்குப்பின் 1973-இல் இல.செ. கந்தசாமி "திருக்குறளில் வேளாண்மை" என்னும் நூலில், வரைவின் மகளிர் உட்பட வள்ளுவர் கடிந்துரைப்பதைக் கூறித் திருக்குறள் மிகவும் பிற்பட்டது என்கிறார். (47, ப.220)

1988-இல் முனைவர் கு. மோகனராசு "திருவள்ளுவர் காலம்" என்னும் கட்டுரையில்,

"பெண்ணுரிமைச் சிந்தனைகளை மையமிட்டு 'பரத்தன்' (குறள்.1131) என்ற சொல்லை ஆண், பெண் சமன்மைக்காகவும், பல பெண்டிருடன் தொடர்பு கொள்ளும் ஆடவரைக் கண்டிக்கவும் வள்ளுவர் கூறியுள்ளார். (257, ப.6)

என்கிறார். மேலும், திருக்குறள் சங்க இலக்கியக் கருத்துகளிலிருந்து

வளர்ச்சிப் பெற்றுள்ளதைச் சான்று காட்டித் திருக்குறள் பிற்பட்டது என்கிறார்.

சமுதாயத்தில் மாற்றங்காணவே, வள்ளுவர் பல குறட்பாக்கள் எழுதியுள்ளதைக் கொண்டு, அவர் காலத்தை முனைவர் கு. மோகனராசு வரையறுக்க முனைந்துள்ளார்.

2.4.2 அரசியல்

மன்னர்களுக்கும் - புலவர்களுக்கும் - அமைச்சர்களுக்கும் உள்ள தொடர்பை முதன்மைப் படுத்தியும் திருக்குறளின் கால ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

1983-இல் வீ. இராசமாணிக்கம் "குறள் எழுந்த காலம்" என்னும் கட்டுரையில்,

> "அரசு ஆட்சிச் சொற்கள் குறளில் தெளிவாகவும், சங்க இலக்கியத்தில் இலைமறை காயாகவும் உள்ளன. புலவர்கள் மன்னர்க்கு அறிவுரை கூறுவதாகச் சங்க இலக்கியத்தில் இருக்க, குறளில் அமைச்சர் அறிவுரை கூறுவதாக உள்ளது" (27, ப.71)

என்கிறார். மேற்குறிப்பிட்ட சான்றைக் கொண்டு திருக்குறள் சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்டது என்கிறார்.

2.4.3 தாக்கம்

சங்க இலக்கியத் தொடர்களும் திருக்குறளில் பெருமளவு காணப்படுவதை முன்னிறுத்தித் திருக்குறள் சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்டது என்றும் ஆய்வுகள் வந்துள்ளன.

1968-இல் ப. அருணாசலம் "குறளின் செய்தி" என்னும் நூலில்,

"சங்க இலக்கியமும், திருக்குறளும் ஒன்றையொன்று பின்பற்றிச் செல்கின்றன" (8, ப.285)

என்கிறார். இவர்,

"நாடாது நட்டலிற் கேடில்லை" (குறள். 791)

என்னும் குறள்,

"நாடி நட்பினல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே" (நற்.32)

என்ற நற்றிணைப் பாடலில் உள்ளது எனச் சான்று தருகிறார். இறுதியாக, சங்கப் பாடல்களின் பொதுத்தன்மையே அவை திருக்குறளுக்கும் முற்பட்டவை என்பதைத் தெளிவுபடுத்தும் என்கிறார்.

இவருக்குப்பின், மொ.அ.துரை அரங்கசாமி (திருவள்ளுவர் உலகப் பெருஞ்சான்றோரில் ஒருவர், 1969), மு.வை. அரவிந்தன் (திருக்குறளும் சங்க இலக்கியமும், 1970) போன்றோர் திருக்குறள் சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்டது என்கின்றனர்.

1974-இல் வ.சுப. மாணிக்கம் "சங்க இலக்கியவழியே திருக்குறள்" என்னும் கட்டுரையில்,

"திருக்குறள் சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்டது;
அதன் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதி
அல்லது மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கமாகும்" (166,ப.3)

என்கிறார்.

## 2.5 சங்க இலக்கியமும் திருக்குறளும் சமகாலத்தன

சங்க இலக்கியத்துடன் திருக்குறளை ஒப்பிட்டுத் திருக்குறள் சங்க இலக்கியத்திற்கு முற்பட்டது, பிற்பட்டது என்ற இரு நோக்கிலும் ஆய்வுகள் மேற்கொண்டதைப் போன்று திருக்குறளும் சங்க இலக்கியமும் சம காலத்தன என்றும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1953-இல் ந.சி. கந்தையா "திருவள்ளுவர்" என்னும் நூலில்,

> "சங்க இலக்கியங்களான நற்றிணை, கலித்தொகை, புறநானூறு போன்ற நூல்களில் திருக்குறளின் சொற்களும், சொற்றொடர்களும் எடுத்தாளப் பட்டுள்ளன. எனவே, திருக்குறள் சங்க இலக்கியங்களின் காலத்தைச் சார்ந்தது" (50, பப்.20-24)

என்கிறார். மேலும், திருவள்ளுவர் கடைச்சங்கத்தின் இறுதி அரசனாகிய உக்கிரப் பெருவழுதியின் காலத்தவர்; இவ்வுக்கிரப் பெருவழுதியின் காலம் கி.பி. 30 முதல் கி.பி. 60 வரை ஆகும். இதுவே திருவள்ளுவரின் காலம் என ந.சி. கந்தையா கூறுகிறார்.

இவருக்குப் பின் 1976-இல் எஸ். ஜெயலட்சுமி "திருக்குறளும் தம்மபதமும்" என்னும் நூலில் திருக்குறளும், சங்க இலக்கியமும் ஒரே காலத்தன என்று குறிப்பிட்டுத் திருவள்ளுவர் சங்க காலத்தைச் சார்ந்தவர் என்றும், அவர் காலம் கி.பி. 3-ஆம் நூற்றாண்டு என்றும் கூறுகின்றார். (195, ப.3)

ந.சி. கந்தையா, எஸ். ஜெயலட்சுமி ஆகியோர் திருவள்ளுவர் காலம் சங்க இலக்கியக் காலத்தைச் சார்ந்தது என்று கூறித் திருக்குறளின் காலத்தை வரையறுத்துக் கூறியுள்ளனர்.

திருக்குறளைச் சங்க இலக்கியத்துடன் ஒப்பிட்டுச் சமகாலம் என்று கூறித் திருக்குறளின் காலத்தை வரையறுக்காமலும் ஆய்வுகள் வந்துள்ளன.

1955-இல் க. அன்பழகன் "திருக்குறளும் சங்க நூல்களும்" என்னும் கட்டுரையில்,

"சங்க இலக்கியமும் குறளும் முன் பின்னதாகத்
தோன்றியிருக்க வேண்டும்" (15, ப.55)

என்கிறார், இவர்,

"குறுகுறு நடந்து சிறுகை நீட்டி" (புறம்.188)
"மக்கள் மெய்தீண்டல்" (குறள்.65)

என்ற கருத்து ஒற்றுமைப் பகுதிகளை ஒப்பிட்டுக் குறள், சங்க இலக்கியம் இரண்டும் சம கால நூல்களாக இருத்தல் வேண்டும் என்கிறார்.

இவருக்குப்பின் ந. சுப்பிரமணி (வள்ளுவரும் வாய்மொழியும், 1960) ரா. கிருட்டிணமூர்த்தி (காலக்கண்ணாடியா கலங்கரை விளக்கமா?, 1970) போன்றோரும் திருக்குறள் சங்க காலத்தது என்று கூறியுள்ளனர்.

## 2.6 காப்பியங்களும் - திருக்குறளும்

திருக்குறளின் காலத்தை ஆராய்ந்த அறிஞர்கள், காப்பியங்கள் திருவள்ளுவரைப் புகழ்ந்து கூறுவதையும், திருக்குறளை மேற்கோளாகக் காட்டுவதனையும், எடுத்தாளுவதையும் ஒப்பிட்டுத் திருக்குறளின் கால ஆய்வை மேற்கொண்டுள்ளனர். அவற்றை, 1. காப்பியங்களுக்கு முன், 2. இரட்டைக் காப்பியங்களுக்கு முன், 3. மணிமேகலைக்கு முன் என மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

### 2.6.1 காப்பியங்களுக்கு முன்

1953-இல் அ. சக்கரவர்த்தி "திருக்குறள்" என்னும் நூலில்,

> "கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் தோன்றிய சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி போன்ற காப்பியங்களில் குறள் தொடர்கள் எடுத்தாளப்படுவதால் குறள் காலம் கி.மு. முதலாம் நூற்றாண்டு" (73, ப.57)

என்கிறார். ஆனால், இவர் சான்றுகள் ஏதும் தரவில்லை. இவருக்குப்பின் சாமி சிதம்பரனார் (வள்ளுவர் வாழ்ந்த தமிழகம், 1956), காமாட்சி சீனிவாசன் (குறள் கூறும் சமயம், 1979) போன்றோர் சான்றுகள் தந்து திருக்குறள் காப்பியங்களுக்கு முற்பட்டது என்கின்றனர்.

### 2.6.2 இரட்டைக் காப்பியங்களுக்கு முன்

இரட்டைக் காப்பியங்கள் எனப்படுவன சிலப்பதிகாரமும் மணிமேகலையும் ஆகும். இவற்றை மையப்படுத்தித் திருக்குறளின் காலத்தை ஒரு சிலர் ஆய்வு செய்துள்ளனர்.

1953-இல் ந.சி. கந்தையா "திருவள்ளுவர்" என்னும் நூலில்,

> "இரட்டைக் காப்பியங்களாகிய சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் திருக்குறளைப் பற்றிய தாக்கங்கள் வருவதால் திருக்குறளின் காலம் இவ்விரு நூல்களின்

காலத்திற்கும் முற்பட்ட காலம். அது கி.பி. 30 முதல் 50 வரையுடைய காலப்பகுதியாகும்" (50, பப.20-24)

என்கிறார்.

2.6.3 கி.மு. நோக்கில்

1. சி. இலக்குவனார் (வள்ளுவர் வாழ்ந்த காலம், 1978) - கி.மு.3-ஆம் நூற்றாண்டு.
2. ஆ. அரங்கநாதன் (திருக்குறள், 1933) - கி.மு.4-ஆம் நூற்றாண்டு.
3. இல. செ. கந்தசாமி (திருக்குறளில் வேளாண்மை, 1973) - கி.மு. 31.
4. மறைமலை அடிகள் (திருக்குறள் ஆராய்ச்சி, 1977)-கி.மு.31.
5. கா.மு. சின்னப்பா (திருக்குறள் மூலமும் அதிகார முறை வைப்பும், 1950)-கி.மு(2000 ஆண்டுகளுக்கு முன்)
6. பி. இரத்தினம் (திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும், 1951)-கி.மு. (2000 ஆண்டுகளுக்கு முன்)

2.6.4 கி.மு. - கி.பி. நோக்கில்

1. பா. நடராசன் (வள்ளுவர் தந்த பொருளியல், 1969)-கி.மு. 1-ஆம் நூற்றாண்டுக்கும் கி.பி.1-ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டது.

2.6.5 கி.பி. நோக்கில்

1. எஸ். அனவரத நாயகம் (திருவள்ளுவ நாயனார் சரித்திரம், 1908) - கி.பி.1-ஆம் நூற்றாண்டு.

2. ந.மு. வேங்கடசாமி (வள்ளுவர் வாய்மொழி, 1928)
   - கி.பி.1-ஆம் நூற்றாண்டு.

3. துடிசைக் கிழார் அ. சிதம்பரனார் (திருவள்ளுவர், 1935)
   - கி.பி. 1-ஆம் நூற்றாண்டு.

4. மா. இராசமாணிக்கம் (திருவள்ளுவர் காலம், 1954)
   -கி.பி.1-ஆம் நூற்றாண்டுக்கும்-கி.மு. 300க்கும் உட்பட்டது.

5. எஸ். மகராசன் (திருவள்ளுவர், 1979) - கி.பி.2-ஆம் நூற்றாண்டு.

6. எஸ்.எம். டையாஸ் (வள்ளுவர் நீதி, 1982) - கி.பி.2-ஆம் நூற்றாண்டு.

7. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் (திருவள்ளுவரின் தத்துவம், 1969)-கி.பி.3-ஆம் நூற்றாண்டு.

### 2.6.6 வரையறுத்துக் காலம் கூறாத ஆய்வுகள்

1. இலட்சுமணன் (திருவள்ளுவர் காலம், 1917).
2. த. கனகசுந்தரம் (திருவள்ளுவர் ஓர் ஆராய்ச்சி, 1937).

### 2.6.7 மணிமேகலைக்கு முன்

திருக்குறளின் காலத்தை அறிய மணிமேகலையைத் திருக்குறளுடன் ஒப்பிட்டும் ஆய்வுகள் வந்துள்ளன.

1924-இல் கா. சுப்பிரமணியம் "திருவள்ளுவர்" என்னும் கட்டுரையில், திருக்குறளின் காலம் கி.பி.2-ஆம் நூற்றாண்டு என்கிறார். இதற்கு,

"கி.பி.2-ஆம் நூற்றாண்டில் எழுந்த மணிமேகலையுள்
திருவள்ளுவர் மொழி விதந்து ஓதப்படுவதால்

அதற்கு முற்பட்டதென்பதும்

தெளிவு" (233, ப.283)

என்கிறார். இவர், "தெய்வந் தொழாஅள்" என்னும் திருக்குறளைச் சாத்தனார் எடுத்தாளுவதையே சான்று தருகிறார். இதே கருத்தில் அ. நடேசன் (திருக்குறள் உரை விளக்கம், 1954) அவர்களும் கி.பி.1-ஆம் நூற்றாண்டு என்றும், மு. கோவிந்தசாமி (இலக்கியக் காலம், 1956) கி.பி.2-ஆம் நூற்றாண்டு என்றும் திருக்குறளின் காலத்தைக் கூறுகின்றனர்.

1961-இல் மா. இராசமாணிக்கனார் "நாடகத் தமிழ்" என்னும் கட்டுரையில், மணிமேகலையுடன் திருக்குறளை ஒப்பிட்டுக் குறள் காலம் கி.பி.2-ஆம் நூற்றாண்டு என்கிறார். அவர்,

"நாடகக் காப்பிய நன்னூல் நுனிப்போர்" (மணி. 19:80)

என்னும் பாடலைக் குறிப்பிட்டு, உ.வே.சா., நாடகத்தைக் கதைத் தழுவி வரும் கூத்து என்பதைக் கூறுகிறார். ஆனால்,

"கூத்தாட்டு அவைக்குழாம்" (குறள். 332)

என்பதில் 'கூத்து' நடனத்தைக் குறிக்கின்றது என்று மா. இராசமாணிக்கனார் குறிப்பிட்டு மணிமேகலைத் திருக்குறளுக்குப் பிற்பட்டது என நிறுவுகிறார். (26, ப.15)

## 2.7 ஆதி உலாவுக்கு முன்

கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் தோன்றிய திருக்கைலாய ஞான உலாவைத் திருக்குறளுடன் ஒப்பிட்டும் ஆய்வுகள் வந்துள்ளன.

1917-இல் இலட்சுமணன் "திருவள்ளுவர் காலம்" என்னும் கட்டுரையில்,

"சேரமான் பெருமாள் வமிசத்தினரின் காலம் கி.பி.5-ஆம் நூற்றாண்டிற்கும் 9-ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்டது எனக் கேரள பட்டயமும், சோழப் பூர்வ பட்டயமும் குறிக்கின்றன. பெருமாள் தம்முடைய ஆதியுலாவில் சில குறட்பாக்களை மேற்கொள்கிறார். அவற்றைப் பண்டையோர் கட்டுரை என்கின்றனர்" (2|0( ), ப.291)

என்கிறார். இறுதியாகத் திருக்குறள் ஆதியுலாவிற்கு முற்பட்டது என்கிறார்.

இவருக்குப் பின் 1965-இல் மு. கோவிந்தசாமி "தமிழ் இலக்கிய வரலாறு" என்னும் நூலில்,

"கி.பி.7-இல் தோன்றிய திருக்கைலாய ஞான உலாவில் "இல்லாரை எல்லாரும் எள்ளுவர்" எனக் குறள் பேசுவதால் வள்ளுவர் காலம் கி.பி.7-க்கும் முற்பட்டது" (65அ, ப.49)

என்கிறார்.

## 2.8 வட நூல்களும் திருக்குறளும்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலங்களிலிருந்தே வடநூல்களைக் கொண்டும் திருக்குறளின் காலத்தை வரையறுத்துள்ளனர்.

### 2.8.1 அர்த்தசாத்திரத்துக்குப் பின்

வடநூல்களுள் ஒன்றான அர்த்தசாத்திரத்துடன் திருக்குறளை ஒப்பிட்டுத் திருக்குறள் அர்த்தசாத்திரத்திற்குப் பிற்பட்டது என்று ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1933-இல் ஆ. அரங்கநாதன் "திருக்குறள் மூலமும் உரையும்" என்னும் நூலில்,

> "அர்த்தசாத்திரத்தின் காலம் கி.மு.4. இதற்குப் பின் திருக்குறளை இயற்றியிருக்க வேண்டும்" (6, ப.11)

என்கிறார். இவர் சான்றுகள் எதனையும் கூறவில்லை. மேலும், ஒத்தக் கருத்துகள் உள்ளமையை நோக்கி ஒன்றை முன்னதாகவும், மற்றொன்றைப் பின்னதாகவும் கொள்வது ஏற்புடையதாக அமையவில்லை.

### 2.8.2 வடநூல்களுக்குப் பின்

வடநூல்கள் சிலவற்றுடன் திருக்குறளை ஒப்பிட்டு, அவற்றுக்குப் பின்னர்த் திருக்குறள் வந்தது என்று திருக்குறளின் காலத்தை நிறுவ அறிஞர்கள் முயன்றுள்ளனர்.

1948-இல் எஸ். வையாபுரியார் "இலக்கிய விளக்கம்" என்னும் நூலில்,

> "திருக்குறளின் அறத்துப்பால் கருத்துகள், மனுநீதியிலிருந்தும், பொருட்பால் கருத்துகள் கௌடில்யரது அர்த்தசாத்திரத்திலிருந்தும், காமத்துப்பால் கருத்துகள் வாத்சாயனத்திலிருந்தும் கடன் பெறப்பட்டவை. எனவே இவ்வடமொழி நூல்களின் காலத்திற்குப் பிறகே திருக்குறள் எழுந்ததாகும்" (19, பப. 94-101)

என்று கூறித் திருக்குறளின் காலம் கி.பி.5-ஆம் நூற்றாண்டு என்கிறார்.

### 2.8.3 வடநூல்களின் மொழி பெயர்ப்பே குறள் : மறுப்பு

வடநூல்களின் மொழிபெயர்ப்பே திருக்குறள் என்று குறிப்பிட்ட எஸ்.வையாபுரியார் கருத்தை மறுத்து ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1953-இல் கு. பரமசிவம் "வள்ளுவர் காலம்" என்னும் கட்டுரையில், மனுநீதி, அர்த்தசாத்திரம், காமசூத்திரம் மூன்றையும் திருக்குறளுடன் ஒப்பிட்டு, முரண்பட்ட கருத்துகளிலும் ஒற்றுமையைக் காண்பதாகக் கூறி, திருவள்ளுவர் கூறும் முறைவேறு; வடநூலார் கூறும் முறை வேறு; ஆதலின் திருவள்ளுவர் வடநூலாருக்குக் கடமைப் பட்டவர் அல்லர் எனக் கூறியுள்ளார். (241, பப. 444-452)

மேலும் திருக்குறளின் காலத்தைக் கி.மு. 3-ஆம் நூற்றாண்டு என்கிறார்.

## 2.9 இந்திய நூல்களும் குறளும்

திருக்குறளின் காலத்தை இந்திய இலக்கியங்கள் சிலவற்றுடன் ஒப்பிட்டும் ஆய்வுகள் மேற்கொண்டுள்ளனர்.

1989-இல் முனைவர் இரா. வேலு "திருக்குறள் கௌடலீயம் – ஒப்பாய்வு" என்னும் நூலில்,

> "வள்ளுவர் தனக்கு முந்தியுள்ள வடமொழி, புத்த, சமண, இலக்கியங்களிலும், சங்ககாலக் கொள்கைகளிலும், மக்கட் சமுதாய வாழ்வியலை மேம்படச் செய்யும் கொள்கைகளை மட்டும் தன் சிந்தனைக்குத் தூண்டுகோலாக ஏற்றிருக்கலாம். எனவே, திருவள்ளுவரின் காலம் கி.மு. முதல் நூற்றாண்டு கீழெல்லையாகவும், கி.மு. மூன்றாம் நூற்றாண்டு மேலெல்லையாகவும் இருக்க வாய்ப்புண்டு" (189, ப.37)

என்கிறார்.

தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல் ஆகிய ஐவரையும் பேணுதற்குரிய கடமைகளை அங்குத்தர நிகாயம் (268) அறிவிக்கிறது. இக்கருத்து தருமசாத்திரங்களிலும், திருக்குறளிலும் இடம் பெறுகிறது. திருக்குறளின் மேற்குறிப்பிட்ட கருத்து, அனைத்து இந்திய இலக்கியங்களிலும் இடம் பெறுவதைக் காணலாம் என, இரா. வேலு கூறுகிறார்.

2.00. முடிவுரை

திருக்குறளைப் பிற இலக்கியங்களோடு ஒப்பிட்டுக் கால ஆய்வை மேற்கொண்ட அறிஞர்களின் ஆய்வு வரலாற்றினைப் பின்வருமாறு கூறலாம்.

1. திருக்குறளின் காலத்தை நிறுவச் சமயக் கருத்துகளை முன்னிலைப் படுத்திய ஆய்வுகள் போதுமான அளவிற்கு நிலையான சான்றுகளாக இல்லை. தொடக்கத்தில் புத்த, சமண மதங்களுடன் மட்டுமே ஒப்பிடப்பட்டுள்ளன. குறிப்பாக 1953, 1954 இரண்டு ஆண்டுகளில் மட்டுமே இவ்வாய்வுகள் வந்துள்ளன. மேற்கண்ட ஆய்வுகள் தொடரவில்லை.

2. புலவர்களையும் - திருவள்ளுவரையும் தொடர்புபடுத்திய ஆய்வுகளில் முடிவுகள் ஒருதலையாகவே உள்ளன. இருப்பினும் பே.க. வேலாயுதன் 1980-இல் எழுதிய ஆய்வு வரவேற்கத்தக்கதே.

3. திருக்குறள் சங்க இலக்கியத்திற்கு முற்பட்டது என்றும், பிற்பட்டது என்றும் இரு நோக்குகளிலும் ஆய்வுகள் வந்துள்ளன. இரண்டு நோக்கிலான ஆய்வுகள் பொதுவாக இரண்டு இலக்கியக் கருத்துகள், தொடர்களை மையமிட்டுச் செல்கின்றன.

4. திருக்குறள் சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்டது என்பதற்குச் சமுதாய வளர்ச்சி நிலைகளை அடிப்படையாகக் கொண்டு முனைவர் கு. மோகனராசு 1988-இல் மேற்கொண்ட ஆய்வு ஏற்கத்தக்கதே.

5. காப்பியங்களுக்குத் திருக்குறள் முற்பட்டது என்பது ஏற்புடையது. ஆனால், திருக்குறளின் காலம் நிறுவுவதில் வேறுபாடுகள் பல உள்ளன.

6. வடநூல்களின் தாக்கம் - திருக்குறளின் தாக்கம் என இருநோக்கில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இருப்பினும் முறையான சான்றுகள் வெளிப்படுத்தப்படவில்லை.

7. தொடக்கத்தில் 1925-இல் ச.சோ. பாரதியாரால் சங்க இலக்கியத்தையும், காப்பியங்களையும் திருக்குறளுடன் ஒப்பிட்டுத் திருக்குறள் முற்பட்டது என்றே ஆய்வுகள் தொடங்கி உள்ளன. இறுதியாக, திருக்குறள் சங்க இலக்கியத்திற்குப் பின்னும் காப்பியத்துக்கு முன்னும் தோன்றியிருக்க வேண்டும் என 1988-இல் முனைவர் கு. மோகனராசு அவர்கள் கூறியுள்ள கருத்தை ஏற்றுக்கொள்ளலாம்.

***

## 3.0 திருக்குறளில் சமயக்கூறுகள்

திருக்குறளில் கடவுள் பெயர்களும், இறைக்கோட்பாடுகளும், சில இடங்களில் காணப்படுகின்றன. இவற்றை மையமிட்டு திருவள்ளுவர் ஒரு குறிப்பிட்ட சமயத்தவராக இருக்க வேண்டும் என்று ஆய்வுகள் எழுதியுள்ளனர். அவற்றுள் திருக்குறளைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டு எழுதிய சமயம் சார்ந்த ஆய்வு வரலாற்றை இவ்வியல் விரிவாக மதிப்பிடுகின்றது.

திருக்குறளைச் சமய நூல்களுடன் தொடர்புபடுத்தி வெளிவந்த ஆய்வுகளை ஒன்பது பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை: 1. சைவமும் திருக்குறளும், 2. வைணவமும் திருக்குறளும், 3. வைதீகமும் திருக்குறளும் 4. சமணமும் திருக்குறளும், 5. பௌத்தமும் திருக்குறளும், 6. கிறித்தவமும் திருக்குறளும், 7. இசுலாமும் திருக்குறளும், 8. இயற்கையும் திருக்குறளும், 9. சமயப்பொதுமை என்பனவாகும்.

## 3.1 சைவமும் திருக்குறளும்

தமிழகத்தில் இருந்த பழஞ் சமயங்களுள் ஒன்று சைவம், இச் சமயக் கடவுள் சிவன். இக்கடவுளைத்தான் திருவள்ளுவர் தம் குறட்பாக்களில் (திருக்குறள். 2, 3, 5-9) குறிப்பிடுகிறார் என்று ஒரு சில உரையாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர். மேலும் சைவ சமய நூல்களை எழுதிய சான்றோர்கள் தம் பாடல்களில் திருக்குறளின் கருத்துகளையும், சொற்றொடர்களையும் எடுத்தாண்டுள்ளனர். இவற்றை மையப்படுத்தித் திருக்குறளின் கருத்து சைவ சமயத்தைச் சார்ந்தது; திருவள்ளுவர் சைவர் என இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

### 3.1.1 சிவன்

திருக்குறளில் ஆங்காங்கே சில இடங்களில் கடவுள் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன. ஆனால், குறிப்பிட்ட சமயச் சார்புடைய நோக்கில் இல்லாமல் பொதுமையாக கூறப்பட்டுள்ளன.

1924-இல் கா. சுப்பிரமணியப்பிள்ளை "திருவள்ளுவர்" என்னும் கட்டுரையில்,

> "திருவள்ளுவர் எல்லாச் சமயத்தார்க்கும் பொதுவாகிய சொல் தொடர்களினாலே கடவுளைச் சுட்டியருளினமையாலே எம்மதத்தார்க்கும் பொதுநூல் திருக்குறள் என்பதும், அச்சொற்றொடர்களை நுணுகி ஆராயுமிடத்து அவை சைவ சமயக் கொள்கைகளுக்குப் பொருத்தமாகக் காணப்படுவதால் திருக்குறள் சைவசமயப் பொதுத்தன்மையை விளக்கும் பொதுநூலாக விளங்குகின்றதென்பதும் தெளியப்படும்"
> (233, ப.288)

என்கிறார். இவர்,

"எண்குணத்தான்" (குறள். 9)

என்னும் குறளை,

"எண்குணத்தினானை" (சுந்தரர் கானாட்டு. 3)

என்று தேவாரமும்,

"பொறிவாயில் ஐந்தவித்தான்" (குறள். 6)

என்பதை,

"வென்றவன் புலன்ஐந்தும்" (சம்பந். திருவல்லம். 10)

என்று தேவாரமும் குறிப்பிடுவதைச் சான்றுகளாகக் குறிப்பிடுகிறார். இவர், தேவாரப் பாடல்கள் திருக்குறளை எடுத்தாளுவதைக் கொண்டு 'சிவனே' திருக்குறள் கூறும் கடவுள் என்ற நோக்கில் கூறுவதை அறிய முடிகிறது.

இவருக்குப்பின், 1953-இல் ந. சிவகுருநாதன் "திருக்குறள் கடவுள் வாழ்த்து உரைவிளக்கம்" என்னும் கட்டுரையில்,

"ஈசனே சர்வ வித்தைகட்கும் முதல்வன் என்பது ஆரிய மறையின் முடிவாகலானும் எல்லா அறங்கட்கும் மூலமாகத் திகழ்பவன் ஈசனாகிய சிவபிரானே" (94, ப.17)

என்கிறார். இவர்,

"அகர முதல எழுத்தெல்லாம்" (சோமேசர் முதுமொழி.1)

என்னும் பாடல், 'அகர முதல' என்னும் முதற்குறளைக் குறிப்பிடுவதைக் கொண்டு அகரம் சிவனையே குறிப்பிடுகிறது என்கிறார். இவர், சைவ நூலான சோமேசர் முதுமொழி வெண்பாவில் 'அகர முதல' (குறள்.1) எடுத்தாளுவதைக் கொண்டு முடிவுக்கு வருகிறார்.

இதே ஆண்டில் ஏ.சி. சண்முகம் "திருவள்ளுவர் மதம்" என்னும் கட்டுரையில் திருக்குற்றாலத் தலப்புராணப் பாடல்களையும், திருக்குறளையும் ஒப்புமைப்படுத்தி ஆய்வு மேற்கொள்கிறார். அதில்,

"ஆதிபகவன் என்பது பற்றிப் பராசக்திப் பீடச்சருக்கும் திருக்குற்றாலத் தலப்புராணக் கருத்தை மேற்கோள் காட்டுகிறார். ஆதி என்பது இச்சை, கிரியை, ஞானம்

முதலிய சக்திகளுள் ஒன்று. பரமசிவனைத் தூரிய மூர்த்தி என மூவரின் வேறாக வைத்து உபநிடதம் கூறுவதாலும், குணாதீசன் என்று கூறுவதாலும், அம்முழு முதல்வன் ஆதிசத்தத்தால் விசேடிக்கப்படும் பகவன் என்பது தெரிகின்றது" (76, ப.198)

என்கிறார். ஆதியாகிய பகவன் சிவனே என ஆய்வு மேற்கொண்டுள்ளதைக் காணமுடிகிறது.

இவர்க்கடுத்து, 1966-இல் நடேச முதலியார் "அருளியலில் அறிவியல்" என்னும் நூலில்,

"திருக்குறளில் காணப்படும் கடவுளைப் பற்றிய கருத்துகள் முதல் மூன்று திருமுறைகளில் ஆங்காங்கே அனுபவ வாயிலாக வெளிவருவதனை நாம் காண்போம்"(147, ப.5)

என்கிறார்.

"அகர முதலானை" (திருமுறை 1, பதி.88, செய்.5)

என்னும் பாடலைத் திருக்குறள் முதற்பாடலாகக் கொண்டு அகரமுதல்வன் சிவன் என்று முடிவு தருகிறார்.

மேற்கண்ட ஆய்வுகள் திருக்குறளில் வரும் இறைவனின் பெயர்களாக வரும் தொடர்களைச் சைவ இலக்கியங்களுடன் ஒப்பிட்டு, வள்ளுவர் சைவக் கடவுளான சிவனையே குறிப்பிட்டார் என்ற முடிவுக்கு வருகின்றதனைக் காணலாம். மேலும், மிகப் பிற்பட்ட இலக்கியங்களில் இருந்து சான்றுகள் தரப்பட்டுள்ளன. குறளுக்குப் பின்னர் தோன்றிய இலக்கியங்களில் திருக்குறளை எடுத்தாண்டிருப்பது இயல்பே. எனவே, மேற்கண்ட சான்றுகளைக் கொண்டு திருக்குறள் சிவனைக் குறிப்பிடுகிறது என்று முடிவுக்கு வர இயலாது.



### 3.1.2 சைவக்கொள்கைகள்

திருக்குறளில் சைவக்கொள்கைகள் காணப்படுகின்றன என்றும் ஆய்வுகள் வந்துள்ளன.

1953-இல் க. வச்சிரவேலு "திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே" என்னும் நூலில், திருக்குறளில் சமணக் கருத்துகள் கிடையாது; மாறாகச் சைவசித்தாந்தக் கருத்துகளே உள்ளன என்று கூறுகிறார். இவர்,

> "எண்குணத்தான் என்பது சைவ நூல்களில் உள்ளதே. இவை அனந்தஞானம் போன்ற சமணநூல்களில் கிடையாது. பௌத்த சமண நூல்கள் உலகைப் படைத்தவன் ஒருவன் இல்லை. மேலும், வினைதானே பயன்விளைக்கும் அன்றி வினையின் பயனை வகுப்பவன் ஒருவன் இல்லை. வகுத்தவன், உலகியற்றியான் என்னும் தொடர்கள் சைவசித்தாந்த நூற் கடவுளையே கூறுகின்றன" (180, பப.1-25)

என்கிறார். மேலும்,

> "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்
> வேண்டின் தொன்றுமே வேண்டுவது" (திருக்களிற். 40)

என்பது,

> "வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு"
> (குறள். 4)

என்னும் குறள் கருத்தைக் கூறுவதைச் சான்றாக்கிக் கொள்கிறார்.

இவர் சைவச்சார்பு நோக்கோடு திருக்குறளினை ஆய்வு மேற்கொண்டுள்ளார். இருப்பினும் இந்நோக்கில் உறுதிபட வந்த நீண்ட/பெரிய ஆய்வு இது ஒன்றே ஆகும். இந்த ஆய்வுக்கு முன்னும்-பின்னும் க. வச்சிரவேலுக்கு இணையாக மேற்கண்ட ஆய்வு நோக்கில் இலக்கியங்களை ஒப்பிட்டு யாரும் எழுதவில்லை.

### 3.1.3 வருணனை

தண்டியலங்காரம், காப்பியத்தின் இலக்கணம் பற்றிக் கூறுவதில் 'வருணனை' என்று ஓர் இலக்கண/இலக்கிய வழக்கைக் குறிப்பிடுகிறது. இவ் அமைப்பை முதன்மைப்படுத்தி திருக்குறளையும்-சைவமதத் தொடர்புடைய இலக்கியத்தையும் ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1979-இல் சே.ச. தனராசு "பேரின்பவியல்" என்னும் கட்டுரையில்,

"இறைவனின் உருவங்களைச் சைவக்குரவர் கூறுவதுபோல்
தாம் கண்ட இறைவனின் திருக்குணங்களாக வாலறிவன்,
மலர்மிசை ஏகினான் என்றெல்லாம் திருவள்ளுவர் குறிப்பிடுகிறார்"
(126, ப.213)

என்கிறார். வள்ளுவர் வருணனையாகக் குறட்பாக்களில் கடவுளைக் கூறவில்லை. ஆனால்,

"வெள்ளத் தடஞ்சடைமேல் விரும்பிவைத்தீர் வெண்மதியும்"
(நாவுக். தேவாரம் 45:3:1)

என்னும் நாவுக்கரசர் பாடலில் சிவனைத் தெளிவாகக் கூறுகிறார். ஆனால், வள்ளுவர் ஈரடியுடன் முடித்துக் கொண்டதால் வருணனை இடம்பெற முடியாமல் போயிருக்கும். இல்லையெனில் வள்ளுவர் கூறும் கடவுளைத்

என்கிறார்
தெற்றெனத் தெளியலாம். நிறைவாக சே.ச. தனராசு, திருவள்ளுவர் இத்தகைய உலக வருணனையில் இறங்காமல் சிறப்பான சில திருக்குணங்களையே செப்புவது அவர் அனுபவத்தில் கண்ட இறைவனின் திருக்கோலம் தனித்தன்மை வாய்ந்தது என்பதை உணர்த்துகிறது என்கிறார் (126, ப.213).

3.1.4 நீத்தாரும் – தொண்டரும்

நீத்தார் என்று திருக்குறள் கூறும் சான்றோரைச் சைவ இலக்கியங்களில் இடம்பெறும் சிவத் தொண்டர்களே என்று ஒப்பிட்டும் ஆய்வுகள் வந்தன.

1987-இல் சி. அருணை வடிவேலு "திருக்குறளில் காணும் சமயத் தத்துவப் பொருள்கள்" என்னும் கட்டுரையில்,

> "திருக்குறள் சமயநூலன்று; அறநூலே என்பது பலராலும் ஒருங்கு கொள்ளப்படுகின்றது. ஆயின் அது, தான் போகின்ற போக்கிலே தனது போக்கிற்கு முற்றாக அல்லது ஒருபுடையாக இயைந்து நிற்கும், பொருள்கள் பலவற்றைக் கூறிச்செல்கிறது. அவ்வகையில் அதன்கண் சமயத்தொடர்பாகக் காணப்படும் பொருள்கள் சிலவற்றை எடுத்துக்காட்ட முற்படுகின்றேன்"
>
> (10,ப.136)

என்கிறார். மேலும், வாழ்த்தல், தொழுதல் என்னும் சமயப் பண்புகள்,

> "கற்றதனால் ஆயபயனென் கொல்" (குறள்.2)
>
> "கோளில் பொறியில் குணமிலவே" (குறள்.9)

என்னும் குறள்களிலும்,

"நெஞ்சே நீநினையாய்" (திருமுறை. 4-9-6)

"வாயே வாழ்த்து கண்டாய்" (திருமுறை. 4-9-5)

என்னும் பாடல்களிலும் இடம்பெறுவதைச் சான்றுகளாகத் தருகின்றார். இறைவனை வணங்கி, பிறவி நீங்கிப் பேரின்பப் பெருநிலையை எய்துதற்கு உரிய தகுதி பெற்றோரையே சமய நூல்கள் அடியார்கள் என்றும், தொண்டர்கள் என்றும் கூறுகின்றன. அவரே நீத்தார் ஆவார் என்று சி. அருணைவடிவேலு குறிப்பிடுகிறார். இக்கருத்து வலிந்து கொண்ட ஒன்றாகத் தோன்றுகிறது.

### 3.1.5 சைவ வளர்ச்சிக்குத் திருக்குறள்

தமிழகத்தின் பழமையான - மிகப் பெருமையுடைய சைவசமய வளர்ச்சிக்குத் துணையாகத் திருக்குறளும் அமைந்திருந்தது என்றும் ஆய்வுகள் வந்துள்ளன.

1978-இல் கா. அரங்கசாமி "திருக்குறள் அமைப்பும் திருவைந்தெழுத்தும்" என்னும் கட்டுரையில்,

> "வையத்துள் வாழ்வாங்கு வாழும் முறையும், அங்ஙனம் வாழ்வதால் கிடைக்கும் பேறும், 'இது' எனச் சுட்டுவது சைவசித்தாந்தம். ஓருருவம் ஒரு நாமம் ஒன்றுமில்லாப் பரம்பொருளை வாலறிவன் என்று குறிப்பதோடன்றிச் சைவ ஆகமங்கள் கூறியபடி 'எண் குணத்தான்' என்றும் வள்ளுவர் கூறுகின்றார். திருவள்ளுவர் சைவர் என்று வாதிடுவதல்ல இதன் நோக்கம். சைவசித்தாந்தம் என்ற தமிழ்ச்சிந்தனையால் விளைந்த மெய்ஞ்ஞான விளைவிற்குத் திருக்குறள் எங்ஙனம் துணையாகின்றது என்பதாகும்" (5, ப. 49)

என்கிறார். திருக்குறளில் வரும் தொடர்கள், கருத்துகள் சைவசமய

இலக்கிய வளர்ச்சிக்குப் பெருந்துணையாக அமைந்துள்ளன என்னும் நோக்கில் இவர் ஆய்வு செல்வதை இனங்காண முடிகிறது.

3.1.6 விவிலியம் - திருக்குறள் சைவசித்தாந்த ஒப்பீடு மறுப்பு

1970-முதல் 1980-வரை திருக்குறள் சமயம் கிறித்தவம் என்றும், திருவள்ளுவர் கிறித்தவர் என்றும் ஆய்வுகள் வந்தன. குறிப்பாக 1985-இல் மு. தெய்வநாயகம் "விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் ஒப்பாய்வு" என்னும் நூலில் திருக்குறள் கிறித்தவ மதம் சார்ந்த கருத்துகளையே கூறுவதால் திருவள்ளுவர் கிறித்தவர் என்று கூறினார். இதனை மறுத்து 1991-இல் சி. அருணைவடிவேல் "விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் ஒப்பாய்வு மறுப்பு நூல்" என்னும் நூலில்,

> "ஒப்பாய்வு என்றால் சிலவற்றை ஒன்றோடொன்று ஒப்பிட்டு, ஒரு பொருளைப் பற்றி அவை எவ்வெவ் வகையில் ஒற்றுமை கொண்டுள்ளன? எவ்வெவ்வகையில் வேறுபடுகின்றன? ஒன்றில் இல்லாத புதிய கருத்துகள் மற்றொன்றில் என்ன இருக்கின்றன? என்று யாரும் நினைப்பார்கள்; ஆயின் மேற்குறித்த ஒப்பாய்வோ திருக்குறள் ஒரு விவிலிய நூல், சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கில் முதல் மூன்று நூல்கள் மட்டுமே உண்மையில் சைவ சித்தாந்த சாத்திரங்கள்; எஞ்சியவை அனைத்தும் தெரிந்தும் தெரியாமலும் சைவசித்தாந்தம் அல்லவற்றைச் சைவசித்தாந்தமாகக் கூறுவன" (11, ப.10)

என்று கூறி மு. தெய்வநாயகத்தின் கருத்தை மறுத்து, திருக்குறளில் இடம்பெறும் கருத்துகள் சைவச்சார்புடையன என்கிறார்.

மனிதன் தன்னால் ஏதும் செய்ய இயலாது என்று உணரும் வாய்ப்பைப் பெறும்போது, அவனில் இறைவன் செயல் நடைபெறுகின்றது. அந்த மீட்பிற்காகவே இயேசு கிறித்து சிலுவைப் பொறியில் தம்மையே தந்துள்ளார். இதனை,

"நஞ்செய லாற்றிந்த நாமற்ற பின்நாதன்
தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே தந்தானென் றுந்தீபற" (திருவுந். 6)

எனத் திருவுந்தியார் கூறுகின்றது என்ற மு. தெய்வநாயகத்தின் கருத்தினைப் பின்வருமாறு மறுக்கிறார்.

""உய்ய வந்தான் உரை" (உந்தி. 45) என்பதில், உய்யவந்தான் திருவுந்தியாரின் ஆசிரியர் அல்லர்; உலகம் உய்ய அவதரித்த 'இயேசு கிறித்து' என்றார். இது ஆள் மாறாட்ட வேலை. 'நம் செயல் அற்று இந்த நாம் அற்றபின் நாதன், தன்னையே தந்தான் (உந்தி-6) என்பதில், 'நாதன் தன்னையே தந்தான் இறைவன் தானே கிறித்துவாகி வந்து, தன்னையே ஒப்புக்கொடுத்தான்' என்றார். யாருக்கு என்று கூறவில்லை" (11, ப. 300)

இதுவரை திருக்குறளைப் பிற இலக்கியங்களோடு ஒப்பிட்டுச் சைவ சமயத் தொடர்பு பற்றிக் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிகின்றது. சைவ சித்தாந்த கொள்கைகட்கும் வள்ளுவரின் கொள்கைகட்கும் ஒற்றுமைகள் உள எனினும் வேற்றுமைகளும் உள. மாயைப் பற்றிய கருத்து குறளில் கிடையாது. சித்தாந்தக் கொள்கையின் படி ஆன்மா வீட்டு நிலையில் இறைவனிடமிருந்தே பேரின்பத்தைப் பெறுகிறது. வள்ளுவர் இதையும் தெளிவாகக் கூறவில்லை. கடவுளின் அருளையும் வழிபாட்டையும்

குறித்த கருத்துகளும் சித்தாந்த நூல்களில் காணப்படுவது போலக் குறளில் இல்லை. சித்தாந்த நூல்களில் இறைவன் அருளினாலேயே மெய்யுணர்வும் வீடும் பெறுகின்றனர் எனப் பலமுறை கூற வள்ளுவர் எங்கேயும் குறிப்பிடவில்லை. கடவுளைத் தொழுதல் அல்லது வணங்குதல் வேண்டும் என்பது பொதுவாகக் கூறினாரேயன்றி வழிபாட்டு முறைகளைக் கூறினாரில்லை. சித்தாந்த நூல்களோ ஐந்தெழுத்தாதல், மலர்கள் கொண்டு அர்ச்சித்தல், கோயிலில் தெய்வச் சிலையைக் கடவுளாகப் பாவித்து வழிபடுதல், அடியவர்களை வழிபடல் முதலிய பல வழிபாட்டு முறைகளைக் கூறுகின்றன. சைவசித்தாந்தத்திற்கும் திருக்குறளுக்குமிடையே சில ஒற்றுமைகள் இருப்பினும் வள்ளுவர் தம் காலத்தின் பின்னெழுந்த சித்தாந்தக் கொள்கைகளைத் தழுவியிருத்தல் கூடுமோ? சித்தாந்த ஆசிரியர்கள் திருக்குறளை ஓரளவு எழுதியவர்கள் என்பதே பொருந்தும். வள்ளுவர் சிவபிரானை எங்கும் வெளிப்படையாகக் கூறவில்லை.

வள்ளுவர் சைவர் ஆகார். ஆனால், தாம் இயற்றிய குறட்பாக்களில் குறிப்பிட்ட உண்மைக் கொள்கையுடைய கடவுள் கோட்பாடுகளில் சைவசமயக் கொள்கைகள் ஒரு சில இருப்பதாகக் கொள்ளுதல் கூடும்; அதுவே குறளின் பொதுமை நிலை ஆகும்.

## 3.2 வைணவமும் - திருக்குறளும்

தமிழகத்தில் பழமையான மதங்களுள் வைணவமும் ஒன்று. தொல்காப்பியர் 'மாயோன் மேய காடுறை உலகமும்' என்று வைணவக் கடவுளைக் குறிப்பிடுகிறார். பின்னர் தோன்றிய சங்க இலக்கியப் பாடல்களில் குறிப்பாகப் பரிபாடலில் பல பாடல்கள் திருமாலுக்கு நடந்த

விழா, வழிபாடு போன்றவற்றைக் குறிப்பிடுகின்றன. மேலும், கலித்தொகை, அகநானூறு போன்ற பாடல்களிலும், காப்பியங்களிலும் திருமால் பற்றிய குறிப்புகளும் விளக்கங்களும் காணப்படுகின்றன. மேற்கண்ட சான்றுகளினால் திருக்குறளிலும் திருமால் பற்றிய சிந்தனை இடம்பெற்றிருத்தல் என்பது இயல்பே.

திருக்குறள் உரையாசிரியர்கள் உரை கூறும்போது வைணவம் மற்றும் திருமாலைப் பற்றிக் குறிப்பிடும் பிற இலக்கியங்களைத் திருக்குறளுடன் ஒப்பிட்டுள்ளனர். மேலும், திருக்குறள் வைணவ நூலாகவும்-திருவள்ளுவர் வைணவராகவும் இருக்கலாம் என்று ஒரு சில ஆய்வுகள் வெளிவந்துள்ளன.

### 3.2.1 அகரம் - திருமால்

இருபதாம் நூற்றாண்டுக்குப் பின்னரே திருக்குறளில் வைணவச் சிந்தனை தொடர்பான ஆய்வுகள் வருகின்றன.

1907-இல் ஆ. முத்துத்தம்பி பிள்ளை, "முதற்குறள் கருப்பொருள்" என்னும் கட்டுரையில், முந்தைய நூலான கீதையில் எழுத்துக்களில் யானே அகரமாகின்றேன் என்னும் கருத்தும், திருக்குறளின் கருத்தும் ஒன்றே என்கிறார். மேலும்,

> "வடமொழியில் அகரமே எல்லாச் சொற்களும்; விசுவ மூர்த்தியே உலகம் எல்லாம் எனும் சுருதியே தமிழில் முதற்குறளாயிற்று, இவை இரண்டும் சுருதிவாக்கியம் என்பது மாமண்டூக்கியம் மூன்றாவது காண்டம் இரண்டாம் சுலோகம் சங்கர பாஉஷியத்திற்காண்க" (251, ப.265)

என்கிறார். திருக்குறள் அகரமான முதற்குறளைக் கொண்டே வைணவச் சிந்தனைத் தொடர்பான ஆய்வு தொடங்குகிறது.

தொடர்ந்து, 1930-இல் வ.உ. சிதம்பரம் பிள்ளை "திருவள்ளுவர் திருக்குறள் பாயிர ஆராய்ச்சி" என்னும் கட்டுரையில்,

> "பராபட்சர் தம்முடைய அஷ்டச்லோகி என்ற நூலில் அகாரார்த்தே விஷ்ணு எனவும், அ இதி பகவதோ நாராயணஸ்ய பிரதம மபிதரணம் என்றும் குறிப்பிடும் பகுதிகள் இங்கே குறிப்பிடத்தக்கன" (229, ப.10)

என்கிறார். இவரும் அகரம் என்பது விஷ்ணுவான திருமாலையே குறிக்கும் என்கிறார்.

1949-இல் இராஜசேகர நாயக்கர் "திருக்குறள் ஆராய்ச்சி" என்னும் கட்டுரையில்,

> "அகரம் எல்லாச் சொற்களுக்கும் மூலம், ஆதலாலும் பிரம்மம் எல்லாப் பொருள்களுக்கும் மூலம், ஆதலாலும் 'அ' என்பது பரப்பிரம்மத்திற்குப் பெயர் என்ற பகுதியை எடுத்துக்காட்டி இறைவனுக்கு அகரம் என்ற பெயருண்மையை அஷ்டாதர ரகசியம், திருமந்திரப் பிரகரணம் என்ற நூலில் வரும் அகரம் சகல சப்தத்திற்கும் காரணமாய் நாராயண பதத்திற்கும் சங்கிரமாக இருக்கையாலே என்ற பகுதியைச் சுட்டி, நாராயண என்ற சொல்லின் சுருங்கிய வடிவமே 'அ' என்பதை நினைவுக்குக் கொணர்கிறார்" (209, ப.90)

என்கிறார். மேற்கண்ட ஆய்வுகள் அனைத்தும் 'அகர முதல' என்னும் முதற்குறளை முன்னிட்டு ஒப்புமைப் படுத்தி வந்த ஆய்வுகளாகும். எனவே, 'அகரம்' ஒன்றை வைத்துக்கொண்டு வைணவக் கடவுள் திருமாலைத்தான் திருவள்ளுவர் கூறினார் என்று இவ்வாய்வுகள் செல்வதைக் காணலாம்.

### 3.2.2 இறைசக்தி

வேண்டுதல், வேண்டாமை இல்லாதவன் இறைவன். அவனின் வலிமையைத் 'தனக்கு உவமையில்லாதான்' என்று திருவள்ளுவர் கூறுகிறார். இதை முதன்மைப்படுத்தி 1978-இல் கமலா சங்கரன் "கம்பனில் திருக்குறள்" என்னும் நூலில் திருவள்ளுவர் கூறும் தனக்குவமை இல்லாதான் என்னும் இறை சக்தியை, கம்பரின் இராமபிரானுடன் ஒப்பிடுகிறார்.
(266, ப.110)

"தனக்குவமை இல்லாதான்" (குறள்.7)

என்னும் குறள் கருத்தினோடு,

"அந்தயில் பெருங்குணத்தி இராமனாதலால்
வந்தனை அவன்கழல் வைத்த போதலாய்
சிந்தை வெங்கொடுந்துயர் தீர்கலாதென்றாள்"
(கம்.அயோ. பள்ளி.58)

என்னும் பாடல் கருத்து ஒப்புமையுடையது என்கிறார். இவ்வாய்வு இறைமை சக்தியை முதன்மைப்படுத்தி ஒப்பிடும் நோக்கிலானது.

### 3.2.3 வைணவக் கருத்துகள் - சிலப்பதிகாரமும் குறளும்

திருவள்ளுவர் கூறிய கடவுள் பெயர்கள் திருமாலையே குறிக்கும் என்பதற்கு வைணவ மதக் கொள்கைகளைக் குறித்தும் ஒப்புமைப்படுத்தினர்.

1953-இல் பி.ஆர். புருடோத்தம நாயுடு "திருக்குறளும் வைணவமும்" என்னும் கட்டுரையில்,

"ஆதி என்பது பஞ்சராத்திரிகள் தம் தெய்வத்திற்கு வைத்து வழங்கி வரும் பெயர் என்பதனைச் சிவஞானசித்தியார் பரபக்கத்தில் பஞ்சராத்திரி மதமறுத்திலையில் "ஆதியாய் அருவுருவமாகி" என்னும் முதற்பாட்டின் உரையில் பஞ்சராத்திரி நீ உன் கர்த்தாவாகிய ஆதி என்று கூறினாய் என்று பாட்டின் உரையில் கூறப்படுகிறது. பஞ்சராத்திரி என்பது வைணவ ஆகமம். அந்தமில் ஆதிபகவம் என்பது வைணவக் கடவுளையே குறிக்கிறது" (157, ப.20)

என்கிறார். மேலும், திருமால் அடியளந்ததைப் பற்றி,

"மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா" (சிலம்பு 17:35)

என்னும் சிலப்பதிகாரப் பாடலும்,

"அடியளந்தான்" (குறள். 610)

என்னும் திருக்குறளும் கூறுவதைக் காணலாம் என்கிறார். தொடர்ந்து,

"பெரியவனை மாயவனை மேலுலக மெல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியும் கையும் திருவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே" (சிலம்பு.17:36)

என்பது,

"கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை" (குறள். 9)

என்னும் குறளை நோக்கியே எழுந்தது என்பதனை இல்லை என்று யார் கூறுவார்?" என்று முடிவு தருகிறார்.

### 3.2.4 ஆழ்வார் பாடல்களும் குறளும்

ஆழ்வார் பாடல்களில் திருக்குறள் தொடர், சொல் கருத்துகள் காணப்படுவதைக் கொண்டு வள்ளுவர் வைணவராக இருக்கலாம் என்று 1920-களுக்குப் பிறகு ஆய்வுகள் வந்துள்ளன. 1932-இல் தி. அனந்த நயினாரின் "திருக்குறள் ஆராய்ச்சியும் ஜைன சமயசித்தாந்த விளக்கமும்" என்னும் நூலில் சித்தார்த்த புத்தக சாலையார் எழுதிய கட்டுரை இணைக்கப்பட்டுள்ளது. அதாவது,

> "கலியுகத்தின் தொடக்கத்திலிருந்தவரென்று வைணவர்களால் கூறப்படுகின்ற நம்மாழ்வார் இயற்றிய திருவாய்மொழியிலுள்ள 'ஊரவர் கௌவை' பாசுரக் கருத்தை – ஊரவர் கௌவை' என்னும் திருக்குறளின் சான்றாக வைத்துள்ளனர். இதனாற் நாயனார் வைணவர் எனக் கூறலாகும்" (16, பப. 70-95)

என்கின்றனர். இவ்வாய்வுக்கு 'ஊரவர் கௌவை' என்னும் பாடலை மட்டுமே சான்றாகத் தருகின்றனர். வேறு சான்று எதுவும் தரவில்லை.

தொடர்ந்து, 1955-இல் உமைதாணு "செம்பொருள் கண்டார்" என்னும் கட்டுரையில்,

"திருவள்ளுவருடைய சமயத்தை அறிந்து சொல்முடியாது. கடவுள் தன்மையைப் போல அவருடைய சமயமும், கடந்து நிற்கிறது. இவை போன்ற காரணங்களால் அவர் மீதும், அவருடைய பாடல்கள் மீதும் கடவுள் தன்மை அமைவதாயிற்று" (43, ப.135)

என்கிறார். இவரும் ஆழ்வார் பாடல்களில் திருக்குறள் எடுத்தாளப் பட்டதையே சான்றுகளாகக் கூறுகின்றார். மேலும் பி.ஆர்.புருஷோத்தம நாயுடு (திருவள்ளுவர் தம் தெய்வக்கொள்கை, 1965), சி.வேங்கடசாமி ரெட்டி (திருக்குறளில் வைணவம், 1974) போன்றோர்களும் மேற்கண்ட ஆய்வுப் போக்கிலேயே கூறியுள்ளனர்.

### 3.2.5 திருவள்ளுவர் வைணவரே

திருக்குறளில் வைணவக் கருத்துகள் பரவலாக உள்ளது என்றும், திருவள்ளுவர் வைணவர் என்றும் உறுதிபடக் கூறும் நோக்கில் 1980-களில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

1985-இல் இரா. கேசவ அய்யங்கார் "வள்ளுவருள்ளம்" என்னும் நூலில்,

"கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டி" என்ற இடைக்காடர் பாடலில் கடல் என்றது பனுவற் பொருளை என்க. பனுவற்றுணிவு என்று திருவள்ளுவர் தாமே கூறியுள்ளார். ஸ்மிருதி பனுவல் என்றும், அதன் துணிவு பனுவல் துணிவு என்றும் கூறப்படும். இருடிகள் பணித்த ஆரிடத் துணிவே திருக்குறள் துணிவு என்ற உண்மையைத் திருக்குறள்தானே

காட்டித் தந்தது. இராமாயணம், பாரதம் முதலிய முந்த நூல்கள் கொண்டுதான் திருக்குறளின் மெய்ப்பொருள் அறிதற்காகும்" (62, ப.1)

என்கிறார். இவர் வடநூல்களையும், சங்க இலக்கியம், சிலப்பதிகாரம், ஆழ்வார் பாடல்களையும் திருக்குறளுடன் ஒப்பிட்டு ஒரு நீண்ட ஆய்வு செய்துள்ளார்.

"வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல" (குறள்.4)

என்னும் கருத்தை,

"வீடணனாயினும் இராவணன்தானே யாயினும் தோழமையில்
வந்தவனை ஒருக்காலும் நான் விடமாட்டேன்"
(இராமா. யுத்.18-34 தமிழ் செய்தது)

என்னும் இராமன் கூற்றுடனும்,

"அனைவர்க்கும் நான் சமன் எனக்கு வெறுக்கப்படுபவனும்
இல்லை விரும்பப்படுபவனும் இல்லை" (கீதை.9-29
தமிழ் செய்தது)

என்ற கண்ணபிரான் கூற்றுடனும்,

"உலக நாயகனாம் உலகமயனாய்ப் பிரமாத்துமாவான
கோவிந்தன்கண் நண்பர் பகைவர் என்ற கதை
எங்ஙனேயோ" (விஷ்ணு புராணம் 1-19-37 தமிழ் செய்தது)

என்ற பிரகலாதாழ்வான் கூற்றுடனும்,

"மதுநின்ற தண்துழாய் மார்பன்
பொதுநின்ற.....
பொன்னங்கழலே தொழுமின் முழுவினைகள்
முன்னங்கழலும் முடிந்து" (மூன்றாந் திருவந்தாதி, 88)

என்ற பேயாழ்வார் கூற்றுடனும் ஒப்பிடுகிறார். மேற்கண்ட சான்றுகளைப் போலப் பல்வேறு சான்றுகளைத் தந்து திருக்குறள் வைணவ கருத்துகளைக் கூறுவதால் திருவள்ளுவர் வைணவர் என்று நிறுவுகிறார். திருக்குறளை வைணவ இலக்கியங்கள் விளக்குவதை மிக விரிவாகக் கூறியவர் இவர் ஒருவரே. திருக்குறளும் வைணவமும் ஒப்பிட்டு ஆராய்ந்த இவர் ஆய்வு திருக்குறள் ஆய்வில் ஒரு விரிவான ஆய்வு எனலாம்.

வைணவ சமயப்புலவர்களும், சங்க இலக்கிய காப்பியப் புலவர்களும், திருக்குறளை நன்கு அறிந்தவர்கள். இவர்கள் திருக்குறள் தொடர்/ கருத்துகளை எடுத்தாண்டிருப்பதில் வியப்பில்லை. மேலும், பரிபாடலில் திருமாலைப் பற்றி மிகத் தெளிவாகப் பாடிய பாடல்களைக் காணலாம். மேலும் வடநூற்கருத்துகளும், திருக்குறள் கருத்துகளும் கருத்து ஒற்றுமை இருப்பதில் வியப்பில்லை. ஏனெனில் சமய நூல்களும் மனித இனம்–நலம் பேணும் விழைவுடையன. திருக்குறளும் மேற்கண்ட குறிக்கோளிலேயே செல்கின்றது. எனவே, திருக்குறளில் மனித வாழ்வு–நலனை முன்னிட்டுக் கடவுள் வாழ்த்துப் பொதுமையாகக் கூறினாலும், அதில் திருமாலைப் பற்றியச் சிந்தனையும் அடங்குவதாகக் கொள்ளலாம். ஆனால், இதனைக் கொண்டு திருவள்ளுவர் வைணவர் என்பது ஏற்கவியலாது.

## 3.3 திருக்குறளில் சைவமும் – வைணவமும்

பழங்காலத்தில் சைவமும் வைணவமும் என்ற பிரிவின்றித் தெய்வ வழிபாடு இருந்ததைச் சங்க இலக்கியப் பாக்கள் அறிவிக்கின்றன. இதனைக்

கருத்தில் கொண்டு, திருக்குறளில் சைவ, வைணவ கடவுளர்களும் அச்சமயக் கொள்கைகளுமே இருந்திருக்க வேண்டுமென்னும் நோக்கில் ஆய்வுகள் வந்துள்ளன.

1979-இல் க. வெள்ளைவாரணம் "திருக்குறளில் சைவமும் வைணவமும்" என்னும் கட்டுரையில்,

> "பல்வேறு சமயச் சார்பினை அடியொற்றித் திருக்குறள் கருத்துகளைக் கூர்ந்து நோக்கும் முறையில் சைவ, வைணவ சமயங்களுக்குச் சிறப்புரிமையுடையனவாக. அமைந்த வழிபாட்டு முறைகளுக்கும் தத்துவ உண்மைகளுக்கும் ஆதாரமாகத் திருக்குறளில் இடம்பெற்றுள்ள பொருட் குறிப்புகளை ஒரு சிறிது நோக்குதல் இன்றியமையாததாகும்"
> (187, ப.244)

என்கிறார். அவர்,

> "செம்பொருள் காண்பது அறிவு" (குறள். 358)

என்பதற்கு,

> "செம்பொருளான சிவம் எனலாமே" (திருமந்திரம். 2573)

என்று பொருள் கூறும்; மேற்கண்ட சான்று திருக்குறளில் சைவக் கருத்துகள் உள்ளன என்பதற்கோர் எடுத்துக்காட்டாகும் என்கிறார். மேலும்,

> "மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
> தாஅய தெல்லாம் ஒருங்கு" (குறள். 610)

என்பதை,

"தாள்ப ரப்பிமன் தாவிய ஈசனை" (திருவாய்மொழி 3,3:11)

என்று கூறுவதைச் சான்றாகத் தந்து திருமால் சமயத்தில் திருவள்ளுவர் கொண்டுள்ள நன்மதிப்பினை நன்குப் புலப்படுத்தல் காண்க என்கிறார்.

திருக்குறளில் சைவ, வைணவக் கருத்துகள் காணப்படுகின்றன என்று குறிப்பிட்டவர் கா. வெள்ளைவாரணர் ஒருவரே, ஆனால், இவர் திருக்குறளுடன் பிற்பட்ட இலக்கியக் கருத்துகளைக் கொண்டு சான்று காட்டுவது ஏற்கவியலாதது.

## 3.4 வைதீகமும் திருக்குறளும்

திருக்குறளில் வேதத்தை அடிப்படையாகக் கொண்டு வள்ளுவர் எழுதியுள்ளார் என்றும் ஆய்வுகள் வந்துள்ளன. உயிர்கள் மோட்சம் அடைய வேண்டுமானால் சில வேதத்தை அடிப்படையாகக் கொள்ள வேண்டும். அவர்கள் பொருள் அல்லவற்றைப் பொருள் எனக் கொள்ளக்கூடாது. காமம், வெகுளி விடுத்து, பிரம்ம ஞானம் பெறவேண்டும். இதுவே சிந்தையும், மொழியுஞ் செல்லாத நிலைமை யுடைய மோட்சம் ஆகும். இம்மோட்சத்திற்குச் சாதனம் வேதம், இவ்வேதாந்தத்தின் வழி நிற்போர் வைதீகர்.

திருக்குறளில் வைதீகக் கருத்துகள் உள்ளன என்று சில ஆய்வுகள் வந்துள்ளன.

1966-இல் டாக்டர் இராதாகிருட்டிணன் "இந்தியர் தத்துவம்" என்னும் நூலில்,

"யோகநூல்கள் திருக்குறள் கூறும் அறங்களை இயமநியமங்கள் என்கின்றன. கொல்லாமை,

இன்னா செய்யாமை, வாய்மை, கல்லாமை, பிறனில் விழையாமை, வெஃகாமை, அழுக்காறாமை, இடுக்கண் அழியாமை, எனப்படும் அறங்கள் பதஞ்சலியின் யோகசூத்திரம் முதலிய சில வைதீக நூல்களிலும் காணப்படுகின்றன. வைதீக சமயத்தின் உட்பிரிவுகளில் ஒன்றாகிய சாங்கியச் சமயத்தைச் சார்ந்தோரும், வேள்விகளில் விலங்குகளைப் பலியிடுவதைத் தீவிரமாக எதிர்த்தனர். வேதங்களில் கூறப்பட்ட வினைமுறைகளை விடக் கொல்லாமை முதலிய அறக்கருத்துகளையே இவர்களும் முக்கியமாகக் கொண்டனர். விலங்கு பலியொன்றை வைத்துக்கொண்டு சமண பௌத்த சமயத்தவர் என்று கொள்ள முடியாது" (272, பக். 353-355)

என்கிறார். இவர் திருக்குறளில் சமண பௌத்தக் கருத்துகள் மட்டும் காணப்படுகின்றன என்பதற்கு மறுப்பாகவே மேற்கண்ட ஆய்வை எழுதியுள்ளார் என்பதை அறியமுடிகிறது.

### 3.4.1 திருக்குறளும் அத்வைதமும்

வேதங்களின் முடிபுகளே வேதாந்தம். இம்முடிபுகளை வாதராயணர் என்னும் வேதவியாச முனிவர் தாம் இயற்றிய வேதாந்த சூத்திரம் என்னும் நூலில் 32-வகை தந்திர உத்திகளுடன் கூறியுள்ளார். இச்சூத்திரம் வேதத்திற்கு முதல் நூல். இவற்றுக்கு உரை கண்டவர் இருபத்தைந்துபேர் ஆவர். அவர்களுள் சங்கரர், இராமாநுசர், மத்வர் ஆகிய மூவரும் உருவாக்கிய அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் என மூன்று பெருஞ்சித்தாந்தங்கள் மட்டும் வளர்ந்து நின்றன.

திருக்குறளை அத்வைதம், துவைதம் ஆகிய இரு சித்தாந்தங்களுடன் மட்டுமே ஒப்பீடு செய்துள்ளனர்.

3.4.1.1 அத்வைதம்

ஆன்மாக்களின் வாழ்க்கையை ஒட்டிய பந்தம், மோட்சம் என்னும் இருநிலைகளும் பொய்யானவை என்பது அத்வைதக் கொள்கையாகும்.

அத்வைதம் போதித்த சங்கரர் காலம் கி.பி. 788-820 ஆகும். இவரின் அத்வைதக் கருத்துகளைத் திருக்குறளுடன் தொடர்புபடுத்தி இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆய்வுகள் வருகின்றன.

1886-இல் நாத்திகர்கள் என்னும் ஒரு குழுவினர் சுதேசமித்திரன் இதழிலும், சிதம்பரம் பிரம்மவித்தியாவிலும் உலகம் சத்தா? அசத்தா? என்ற வினாவை எழுப்பி அசத்தே என்று விடை கூறினர். இவற்றை எதிர்த்தும், உடன்பட்டும் பல ஆய்வுகள் வந்தன.

1939-இல் பி.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி "திருக்குறள் அறத்துப்பால்" என்னும் நூலில்,

> "வேதத்தின் ஞான காண்டத்தாற் சொல்லப்பட்ட பலவகைக் கொள்கைகளுள் வள்ளுவரின் அத்வைதக் கொள்கைகள் சிறிது கூறல் தகும்" (104, ப.26)

என்கிறார். முக்தி என்பது பரமுக்தி, அபரமுக்தி என இருவகைப்படும்.

1. ஜீவன் முக்தியை ஞானகாண்டம்(6.4) கூற, வள்ளுவரும் ஆராவியற்கையைக் (குறள். 370) கூறுகிறார்.

2. பரம முக்தியால் பிரமலோகம்-பிரமாணலோகம் அடைவதை ஞானகாண்டம் (44, 2-3) கூற, வள்ளுவரும் இக்கருத்தைக் (குறள். 358) கூறுகிறார்.

3. அத்தியாயம் (1.1.1)-இல் உள்ள ஞான காண்டத்தினை, எப்பொருள் "எத்தன்மைத்தாயினும்" (குறள். 355) என்ற குறளில் குறிப்பிடுகிறார்.

மேற்கண்ட சான்றுகளைக் குறிப்பிடும் சுப்பிரமணிய சாஸ்திரி அத்வைதக் கருத்துகளுடன் திருக்குறள் மாறுபட்டிருக்கும் கருத்துகளைக் கூறவில்லை.

பின்னர் 1964-இல் ச. கந்தசாமி முதலியார் "வள்ளுவர் நகைச்சுவை, வள்ளுவர் மருந்து, வள்ளுவர் வேதாந்தம்" என்னும் நூலில் திருக்குறளையும் சங்கரரின் தத்துவத்தையும் ஒப்பிடுகிறார். அவர்,

"1. பிரமம் உண்மை, 2. உலகம் பொய், 3. சீவன் பிரம்மமே; வேறல்லன் என்பது சங்கரர் தத்துவம் ஆகும். 1, 2 உண்மைகளை மெய்யுணர்தல் என்னும் அதிகாரத்தில் முதற்குறளில் பொருள் என்றும், 7-ஆம் குறளில் உள்ளது என்றும், 8-ஆம் குறளில் செம்பொருள் என்றும், 9-ஆம் குறளில் சார்பு என்றும் பரம்பொருளைக் கூறுகிறார் வள்ளுவர். மற்ற குறள்களில் உலகம் பொய் என்பதனைத் தெற்றென விளக்குகிறார்" (49, பக். 42-43)

என்கிறார். இவர், திருக்குறளைச் சங்கரரின் தத்துவத்தோடு ஒப்பிட்டு மாறுபட்ட கருத்துகளைக் கூறவில்லை.

இவருக்குப்பின் 1970-இல் வி.எஸ். மணி "வள்ளுவரும் சங்கரரும்" என்னும் கட்டுரையில், வள்ளுவரையும் சங்கரரையும் ஒப்பிட்டுக் கூறுகிறார். அவர்,

> "சங்கரர் நூல்களில் சிவனடியார்களான சம்பந்தர், கண்ணப்பர் முதலிய அருட்செல்வர்களின் வரலாறுகள் காணப்படுகின்றன. ஆனால், வள்ளுவரைப் பற்றிய குறிப்புகள் ஒன்றும் இல்லை. ஆயினும் கொள்கைகள், கோட்பாடுகள் எல்லாம் திருக்குறளைப் பின்பற்றி இருக்கின்றன. நீதிநெறிகளை விளக்கும்போது திருக்குறட்பாக்களுக்கு விரிவுரையாக அழகாக அமைந்துவிடுகின்றன. சங்கரரின் பஜகோவிந்தம் என்ற கற்றோரும் மற்றோரும் விரும்பும் ஒரு நூலை எடுத்துக்கொண்டு எவ்வளவு தூரம் வள்ளுவரை அவர் பின்பற்றுகிறார்? எவ்வளவு அழகாகத்திருக்குறளுக்கு வியாக்கியானம் செய்கின்றார் என்று பார்ப்பதே இக்கட்டுரையின் நோக்கம்" (160, ப.6)

என்கிறார். இவர்,

> "இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்
> வேண்டாமை என்னும் செருக்கு" (குறள். 180)

என்னும் குறளை,

> "பணம் வேண்டும் இன்னும் வேண்டும் என்று தீராத தாகத்தை விட்டுவிடு. ஏ, மூடனே அதைச் சத்ருவாக எண்ணி வெற்றிகொள்வாய்; உள்ளம் திருப்தியான நிலையில் நிற்கச் செய்வாய்; உன் சொந்த

உழைப்பினால் சம்பாதிக்கும் பொருளைக் கொண்டு
அதை அனுபவித்துத் திருப்தி பெறுவாய்" (சங்கரர்)

என்று சங்கரர் எடுத்தாளுவதைக் கூறுகிறார். ஒத்தக் கருத்துகளை மட்டுமே குறிப்பிடும் வி.எஸ். மணி, சங்கரருடன் திருவள்ளுவரைத் தொடர்புபடுத்த முயன்றுள்ளதைக் காணமுடிகிறது.

3.4.1.2 அத்வைதம் மறுப்பு

அத்வைதத்தைத் திருக்குறளுடன் ஒப்பிட்டு ஒத்த கருத்துகளை எழுதிய ஆய்வுகளை மறுத்தும் எழுதியுள்ளனர்.

1960-இல் ஆல்பர்ட் சுவைட்சர் "இந்தியர் சிந்தனையும் அதன் வளர்ச்சியும்" என்னும் நூலில்,

> "உலகமாயை என்ற கருத்தும், அத்வைதக் கொள்கையும் குறளில் இல்லை. உயிர்கள் பலமுறை பிறக்கின்றன. இச்சூழலினின்றும் அவை விடுதலையடைதல் வேண்டும் என்பன வள்ளுவரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட கருத்துகளே"
>
> (262, ப.202)

என்கிறார். அத்வைதக் கருத்து முற்றிலும் திருக்குறளில் இல்லை என்று கூறிவிட முடியாது. ஆங்காங்கே சில ஒற்றுமையுடையவையாய் இருத்தலும், வேறுபட்டவையாய் இருத்தலும் கூடும்.

3.4.2 துவைதம்

துவைதம் என்பது ஆன்மாக்களின் வாழ்க்கையை ஒட்டிய, பந்தம், மோட்சம் என்னும் இரு நிலைகளும் மெய்யான நிலைகளே என்பது துவைதவாதங்களின் துணிவாகும்.

துவைதம் போதித்த மத்வர் வாழ்ந்த காலம் கி.பி.118-ஆம் ஆண்டாகும். இவர் எழுதிய நூல்கள் முப்பத்தேழு. இவர் கொள்கைகளுடன் திருக்குறளை ஒப்பிட்டுப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஆய்வுகள் வந்துள்ளன.

1886-இல் சுதேசமித்திரனிலும், சிதம்பரம் பிரம்ம வித்தியா என்னும் இதழிலும் உலகம் சத்தா? அசத்தா? என்ற ஆய்வு தொடங்கியது. இதிலிருந்து ஜெ. சோமசுந்தர நாயக்கர், முருகவேள் என்னும் துவித சைவர் நாகை நீலோசனிப் பத்திரிகையில் துவைதக் கருத்துகளைத் திருக்குறளுடன் ஒப்பிட்டு எழுதினர்.

1898-இல் துவிதமததிரங்காரி "முதற்குறள் வாத நிராகரணம்" என்னும் நூலில்,

"தமிழ்நாட்டில் சைவசித்தாந்திகள் எனப்படுஞ் சிலர் வைதீக சம்பந்தமுள்ளதும், அத்துவித ஞானத்துக்குச் சாதனமானதுமான பேதஞானத்தையும் கைவிட்டு வைதீக சம்பந்தமே தமக்கு வேண்டாம் என வெறுத்து இகழ்ந்து, தந்திர வழியே நின்று அதன் வேதஞானமே தமக்குரியது எனக் கொண்டதோடு அத்துவித ஞானத்தில் சங்கை செய்யவும் தொடங்கினார்கள். இப்படிச் செய்துவந்த வாதத்தில் திருக்குறளின் முதற்செய்யுளைப் பற்றி வாதம் நிகழ்ந்தது. அச்செய்யுளில் மற்ற எழுத்துகளுக்கு, அகரம் நிமித்த காரணம் என்றும், அங்ஙனமே உலகுக்குப் பகவன் கேவலம் நிமித்தகாரணம் என்றும் பூர்வபட்சியார் கூற, யாம் மற்ற எழுத்துகளுக்கு அகரம் முதற்காரணம் என்றும், அங்ஙனம் உலகுக்குப் பகவன் முதற்காரணம் என்றும் கூறி மறுத்தாம். இவ்வாதம் இதனோடு நில்லாது பாஷை,

இலக்கணம் தவிதசத்துவங்களையும் வேறு விஷயங்களையும்
பேச இடந்தந்துவிட்டது" (138, ப.4)

என்கிறார். இவர் திருக்குறளில் அத்வைதக் கருத்துகள் உள்ளன என்பதற்கு,

"அகர உயிரின்றேல் அக்கரங்களின்றாம்" (சிவஞானபோதம்.2)
"....... அகரம் போல நின்றனன்
சிவனுஞ் சேர்ந்தே" (சிவஞான சித்தி.2)

என்ற பாடல் அடிகளைத் திருக்குறள் முதற்குறளுடன் ஒப்பிடுகிறார்.

இவ்வாய்வுக்குப் பின்னர்த் திருக்குறளைத் தவைதக் கருத்துகளுடன் ஒப்பிடும் முயற்சி திருக்குறள் ஆராய்ச்சி வரலாற்றில் மேற்கொள்ளப் படவில்லை. நிறைவாக வேதமதங்களைத் திருக்குறளுடன் ஒப்பிட்ட ஆய்வின் முடிவைப் பின்வருமாறு கூறலாம்: வைதீகக் கருத்துகள் சில திருக்குறளுடன் ஒத்து வருகின்றன. ஆனால், சில முரண்பட்ட கருத்துகளும் உண்டு. நியாயம், வைசேடிகம் முதலியவற்றிற்குரிய சிறப்பான கொள்கைகள் திருக்குறளில் காணப்படவில்லை. வீடுபேறு, வீட்டுநெறி பற்றிய கொள்கைகளிலும் இவ்விரண்டுக்கும் வேறுபாடு உண்டு. வேறு வைசேடிகளின் அணுக்களைக் குறித்த கொள்கையோ சாங்கியரின் புருடன் பிரகிருதி குறித்த தத்துவக் கருத்துகளோ குறளில் இல்லை. ஆகவே, வள்ளுவர் வேதக் கருத்துகளை அறிந்து தம் குறளில் எழுதியிருக்கலாம். ஆனால், வைதீக சமயத்தவராக இருந்திருக்க மாட்டார்.

### 3.5 சமணமும் திருக்குறளும்

ஜன்ம வெற்றி பெற்ற ஜீனர்கள் போதித்த மதம் சமணமதம், பௌத்த மதத்திற்கு இது முந்தியது. சமண சமயத்தின் இருபத்து நான்கு

தீர்த்தங்கரர்களுள் ரிஷபதேவர் முதல்வராவார். தீர்த்தங்கரர்களுள் இறுதியானவரான வர்த்தமான மகாவீரர் (கி.மு. 599-527) சமணக் கொள்கையை நாடெங்கிலும் பரவச் செய்தார். சந்திரகுப்தர் காலத்தில் வடக்கே பஞ்சம் ஏற்பட, சமணர்கள் சந்திரகுப்தர், குருபத்திரபாகு என்பவருடன் தெற்கு நோக்கி மைசூரில் சிரவண பெல்குலாவில் தங்கி மதத்தைப் பரப்பினர். தமிழ்நாட்டில் சேர, சோழ, பாண்டியர், பல்லவர் நாடுகளில் சமண சமயம் ஆதிக்கம் பெற்றது. கி.பி. 7-ஆம் நூற்றாண்டு வரை சமணசமயம் தமிழகத்தில் செழிப்பாக இருந்தது. திருக்குறளும் சற்றேறக்குறைய இக்கால கட்டத்தில் தோன்றியிருக்க வேண்டும். திருக்குறளின் கருத்துகள் சமணக் கொள்கைகள் சிலவற்றுடன் ஒற்றுமையாயிருப்பதைக் கொண்டு திருக்குறள் சமண நூல் என்றும், திருவள்ளுவர் சமணர் என்றும் ஆய்வுகள் இருபதாம் நூற்றாண்டிற்குப் பின்னர் வெளிவந்தன.

### 3.5.1 கடவுள் பெயர்கள்

திருக்குறளில் இடம்பெறும் கடவுள் பெயர்கள் சமணக் கடவுளே என்று ஆய்வுகள் வந்துள்ளன.

1964-இல் டி.எஸ். ஸ்ரீபால் "திருக்குறள் வாழ்த்தும் ஆதிபகவன்" என்னும் நூலில்,

> "பழைய வடமொழிச் சுலோகமொன்று முதற்குறள் போன்ற அமைப்பிலேயே தீர்த்தங்கரர்கள் விருஷப தேவரை முதலாக உடையர் என்ற கருத்தைத் தெரிவிக்கின்றது. எழுத்துகள் அகரத்தை முதலாக உடையன. தீர்த்தங்கரர்கள் விருஷப தேவரை முதலாக உடையர்" (196, ப.25)

என்கிறார். இதற்கு,

"காணிலந்தோயாக் கடவுளை" (நாலடி. 2)

என்னும் பாடல் போன்று,

"மலர்மிசை ஏகினான்" (குறள். 3)

என்னும் குறளில் கூறுவதால் வள்ளுவர் குறிப்பிடும் கடவுள் சமணக் கடவுளே ஆகும் என்கிறார்.

இவர்க்குப் பின் 1980-இல் எஸ். இராமகிருட்டிணன் "திருக்குறள் சமுதாயப் பார்வை" என்னும் நூலில்,

"வள்ளுவர் சமணரே ஆயினும் திருக்குறள் சமணக் கொள்கைகளைப் பரப்புவதற்காகவே படைக்கப் பெற்ற நூலன்று. சைவத்துக்குத் தேவார, திருவாசகங்களும், வைணவத்துக்குத் திவ்விய பிரபந்தமும், அமைந்திருப்பதைப் போல், சமண நெறி விளக்கமாகத் திருக்குறள் அமையவில்லை" (31, ப.21)

என்கிறார். மேலும், எண்குணத்தான் என்பது அருகன் நாமமாகச் சிலப்பதிகாரத்திலும் (சிலப்.10, 188), சீவகசிந்தாமணியிலும் (சீவக.2600), வருகின்றது. மலர்மிசை நடந்தோன் என்று சிலப்பதிகாரமும் (சிலம்பு. 10-204), பேசும். விரிபூந்தாமரை மேற்சென்ற திருவடியைச் சீவகசிந்தாமணி (சீவக.2814), சூளாமணி (1909) ஆகிய நூல்களில் காணப்படுகின்றன என்று ஒப்பிடுகிறார்.

### 3.5.1.2 சமணக் கொள்கைகள்

திருக்குறளைச் சமண மதக்கோட்பாடுகளைக் கூறும் இலக்கியங்களுடன் ஒப்பிட்டுத் திருவள்ளுவர் சமணரே என்று 1930-களுக்குப் பிறகே ஆய்வுகள் வெளிவந்தன.

1932-இல் அ. சக்கரவர்த்தி நயினார் "திருக்குறள் ஆராய்ச்சியும் ஜைன சமய சித்தாந்த விளக்கமும்" என்னும் நூலின் முன்னுரையில்,

"குறளாசிரியர் தம்முடைய கருத்துகளை வைதீக இந்து மதத்திலிருந்து பெற்றாரென்றும், அவருடைய நூல் சமஸ்கிருதத்திலுள்ள போதாயனருடைய தர்மசாத்திரம், கௌடில்யருடைய அர்த்தசாத்திரம், வாத்சாயனாருடைய காமசூத்திரம் ஆகியவற்றின் மொழிபெயர்ப்பு என்றும் கூறப்பட்டன. இந்தக் கொள்கை எவ்வளவு பொருத்தமற்றது என்பது வைதீக தருமத்தைப் பற்றிச் சிறிது தெரிந்தவருக்கும் நன்கு விளங்கும்" (72, ப.17)

என்கிறார். மேலும், போதாயனருடைய தர்மசாத்திரம் வைதீகத்தின் தருமத்தை முற்றிலும் அடிப்படையாக உடையது. அது அகிம்சா தருமத்திற்கு எதிரானது. மனு, கௌதமர் ஆகியோர்கள் கூறியிருக்கும் நான்கு வருணத்தாருடைய தொழில்களையும் போதாயனர் கூறுகிறார். ஆனால், குறளோ இதன் கருத்தில் முற்றிலும் மாறுபட்டது. சமண சமயத்தின் கொள்கைகளை உடையது என்கிறார்.

இதே நூலின் ஆசிரியர் தி. அனந்த நயினார் விரிவான விளக்கம் தந்து திருக்குறளின் உட்கிடையாகப் பொதிந்திருப்பது சமணமே என்கிறார். இவர்,

"திருக்குறளின்கண் கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, களவியல், கற்பியல் முதலான பல நீதிகளையும், நான்கு புருஷார்த்தங்களுக்குரிய அநேக தத்துவங்களையும் 133 அதிகாரங்களில் விளக்கித் திருக்குறள் என்னும் நூலைச் செய்தருளியவர் பிராகிருதம் வடமொழி, தென்மொழி முதலான சாத்திரங்களில் அபார ஆராய்ச்சியுடைய ஞானியாகவும், தத்துவ சாத்திரங்களில் நிபுணராகவும் யோகீந்திரராகவும் இருந்திருக்க வேண்டும் என்பதில் யாதொரு ஐயமும் இல்லை. இத்தன்மையுள்ள மகாத்மா தமக்குள் ஒரு சமயக் கடவுளை நிச்சயித்துக் கடவுள் வாழ்த்து கூறியிருப்பாரே ஒழியப் பல சமயக் கடவுள்களை வணங்கியிராரென்பது அறிஞர்கள் ஒப்புக்கொள்ளக் கூடிய விஷயம்" (16, ப.24)

என்கிறார். இன்னும் ஜைனரால் செய்யப்பட்ட நாலடியார், பழமொழி, அறநெறிச்சாரம், ஏலாதி, சிறுபஞ்சமூலம் முதலான நூல்களிலுள்ள கருத்துகள் திருக்குறளில் பூர்ணமாக விளங்குகின்றன. சீவக சிந்தாமணி, சூளாமணி, மேருமந்தபுராணம், திருக்கலம்பகம், திருநூற்றந்தாதி, அருங்கலச் செப்பு முதலானவைகளிலுள்ள ஜைன சமயக் கோட்பாடுகளும், மற்றுமுள்ள நீதிநூல் கருத்துகளும் திருக்குறளில் அமைந்திருக்கின்றன என்கிறார்.

மேலும், புத்தர் கொல்லாமையை உபதேசித்தார் எனினும் கொன்று தந்த மாமிசத்தை வாங்கிப் புசிக்கலாம் என்றார்.

திருக்குறளோ,

"தினல்பொருட்டால் கொல்லாது உலகெனின்" (குறள். 256)

என்று பௌத்த சமயக் கொள்கையைக் கண்டித்தும், "கொல்லான் புலாலை" என்னும் குறளால் ஜைன சமயக் கொள்கையை விளக்கியிருக்கின்றார். இவற்றை அனுசரித்தே திருத்தக்கதேவரும், சீவக சிந்தாமணி 1236-ஆம் கவியின் அடியில்,

"இறைவனூற் காட்சிக்கொல்லா ஒழுக்கமுன் னுறுத்தல்"

(சீவக. 1236)

என்று கூறியிருக்கின்றார். இவற்றை ஆராயுமிடத்து வள்ளுவர் ஜைனர் என்பது உறுதியாகச் சொல்லக்கூடும் என்கிறார்.

தொடர்ந்து இதே நூலில் திரு.வி. கலியாணசுந்தரனார், டி.ஆர். சீனிவாசாச்சாரி, வீ. ஆறுமுகஞ்சேர்வை போன்றோரும் திருக்குறள் சமண நூலே என்கின்றனர்.

### 3.5.2 குறளில் சமணம் மறுப்பு

திருக்குறளில் சமண மதக்கருத்துகள் இல்லை என்று மறுப்பான ஆய்வுகள் பல வந்துள்ளன.

1956-இல் வெ. சு. சுப்பிரமணியாச்சாரி "திருக்குறளும் காலமும்" என்னும் நூலில்,

"சைனப் பெண்கள் அருகனைத் தொழுது பஞ்ச பரமேட்டிகளைப் பூசித்துக் கணவனைப் பேணினால் தேவகதியடைகின்றார்கள் என்று ஜைன நூல்கள் கூறுகின்றன. குறளாசிரியரோ

தெய்வம் தொழாதவளாகிக் கணவனைத் தொழுதல்
வேண்டும் என்று விதித்துள்ளார். எனவே, வள்ளுவர்
ஜைனரல்லர்" (109, ப.4)

என்கிறார். இதற்குச் சில சான்றுகளைத் தருகிறார். அவை பின்வருமாறு,

"கதிகளைக் கடந்து செல்வார் காரிகையர்கள் செல்லார்"
(மேரு. 737)

"அருகனைச் சரணமூழ்கி ஆன்றவர்ச் சிறப்புச் செய்து
கருதிநற் கணவர்பேணும் கற்புடை மகளிர்" (மேரு.739)

என்று சமண நூல்கள் கூற, வள்ளுவரோ,

"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்எனப் பெய்யும் மழை" (குறள். 55)

என்கிறார்.

தொடர்ந்து 1965-இல் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் "சமணத் தமிழ் இலக்கிய வரலாறு" என்னும் நூலில்,

"வள்ளுவர் சமணர் என்றோ சமணர் அல்லர் என்றோ
ஆய்ந்து திட்டமாகக் கூறமுடியவில்லை" (169, ப.40)

என்கிறார். மேலும்,

"அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின்" (குறள். 259)

என்னும் குறள் வைதீக நெறியை மறுப்பதாகவும், சமணத்தை ஆதரிப்பதாகவும் பலர் கொள்வர். இக்குறள் வைதீகச் சமயத்தையும்,

வேத வேள்விகளையும் எதிர்ப்பதாகக் கொள்ளப்பட வேண்டியதில்லை. மனுஸ்மிருதியில் 5-ஆம் சூத்திரத்தில் இதே கருத்து வருகின்றது என்கிறார். (169, பக்.40-41) மேற்கண்ட ஆய்வானது திருக்குறள் சமணமத நூல் என்று உறுதியாகக் கூறமுடியாது என்ற நோக்கில் செல்கிறது.

## 3.6 பௌத்தமும் திருக்குறளும்

பௌத்த மதத்தை தோற்றுவித்தவர் புத்தர். தமிழ்நாட்டில் இம்மதம் கி.மு. 270-233-ஆம் ஆண்டுகளில் பரவியது. அசோகரது கால கல்வெட்டுகள், அப்பேரரசர் பௌத்த மதக் கொள்கைகளைச் சோழ பாண்டிய நாடுகளில் பரப்பியதைக் குறிக்கின்றன.

தமிழகத்தில் பரவிய பௌத்த சமயக் கொள்கைகள் திருக்குறளில் இருக்கவேண்டுமென்று ஆய்வுகள் வந்துள்ளன.

பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் தமிழகத்தில் இந்துக்கள் பலர் புத்தமதத்திற்கு மாறியுள்ளனர். குறிப்பாக அயோத்திதாஸ் தலைமையில் பல மக்கள் புத்தமதத்திற்கு மாறியுள்ளனர். அவர் திருக்குறளையும் புத்தமதத்தையும் ஒப்பிட்டும் கூறியுள்ளார். தம்ம பதத்திலுள்ள திரிபிடகம் போன்று திருவள்ளுவரும் திரிகுறள்-திருக்குறள் என்று எழுதியுள்ளார் என்கிறார். (4-அ, ப.3)

1950-களுக்குப் பிறகு திருக்குறளில் பௌத்தமதக் கருத்துகள் காணப்படுகின்றன என்று ஆய்வுகள் வந்துள்ளன.

1966-இல் மயிலை சீனி. வெங்கடசாமி "பௌத்தமும் திருக்குறளும்" என்னும் கட்டுரையில்,

"ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் மதக்கருத்துகள் திருக்குறளில் உள்ளன என்று கூறுகின்றனர். எல்லாச் சமயத்திற்கும் பொது-நூலாக விளங்குகின்ற திருக்குறளிலே பலசமயக் கருத்துகளும் காணப்படுவது இயல்பே. பௌத்த சமயக் கருத்துகளும் திருக்குறளில் காணப்படுகிறதை இங்கு ஆராய்ந்து காண்போம்"
(259, ப.49)

என்கிறார். இதற்குச் சான்றாக,

"தர்மத்தை நன்கு அறிந்து அதன்படி நடப்பவர்கள் கடத்தற்கு அரிதான சாவு என்னும்இடத்தைக் கடந்து அப்பால் இருக்கின்ற மறுகரையைச் சேர்கிறார்கள்" (தம்மவக்கோ.10, செய்.11)

என்பது,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்
இறைவன் அடிசேரா தார்" (குறள். 10)

என்னும் குறளில் உள்ளது என்கிறார். இதுவே திருக்குறளைப் புத்தமத நூலுடன் இணைத்துப் பார்த்த முதல் முயற்சி ஆகும்.

தொடர்ந்து 1970-இல் சு. சாலமன் பாப்பையா "திருக்குறளும் தம்மபதமும்" என்னும் நூலில்,

"குறளை விமர்சனம் செய்வதை நாம் பெருக்குகின்றோம் என்றால் அதை ஒரு சமயநூலாகக் கருதுகிறோம் என்று பொருளாகும். ஆம்; மெல்ல மெல்லச் சமய நூலாகிக் கொண்டிருப்பது திருக்குறள்; புத்த சமயத்தின் நூலாகிவிட்டது தம்மபதம்" (90, ப.13)

என்கிறார். 'பேதைமை' (குறள்.84), 'புல்லறிவாண்மை' (குறள்.35)

என்ற குறட்பாக்களுக்கு ஒப்பான கருத்துகள் தம்மபதத்தில் (பாலவர்க்கம். 5) உள்ளது என்று ஒப்பிடுகிறார்.

தொடர்ந்து திருக்குறளையும் தம்மபதத்தையும் ஒப்பிட்டு மிகவிரிவாக ஆராய்ந்த பெருமை சோ.ந. கந்தசாமியைச் சாரும்.

இவர் 1977-இல் "திருக்குறள் கூறும் உறுதிப் பொருள்" என்னும் நூலில்,

> "வள்ளுவர் காலத்தில் சைவ, வைணவ சமயத் தத்துவங்கள் முற்றிய நிலையில் இல்லை. இவ்விரு சமயங்களைப் பற்றிய அடிப்படை நூல்கள் கூட வள்ளுவர் காலத்தில் எழுதப்பட்டதாகத் தெரியவில்லை. திருக்குறளுக்கு முற்பட்ட சமணநூல்கள் போதிய அளவில் கிடைக்கவில்லை. பௌத்த நூல்களே மிகப் பலவாகக் கிடைத்துள்ளன. சமண பௌத்தம் தோழமை நெறிகளாதலின் பல பொதுத்தன்மைகளைப் பெற்றிருத்தல் இயல்பே. எனினும் பௌத்தத்திற்கு மட்டுமே உரிய பல விழுமியச் சிந்தனைகள் திருக்குறளில் இடம் பெற்றுள்ள திறத்தினை இந்நூல் உறுதிப்படுத்துகிறது" (48, ப.8)

என்கிறார். முதன் முதலில் சூதினைக் கண்டித்தவர் புத்தர் பிரானே. சுத்தபிடகம் தேவிஜ சுக்தத்தில் சூதினைக் களைய வேண்டுகிறார். இதே போன்று திருவள்ளுவரும் சூதினை வெறுத்துக் கூறுகிறார்.

பகையை அன்பினால்தான் தணிக்க முடியும். இதுவே பழைய அறம் என்று தம்மபதம் கூற, வள்ளுவரும் 'பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடையாளன்' (குறள். 874) என்கிறார். மேலும், பல சான்றுகளைத் தந்து திருக்குறளில் பௌத்தக் கருத்துகள் இருப்பதை நிறுவுகிறார். என்றாலும், சோ.ந. கந்தசாமிக்குப் பிறகு இவ்வாய்வு விரிவாக மேற்கொள்ளப் படவில்லை.

## 3.7 சமணமும் பௌத்தமும்

திருக்குறளைச் சமண நூலாகவும், பௌத்த நூலாகவும் கருதி தனித்தனியே ஆய்வு மேற்கொண்டனர் ஒரு பிரிவினர். திருக்குறளில் சமண, பௌத்தக் கருத்துகள் இரண்டுமே உள்ளன என்றும் ஒரு சிலர் ஆய்வு மேற்கொண்டுள்ளனர்.

1920-இல் பிப்ரவரி இருபத்தைந்தாம் நாள் சாத்தூர் ஸ்ரீமான் விசுவநாத பாரதியார் "திருக்குறள் பிரசங்கம்" என்னும் நூலில்,

> "சிலர் பௌத்தர்களுக்கு மெய்யுணர்வு வேண்டியதில்லை என்றும், அதனை அவசியம் என்று குறள் கூறுவதாகவும் எடுத்துக்கூறி வள்ளுவரை இந்து என்றனர். அது முற்றிலும் பிசகு. பௌத்தர் களுக்கும் மெய்ப்பொருள் உணர்ச்சி உடன்பாடே என்பதைத் திரிபிடகத்திலும் மணிமேகலையாகிய நூல்களில் காணலாம்."
>
> (16, பப. 25-46)

என்கிறார். இவர் மெய்யுணர்வு சமண மதத்திற்கு மட்டுமின்றி பௌத்த மதங்களிலும் உண்டு என்று குறிப்பிட்டுத் திருக்குறளில் சமண பௌத்த மதக் கருத்துகள் காணப்படுகின்றன என்கிறார்.

தொடர்ந்து 1974-இல் மயிலை சீனி வெங்கடசாமி "திருக்குறளில் பௌத்தமும் சமணமும்" என்னும் கட்டுரையில்,

> "திருக்குறளில் மத சம்பந்தமான கருத்துகள் அதிகம் இல்லை. ஆனாலும் சில குறட்பாக்களில் மத சம்பந்தமான கருத்துகள் காணப்படுகின்றன. திருவள்ளுவர் திருக்குறளை எழுதின காலத்திலே மதக் கருத்துகளும் திருக்குறளில் இடம் பெற்றுள்ளன.

முக்கியமாகக் கடவுள் வாழ்த்திலே பௌத்த சமண சமயக்கொள்கைகள் காணப்படுகின்றன" (186, ப.69)

என்கிறார். அவர் 'அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்கு(குறள்.8) என்ற குறளிலும், "அறக்கதிராழி திறப்பட உருட்டி" (மணி. 5:77), "ஆழி முதல்வோன் அறவாழி ஆள்வோன்" (மணி. 10:61) என்னும் பாடல்களிலும் சமண பௌத்தக் கடவுள் பெயர்களே குறிப்பிடப்பட்டுள்ளன என்று ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

## 3.8 திருக்குறளில் சமணம் - பௌத்தம் மறுப்பு

திருக்குறளில் சமண - பௌத்தக் கருத்துகள் காணப்படுகின்றன என்னும் ஆய்வுக்கு முரணாக மறுப்பாய்வுகளும் வந்தன.

1966-இல் ஆல்பர்ட் சுவைட்சர் "இந்தியர் சிந்தனையும் அதன் வளர்ச்சியும்" என்னும் நூலில்,

"பொதுவாக இந்தியர்கள் அல்லது இந்தியச் சமயநூல்கள், உலகையும் வாழ்க்கையும் மறுத்தல் என்ற உலக நோக்கைப் பெரும்பாலும் பின்பற்றுபவர்களாயிருக்கத் திருக்குறளோ பெரும்பாலும் உலகையும் வாழ்க்கையையும் ஏற்றல் என்ற நோக்கையே பின்பற்றுகிறது. பௌத்த சமண அறங்களோ உலகையும் வாழ்க்கையையும் அறுத்தல் என்னும் அடிப்படையிலிருந்தே தோன்றின. சமணரால் சிறப்பிக்கப்படும் கொல்லாமை, இன்னாசெய்யாமை முதலியனவும் பௌத்தரின் சீலங்களும், எதிர்மறை அறங்களாக துல்லவா காணப்படுகின்றன. வள்ளுவர் இத்தகைய எதிர்மறை அறங்களையும் தன் நூலில் கூறினாரெனினும்,

அன்புடைமை, இனியவை கூறல்.... போன்ற
உடன்பாட்டறங்களையும் கூறினார். இத்தகைய
உடன்பாட்டறங்கள் பௌத்த, சமண நூல்களில்
இவ்வளவு தெளிவாகக் கிடையாது" (262, பப.200-205)

என்கிறார். மேற்கண்ட சான்றுகளைக் கொண்டு திருக்குறள் பௌத்த-சமண நூல்களிலிருந்து முரண்பட்டுள்ளது என்ற கருத்தை முன்வைக்கிறார்.

பின்னர், 1968-இல் பெ. கோவிந்தன் "தமிழர் சமயம்" என்னும் நூலில் திருக்குறளில் சமண பௌத்தக் கொள்கைகள் கிடையாது என்கிறார் (71, ப.156).

"அகர முதல எழுத்தெல்லாம்" (குறள். 1), "இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின்" (குறள். 1062), என்னும் குறட் கருத்துகளுக்கு முரணாக, புத்த சமணக் கொள்கைகள் உள்ளன. குறிப்பாக, உலகம் நிலஅணு, நீர்அணு, நெருப்பணு, வளியணு என்ற நான்கணுக்களாலானது; கடவுளால் படைக்கப் படுவது அன்று என்று புத்த சமணக் கொள்கைகள் இருக்கின்றன என்கிறார்.

தொடர்ந்து 1973-இல் இரா. சாரங்கபாணி "குறள் விருந்து" என்னும் நூலில் சமண, பௌத்தக் கொள்கைகள் இரண்டையும் திருக்குறளுடன் ஒப்பிட்டு ஒற்றுமை, வேற்றுமைகளைக் கூறுகிறார். (85, ப.42)

திருவள்ளுவர் சமணரல்லர் என்பதற்குச்சில சான்றுகளைத் தருகிறார். அவை,

"1. இல்லறத்தினும் துறவறமே சீரிது என்று சமணர் கூற,
"அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின்" (குறள்.46),

"அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை" (குறள். 49)
என்று குறள் கூறும்.

2. தேன் உண்பது பாவம் என்று கூற, வள்ளுவர்
"பாலொடு தேன் கலந்தற்றே" (குறள். 1121)
என்று குறளில் கூறுகிறார்.

திருவள்ளுவர் பௌத்தரல்லர் என்பதற்குப் பின்வரும் சான்றைத் தருகிறார்.

கொன்றுதான் புலாலை உண்ணக்கூடாது என்பதை மணிமேகலை, "மூத்துவிளி மாவொழித்து எவ்வுயிர் மாட்டும் தீத்திறம் ஒழிக" (மணி. 16; 115-116) என்று கூற, வள்ளுவர் கொல்லுதலையும், ஊன் மிசைதலையும் பற்றிக்கருத்து முரண் கொள்கிறார்.

மேற்கண்ட ஆய்வுகள் அனைத்தும் திருக்குறளுடன் பௌத்த சமண நூல்கள் ஒத்த கருத்துகளுடனும், மாறுபட்ட கருத்துகளுடனும் உள்ளதை இரு கோணங்களில் வெளிப்படுத்தியுள்ளன.

நிறைவாக, திருக்குறள் சமண பௌத்த நூல் என்பது ஏற்க வியலாது. ஏனெனில் திருவள்ளுவர், திருக்குறளில் அருகக் கடவுளையோ, மகாவீரரையோ, புத்தரையோ குறிப்பிடவில்லை. மேலும், திருக்குறள் உலக வாழ்க்கையை ஏற்றல் என்ற நோக்கையே பின்பற்ற, பௌத்த சமண அறங்கள் உலகையும் வாழ்க்கையையும் ஒறுத்தல் என்னும் அடிப்படையிலேயே தோன்றின.

## 3.9 கிறித்தவமும் திருக்குறளும்

உலகத்திலுள்ள பல்வேறு மதங்களுள் ஒன்று கிறித்தவம். இது, இரண்டாயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்னர் பாலஸ்தீனத்திலுள்ள கலிலியோவில் நாசரேத்து என்ற சிற்றூரில் வாழ்ந்த இயேசு பெருமானால் தோற்றுவிக்கப்பட்டது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேலை நாட்டிலிருந்து தமிழகம் வந்த ஜி.யு. போப் திருக்குறளைக் கற்று, அதற்கு உரையும் எழுதினார். அவர் திருக்குறளின் கருத்துகள் கிறித்துவக் கருத்துகளுடன் ஒத்தனவாக உள்ளதைக் குறிப்பிட்டார். இதுவே திருக்குறளைக் கிறித்தவத்துடன் ஒப்பிடக் காரணமாயிற்று.

1969-இல் மு. தெய்வநாயகம் "திருவள்ளுவர் கிறித்தவரா?" என்னும் நூலில்,

> "வள்ளுவரை ஒவ்வொரு சமயத்துடனும் ஒப்பிட்டுக் கடைசியாகக் கிறித்துவத்துடனும் ஒப்பிட்டுக் காணும் காரணத்தாலும், திருவள்ளுவருக்கும் கிறித்தவருக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை எனப் பெரும்பாலோர் எண்ணுவதை ஏற்றுக் கொள்ளாத காரணத்தாலும் இதற்கு இத்தலைப்புக் கொடுக்கப்படுகின்றது"
>
> (139, ப.11)

என்கிறார். அவர் தரும் சான்றுகள் சில;

"ஆதிபகவன் முதற்றே உலகு" (குறள். 1)

என்று குறள் கூறும் கடவுட் கருத்து,

"ஆதியிலே பகவன் வானத்தையும் பூமியையும் படைத்தார்"
(ஆதியாகமம் 1-ஆம் அதிகாரம் முதல் வாக்கியம்)

"அவர் மூலமாய் உண்டாயிற்று. உண்டானது ஒன்றும்
அவரை அல்லாமல் உண்டாகவில்லை" (யோவான், 1:3)

என்னும் கிறித்தவ கடவுட் கருத்துடன் ஒற்றுமையுடனிருப்பதைக் கூறுகிறார்.

மு. தெய்வநாயகம் தொடங்கி வைத்த இவ்வாய்வு மேலும், புதிய கருத்துகள் நிறைந்த கோணங்களில் ஒப்பிடப்பட்டன.

1970-இல் ஆபிரகாம் அருளப்பன் "திருக்குறளும் கிறித்தவ மறையும்" என்னும் கட்டுரையில்,

"கிறித்துப் பிறப்பின் பல நூற்றாண்டுக்கு முன்னர் யூதர் குரு மோசே மூலம் இறைவனிடமிருந்து வந்த சட்டங்கள் பத்தையும் அறிந்து கடவுள் வாழ்த்து, புதல்வரைப் பெறுதல்..... வெஃகாமை என்னும் அதிகாரங்களில் சிறப்பாகவும், பிற விடத்தில் பொதுவாகவும் திருக்குறள் விரித்துரைத்துக் காணப்படினும், திருவள்ளுவர் அவற்றை அறிவதற்கு வழியுண்டா? கி.பி. முதலாம் நூற்றாண்டில் ஏசு பெருமான் தொண்டர் புனிதத் தோமையர் சென்னைக்கு வந்தது வரலாற்று உண்மை என்பதற்குப் புனிதத் தாமசுகுன்றம், புனித தேவாலயம் போன்றன சான்று பகர்வர்" (18, ப.158)

என்கிறார். இவர் இயேசு கிறித்துவிற்கும் - திருக்குறளுக்கும் தாமசு குன்றத்தைத் தொடர்பு படுத்துகிறார்.

தொடர்ந்து 1971-இல் மு. தெய்வநாயகம் "நீத்தார் யார்"? என்னும் நூலில்,

"நாம் காணும் கிறித்தவக் கருத்துகள், வள்ளுவக் கருத்துகளுடன் முழு அளவில் ஒப்புமையுடையனவாக விளங்குகின்றன. (140, ப.70)

என்கிறார்.

"தம்மையே வெறுமையாக்கி அடிமையின் தன்மை பூண்டு மனிதருக்கு ஒப்பானார். மனித உருவில் தோன்றித் தம்மைத் தாழ்த்திச் சிலுவைச் சாவை ஏற்கும் அளவிற்குக் கீழ்படிபவர் ஆனார். அதனால்தான் கடவுள் அவரை எல்லோருக்கும் மேலாய் உயர்த்தி எப்பெயருக்கும் மேலான பெயரை அவருக்கு அருளினார்" (பிலிப். 2:5-7)

என்பதை,

"ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு" (குறள். 21)

என்னும் குறள் கூறுவதாகக் கூறுகிறார்.

பின்னர் 1981-இல் ஆ. சத்தியசாட்சி "திருக்குறளும் பைபிளும்" என்னும் கட்டுரையில்,

"கிறித்துவே அகரமாக இருக்கிறார்; முதற்குறள் அவரையே நினைவு கூர்கிறது. விவிலியம் அகரத்திற்கு ஆல்பா, ஒமேகா என்று கூறுவதைத் திருக்குறள் அகரம் ஆதிபகவனுக்கு ஒப்புமைக் கூறுகிறது" (78, ப.10)

என்கிறார். எனினும், இக்கருத்துகள் எல்லா இலக்கியங்களிலும் இருக்கிறது.

இவருக்குப்பின் 1985-இல் மு. தெய்வநாயகம் "விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம் ஒப்பாய்வு" என்னும் நூலில் திருக்குறள் விவிலிய நூல் கருத்துகளுடன் பல்வேறு ஒற்றுமைகள் இருப்பதைப் பல சான்றுகள் தந்து விளக்குகிறார். மேலும், தமிழகத்தில் இருந்த சமயங்களுடன் கிறித்துவத்தை வரலாற்று நோக்கில் ஒப்பிட்டுள்ளார். அவர்,

> "எல்லாச் சமயங்களாலும் உரிமை பாராட்டப்படும் திருக்குறளின் அடிப்படைத் தத்துவக் கருத்துகள் தோன்றுவதற்குப் பின்புலமாக இருந்த சமய வரலாறு, இன வரலாறு என்னவென்பதை அறிந்து கொள்வதிலும் பலவிதச் சிக்கல்கள் இருந்து வந்துள்ளன. சைவ வைணவ சமயங்களின் எழுச்சிக்கு முற்பட்ட சங்க காலத்தில், வடக்கிலிருந்து ஆரிய நாகரிகமும் மேற்கிலிருந்து யவன நாகரிகமும் தமிழகத்தில் பரவியுள்ளதைத் தெளிவாக அறிய இயலுகின்றது. சங்க காலம், அதற்குப் பிற்பட்ட சமய காலம் இவைகளை நாம் ஆராயும் பொழுது, சைவ, வைணவ சமயங்கள் உருவாக்கிய பக்தி இயக்கத்தின் மூலக்கருவை, ஆரிய சமய வரலாற்றோடு மட்டும் ஒப்பிடுவதுடன் நிறுத்திவிடாது, யவன சமய வரலாற்றுடனும் ஒப்பிட்டுக் காணுவது இன்றியமையாததாகின்றது" (141, பக்.10-12)

என்கிறார். இவர் சைவசித்தாந்தம், விவிலியம் ஆகியவற்றுடன் திருக்குறளை ஒப்பிட்டு ஒத்த கருத்துகளைக் கூறி விவிலியத்தை முதன்மைப் படுத்துகிறார்.

இறைவனுடைய அருள் இருந்தால் மட்டுமே ஒருவன் விடுதலையைப் பெற இயலும் என்னும் கருத்தோட்டம் விவிலியம்-திருக்குறள் சைவசித்தாந்தம் மூன்றிலும் சிறந்து நிற்கின்றது.

"என்னை அனுப்பிய தந்தை ஈர்த்தாலொழிய எவனும் என்னிடம் வர இயலாது" (அரு. 6:44)

என்னும் இயேசு வாக்குடன்,

"வகுத்தான் வகுத்த வகையல்லால்" (குறள். 377)

என்னும் குறளையும்,

"உணர்த்த உணர்தலின்" (சிவஞானபோதம். 3)

"அவனருளாலே அவன்றாள் வணங்கி" (திருவாசகம் சிவபுராணம், 18)

என்னும் சைவ சித்தாந்தப் பாடல்களையும் ஒப்பிட்டு விவிலியத்தின் கருத்துகள், சைவசித்தாந்தம் திருக்குறளுக்கு தொடர்புடையனவாக உள்ளன என்று இணைவு செய்கிறார்.

### 3.9.1 கிறித்தவம் மறுப்பு

திருக்குறளில் கிறித்தவக் கருத்துகள் காணப்படுகின்றன என்று கூறி திருக்குறளை கிறித்தவமாக்க முயன்ற அறிஞர்களின் கருத்தினை மறுத்தும் ஆய்வுகள் வந்தன:

1974-இல் எஸ்.ஜே. இராசமாணிக்கம் "திருக்குறளில் கிறித்தவம்" என்னும் கட்டுரையில், திருக்குறளும் கிறித்தவமும் பல கருத்துகளில் மாறுபாடுடையவை என்கிறார். (24, ப.88) அவை பின்வருமாறு;

1. ஓர் இடத்தில்கூடத் திருவள்ளுவர் இயேசு பெருமானின் பெயரைக் கூறவில்லை. ஆனால், தமிழ்க் கடவுளான இந்திரன் (குறள். 25), அடியளந்தான் (குறள்.610), அறவாழி (குறள்.8) போன்றவை திருக்குறளில் இடம்பெற்றுள்ளன.

2. பரிசுத்த ஆவி என்று கூறாது வள்ளுவர் நீத்தார் என்று ஏன் கூறினார்?

3. கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் கிறித்தவத் துறவு இயக்கம் வளர்ந்துள்ளது. ஆனால், இதற்கு முன்னரே தோன்றிய வள்ளுவர் துறவு பற்றியக் கொள்கையினைக் கூறியிருப்பது எப்படி?

4. மறுபிறப்பு, வினை, ஊழ் முதலியவை கிறித்தவத்துக்கு முரண்பட்டது.

மேற்கண்ட சான்றுகளைக் காணும்போது திருவள்ளுவர் எழுதிய திருக்குறள் கருத்துகள் சில கிறித்தவத்துடன் ஒத்து செல்வனவாக இருக்குமே தவிர வள்ளுவர் கிறித்தவர் ஆகார்.

## 3.10 இசுலாமும் – திருக்குறளும்

இசுலாம் மதத்தைச் செம்மைப்படுத்தி எங்கும் பரவச் செய்தவர் முகம்மது நபி. அவர் காலம் கி.பி. 571–632. இசுலாம் மதத்தாரின் வேதம் குர்–ஆன். அவை முகம்மது நபிக்கு அல்லா கட்டளைப்படி தேவதூதனான ஜிப்ரேயில் கூறிய உபதேச மொழிகள் ஆகும்.

திருக்குறளை இசுலாமிய மதக்கருத்துகளுடனும் ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1974–இல் அப்துல் ரகுமான் "திருக்குறளில் இசுலாம்" என்னும் கட்டுரையில்,

> "மனித குலத்தின் செம்மையான வாழ்வுக்கு வழி காட்டும் நோக்கோடுதான் சமயங்களும் அறநூல்களும் தோன்றுகின்றன. இவ்வாறு தோன்றும் சமயங்களும் அறநூல்களும் அவையவை தோன்றிய காலம், இடம், சூழ்நிலை இவற்றிற்கேற்பச் சில மாறுபாடுகளைக் கொண்டிருப்பினும் மனிதகுலம் நலம் என்னும் அடிப்படைக் கொள்கையில் வேறுபடுவதில்லை" (1, ப.77)

என்கிறார். இவர்,

"அகர முதல எழுத்தெல்லாம்" (குறள், 1)

என்னும் குறளும்,

"அகிலங்கள் அனைத்தையும் படைத்துப்பேணிப்
பரிபக்குவப்படுத்தும் அல்லாவுக்கே எல்லாப்புகழும்"
(திருக்குர்ஆன், 1:1)

என்னும் பாடலும் கருத்தொற்றுமையுடையன என்கிறார். இவர்க்குப் பின் இந்நோக்கில் ஆய்வுகள் தொடர்ந்து வெளிவரவில்லை.

## 3.11 இயற்கையும் திருக்குறளும்

திருக்குறளை மையமிட்டு ஒவ்வொரு சமயமும் தத்தம் கடவுள் பெயரையும், கடவுட் கொள்கையையும் வள்ளுவர் கூறினார் என்பதற்கு முரணாக இயற்கையை தொடர்பு படுத்தி ஆய்வுகள் வந்தன.

1972-இல் தேவநேயப்பாவாணர் "தமிழர் வரலாறு" என்னும் நூலில்,

"குறிஞ்சி நிலத்தில் முதற்கண் தோன்றி, ஏனைய
நிலங்களிலும் மட்டுமன்றி உலகம் முழுவதும் பரவிய
முதல் தெய்வம் தீயாகும். அதனால் தெய்வம்
என்னும் பொதுப் பெயரே தீயின் பெயரினின்றுதான்
திரிந்தது" (145, ப.40)

என்கிறார்.

"தீத்துரீஇ யற்று" (குறள், ௯௨௯)

என்னும் குறளும்,

"வயிற்றுத் தீத்தணிய" (புறம். 74)

என்னும் பாடலும் தீயினைப் பற்றிக் குறிப்பிடுவதை ஒப்பிடுகிறார்.

## 3.12 சமயப் பொதுமை

திருக்குறளைத் தத்தம் சமயம் என்று கூறும் ஆய்வுகளிடையே சமயப் பொதுமையானது என்னும் நோக்கிலும் ஆய்வுகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன.

1973-இல் இரா. சாரங்கபாணி "குறள் விருந்து" என்னும் நூலில்,

"திருவள்ளுவர் எழுதியக் குறட்பாக்களில் பல சமயக் கோட்பாடுகள் இருந்தலினால் அது அனைத்துக்கும் பொதுவானது" (85, ப.30)

என்கிறார். சமணக் கருத்துகள், பௌத்தக் கருத்துகள் குறளில் காணப்படினும் அவற்றுள் சில முரண்பாடுடைய கருத்துகளும் உண்டு என்று குறிப்பிட்டுச்சான்றுகள் எதுவும் குறிப்பிடவில்லை.

தொடர்ந்து 1979-இல் காமாட்சி சீனிவாசன் "குறள் கூறும் சமயம்" என்னும் நூலில்,

"இந்து சமயத்தில் பிறந்து வளர்ந்த வள்ளுவர் பரந்த மனப்பான்மை உடையவர். தம் காலத்தில் தமிழ்நாட்டில் பரவிய சமண, பௌத்த சமயக் கருத்துகளை எடுத்தாண்டிருக்கிறார்.

பொதுமக்களிடையே காணப்பட்ட அறக்கருத்துகளைத் திரட்டிக் கொண்டார். அவர் காலத்தில் சைவம், வைணவம் என்ற பேச்சுக்கே இடமில்லை. வள்ளுவர் வேதத்தையோ, ஆரிய சமயத்தையோ எதிர்க்கவில்லை. ஆனால் உபநிடதம், வேதம் போன்ற நூல்களைத் தழுவி எழுதியதாகத் தோன்றவில்லை. வள்ளுவர் பழந்தமிழ் துறவியர்களுடனும், அறிஞர்களுடனும் பழகி அவர்கள் கருத்தைப் பெரிதும் தழுவி எழுதினார். முக்கியமாகத் தம் கடவுள் கொள்கையை அறிஞர்களிடமிருந்து பெற்றார் எனல் பொருந்தும். வள்ளுவர் கிறித்தவர் அல்லர் என்பது தெளிவேயாயினும், தமிழ்நாட்டிலிருந்த பண்டைக் கிறித்தவர்களுடன் அல்லது இந்நாட்டில் வந்து தங்கிய யூதர்களுடன் தொடர்பு ஏற்பட்டு அவரது அறவியல் சார்ந்த ஒரு கடவுட் கொள்கையை உருவாக்க உதவியிருத்தல் கூடும்" (57, பக். 218-219)

என்கிறார். இவர் கிறித்தவத்தையும் திருக்குறளையும் ஒப்புமைப்படுத்தி விவிலியத்தைத் தழுவி எழுதியிருத்தல் கூடும் என்று "விவிலியமும் திருக்குறளும்" என்னும் நூலில் முன்னர் குறிப்பிட்டுள்ளார். இருப்பினும், பின்னர், தமிழகப் பழஞ் சமயங்களுடன் ஒப்பிடும்போது அவர் கருத்து வளர்ச்சிபெற்ற நிலையில் அமைகின்றது. திருவள்ளுவர் பழந்தமிழகத்தில் இருந்த அனைத்துச் சமயத்துக்கும் பொதுவாக அமையும் கடவுட் கொள்கையையே குறிப்பிட்டு உள்ளார் என்று முடிவு கூறிய காமாட்சி சீனிவாசன் கருத்து ஏற்புடையது, இருப்பினும் கிறித்தவ சமயம் இருந்ததற்கான பழந்தமிழ் இலக்கியங்களில் சான்றுகள் கிடையாது.

நிறைவாக, திருவள்ளுவர் எந்தச் சமயத்தைச் சார்ந்தவர் என்பது முடிந்த முடிபாகவில்லை.

திருவள்ளுவர் நீதி நூலைத்தான் எழுதினாரேயன்றி சமயநூலை எழுதவில்லை. எனவே, திருக்குறளைச் சமய நூல் எனக்கொள்வது பொருந்தாது. பாயிரம் பாடியதைக் கொண்டு முடிவுக்கு வரக்கூடாது. திருவள்ளுவர் தம் காலத்து வழங்கிவந்த அனைத்துக் கடவுளர்களையும் குறிப்பிட்டுக் கூறாமல் ஒரு பொதுநிலையில், பொய்தீர்ந்த ஒழுக்க நெறியுடைய கடவுள் சிந்தனையையே குறிப்பிட்டுள்ளார். எனில், இது ஒரு தனி சமயமோ அல்லது தனிக்கடவுளோ ஆகாது. அனைவருக்கும் அறிவுரை கூறும் நோக்கில் ஓரினமாக ஒரே கடவுள் சிந்தனையுடையவர்களாக வாழவேண்டும் என்னும் பெருநோக்கிலே சென்ற வள்ளுவர் தனியாகக் குறிப்பிட்ட ஒரு சமயத்தைச் சார்ந்தவராகார்.

## 3.0.0 முடிவுரை

1. திருக்குறளில் சைவசார்புக் கருத்துகள் உள்ளன என்று 1925-இல் கா.சு. பிள்ளை, நடேசமுதலியார், ந. சிவகுருநாதன், பெ. கோவிந்தன் போன்றோர் தொடங்கிய ஆய்வுகள் 1955-இல் க. வச்சிரவேலு அவர்கள் திருக்குறள் சைவசார்பு நூல் என உறுதியுடன் வரையறுக்கின்றார்.

2. 1907-க்குப் பிறகு ஆ. முத்துத்தம்பி பிள்ளை, வ.உ. சிதம்பரம் பிள்ளை, இராஜசேகர நாயக்கர் போன்றோர் திருக்குறள் வைணவச் சார்புடையது என்பதற்கு வடநூல் கருத்துகளை ஒப்பிட்டு கூறுகின்றனர். பின்னர் 1950-களில் பி.ஆர். புருடோத்தம நாயுடு,

கமலா சங்கரன், சி. வெங்கடசாமி ரெட்டி போன்றோர் தமிழ் இலக்கியங்களிலிருந்து சான்று காட்டி திருக்குறள் வைணவச் சார்பு என்றனர். 1985-இல் இரா. கேசவ அய்யங்கார் வடநூல்-தமிழ் இலக்கியங்களிலிருந்து சான்றுகள் பல தந்து திருக்குறள் வைணவச் சார்புடையது என்று முடிவு தருகிறார்.

3. 1979-இல் க. வெள்ளைவாரணம் திருக்குறளில் சைவ, வைணவ மதக் கொள்கைகள் மட்டுமே உள்ளன என்கிறார்.

4. துவைதக் கருத்துகளை முதன்மைப்படுத்தி 1898-இல் சமயவியல் ஆய்வுகள் தொடங்கினாலும் தொடர்ந்து வெளிவரவில்லை. ஆனால் அத்வைதக் கருத்துகளைத் திருக்குறளுடன் ஒப்பிட்டு 1939-க்குப் பின் பி.எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி, ச. கந்தசாமி முதலியார், வி.எஸ். மணி போன்றோர் கூறியுள்ளனர். அத்வைதக் கருத்துகள் குறளில் கிடையாது என ஆல்பர்ட் சுவைட்சர் கூறுகிறார்.

5. திருக்குறளில் சமணச் சார்புடைய கொள்கைகள் உள்ளன என்று 1932-இல் தி. அனந்த நயினார் மிக விரிவாக ஆராய்ந்துள்ளார். இவருக்குப்பின் அ. சக்கரவர்த்தி, டி.எஸ். ஸ்ரீபால் போன்றோரும் திருக்குறளில் சமணம் என்னும் நோக்கில் ஆராய்ந்துள்ளனர். திருக்குறளில் சமணம் மறுப்பு என்னும் ஆய்வு நோக்கில் 1956-இல் வெ.சு. சுப்பிரமணியாச்சாரி, தெ.பொ. மீனாட்சி சுந்தரம் போன்றோர் ஆராய்ந்துள்ளனர்.

6. திருக்குறளை பௌத்தத்துடன் தொடர்புபடுத்தி 1960-களில் மயிலை சீனி வெங்கடசாமி, சு. சாலமன் பாப்பையா போன்றோர் கூறினாலும், 1977-இல் சோ.ந.கந்தசாமி திருக்குறளின் உறுதிப்பொருள் புத்தமதச் சார்புடையதே என நிறுவுகிறார்.

7. திருக்குறளில் சமண-பௌத்தச் சார்புக் கொள்கைகள் உள்ளன என்று 1920-களில் விசுவநாத பாரதியும், மயிலை சீனி வெங்கடசாமி போன்றோர் கூறினாலும், மறுப்புகளாக 1966-இல் ஆல்பர்ட் சுவைட்சர், பெ. கோவிந்தன், இரா. சாரங்கபாணி போன்றோர் எழுதியுள்ளனர்.

8. திருக்குறளில் கிறித்தவச் சார்புள்ளது என்னும் நோக்கில் 1969-க்குப் பிறகு மு. தெய்வநாயகம், ஆபிரகாம் அருளப்பன், சத்தியசாட்சி போன்றோர் சிறுசிறு விளக்கங் களையே கூறியுள்ளனர். பின்னர் 1985-இல் மு.தெய்வநாயகம் திருக்குறள்-விவிலியம்-சைவசித்தாந்தம் மூன்றையும் ஒப்பிட்டு விவிலியத்தை முதன்மைப்படுத்தி திருக்குறள் கிறித்தவ மதச் சார்புடையது என்று நிறுவ முயலுகின்றார். இவ்வாய்வுகளை மறுக்கும் ஆய்வு நோக்கில் 1974-இல் எஸ்.ஜே. இராசமாணிக்கம் எழுதியுள்ளார்.

9. திருக்குறளில் இசுலாம் மதக் கருத்துகள் என 1974-இல் அப்துல் ரகுமான் ஒருவரே ஒப்பிட்டுள்ளார். தொடர்ந்து இந்நோக்கில் ஒப்பிட்டாய்வுகள் வெளிவரவில்லை.

10. திருக்குறளில் இயற்கையைத் தெய்வமாக திருவள்ளுவர் கூறியுள்ளார் என்று 1972-இல் தேவநேயப்பாவாணரும், திருவள்ளுவர் பொதுவான கடவுட் கொள்கையையே திருக்குறளில் கூறியுள்ளார் என்று 1970-களில் இரா. சாரங்கபாணி, காமாட்சி சீனிவாசன் போன்றோரும் ஒப்பீட்டாய்வு நோக்கில் ஈடுபட்டுள்ளனர்.

***

## 4.0 அரசியல் விளக்கம்

மனிதன் நல்வாழ்க்கை வாழ்வதற்குத் தேவையான சூழ்நிலையை ஏற்படுத்தவே நாடு தோன்றி வளர்ந்துள்ளது. மனிதனுடைய செயல்களை எல்லாம் சமூக முறையில் ஆராயும் இயல்கள் பலவற்றில் அரசியலும் ஒன்று. அரசியலானது நாட்டின் தன்மை, அரசாங்கத்தின் தன்மை முதலியவற்றின் உண்மையைக் கண்டு கூறும். ஒரு சமூகம் நிலைபெற்றிருப்பது அதன் நாட்டையும் அரசாங்கத்தையும் பொறுத்திருப்பது. ஆதலால் அரசியலைத் தலைசிறந்த அறிவுப்பகுதி எனலாம். மனித செயல்களில் பிறரால் கட்டுப்படுத்த முடியாதவை அவன் எண்ணங்களும் கற்பனைகளுமே ஆகும். எனவே, அவற்றை நீக்கி, மனித சமூகத்தின் ஏனைய செய்திகளை எல்லாம் அரசியல் ஆய்வதோடு, அரசாங்கத்தின் பல்வேறு அமைப்புகளையும் ஒப்பிட்டு ஆராய்கின்றது. திருவள்ளுவர் திருக்குறள் பொருட்பாலில் அரசியல் தொடர்பான செய்திகளை விரிவாகக் கூறியுள்ளார். திருக்குறள் ஆய்வு வரலாற்றில் திருக்குறளைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டு அரசியல் தொடர்பாக மேற்கொண்டுள்ள ஆய்வின் வரலாற்றை இவ்வியல் மதிப்பீடு செய்யப்படுகிறது.

## 4.1 அரசன்

அரசாங்கம் இல்லாத சமூகம் கிடையாது. எந்தச் சமூகமும் அரசாங்கம் இல்லாமல் நிலைக்கமுடியாது. மக்களுள் ஒரு சிலர் வலிமை மிக்கவர்களாகவும், அறிவாளிகளாகவும் உள்ளனர். அவர்களுள் திறமை பெற்றவர் தலைவராக, காவலராக, அரசனாக மாறினர். மற்றவர்கள் குடிகளானார்கள். நாளடைவில் தலைமை வகிப்பதும், தலைவர்க்குப் பணிந்து நடப்பதும் பரம்பரை முறையாக வரலாயிற்று.

## 4.1.1 அரசன் பண்புகள்

அரசின் தலைமை மாந்தர் அரசன். இந்த அரசன் சில நற்பண்புகள் உள்ளவனாக இருக்க வேண்டும்.

### 4.1.1.1 காட்சிக்கு எளியன்

அரசன் பகைவர்களுக்குக் கடுமையானவனாகவும், மற்றவர்களுக்கு எளிமையானவனாகவும் இருக்க வேண்டும். அரசனுக்கு இப்பண்பு இன்றியமையாததாகும் என்று திருக்குறளின் ஒப்பீட்டாய்வில் சிலர் ஆய்வு மேற்கொண்டனர்.

எளிமை என்பது தோற்றத்தில் மட்டுமன்றிச் செயலிலும் இருப்பது. இதனைச் சங்க இலக்கியப் பாடல்களில் காணலாம். குறிப்பாக, 1974-இல் அ.மு. பரமசிவானந்தம் "வள்ளுவர் கண்ட அரசியலும் சங்க இலக்கியங்களும்" என்னும் கட்டுரையில் "சங்க காலத்தில் வாழ்ந்த அரசன், மக்கள் மீது கொண்டிருந்த அன்பைச் சங்கப்பாக்களும் திருக்குறளும் கூறுவதை ஒப்பிட்டுக் கூறுகிறார்." (155, ப.40)

"காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்" (குறள்.386)

என்ற குறள் கருத்தையொட்டிப் பல கருத்துகள் சங்கப்பாக்களில் காணப் பெறுகின்றன. காட்சிக்கு எளியன் மட்டுமின்றிப் புலவர் வாய்ச்சொல்லுக்கும் இரங்கி, அவர்களுக்குக் கவரி வீசிய காவலனையும் புறநானூற்றில் (புறம்.50) காணலாம். "இல்லோர் ஒக்கல் தலைவன்" (புறம்.95) எனவும், சாந்து வருவானி நீரினும் தீத்தன் சாயலன்" (பதிற். 86) எனவும், மன்னர் போற்றப்படுவதை அ.மு. பரமசிவானந்தம் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

4.1.1.2 கண்ணோட்டம்

பரிமேலழகர் கண்ணோட்டமே "நாகரிகம்" என்கிறார். அரசனுக்கு இக்கண்ணோட்டம் என்னும் நற்பண்பு அமையப் பெற்றிருத்தல் வேண்டும். குறிப்பினால் உணர்ந்துகொள்ளும் இவ்வியல்பு சிறப்பானதாகும்.

1974-இல் அ.மு. பரமசிவானந்தம் "வள்ளுவர் கண்ட அரசியலும் சங்க இலக்கியங்களும்" என்னும் கட்டுரையில், அரசனுக்கு இருக்க வேண்டிய கண்ணோட்டத்தின் தன்மையை,

"பெயக்கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்" (குறள். 580)

என்று குறளும்,

"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்" (நற். 355)

என்று நற்றிணையும் கூறுகின்றன என்கிறார். மேலும், "குறளும் நற்றிணையும் இந்த உயர்ந்தப் பண்பினைச் சிறப்பாக மன்னர் மேலேற்றி, கண்ணோட்டம் இந்த அடிப்படையில் வாழ்ந்தாலன்றி உலகம் வாழாது என்று வரையறுத்துக் கூறிக் காட்டுகின்றன" என அ.மு. பரமசிவானந்தம் கூறுகின்றார். (155, ப.41)

இப்பண்பு அரசனுக்கு மட்டுமே வேண்டிய பண்பு அன்று; அனைவர்க்கும் பொதுவான பண்பு. ஆனால், இவ்வாய்வாளர் அரசனுக்கே உரிய சிறப்புப் பண்புகளில் ஒன்றாக்கியுள்ளார்.

4.1.1.3 பிறர் துன்பத்தை அறிதல்

தொடர்ந்து அ.மு. பரமசிவானந்தம்,

"மன்னன் பிறர் நோயினையும் தம் நோய்போல்
ஒப்ப அறியும் திறனைச் சங்க இலக்கியப்பா,
குறள் போன்று கூறுகிறது" (155, ப.36)

என்கிறார். திருக்குறளில்,

"அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை"? (குறள்.315) —

என்பதை,

"பிறர்நோயும் தம்நோய்போல் போற்றி அறனறிதல்
சான்றவர்க்கு எல்லாம் கடன்" (கலித். 139)

என்னும் கலித்தொகைப்பாடல் எடுத்தாண்டுச் செல்வதைக் கூறுகிறார்.

4.1.1.4 நன்றியுணர்வு

அரசன் நன்றியுணர்வு உடையவனாக அமைதல் வேண்டும் என்பதை

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுஉண்டாம்" (குறள்.110)

என்ற குறளுக்கு ஆலத்தூர்கிழார் விளக்கம் தந்து (புறம்.34) குறளையே அறம் எனக்காட்டி, "அறம் பாடிற்றே" எனப் போற்றுகிறார் என்பதை அ.மு. பரமசிவானந்தம் ஒப்பிடுகிறார். (155, ப.39)

மேற்கண்ட ஆய்வுகளின் வழியே மன்னவனின் பண்புகள் பற்றிய ஒப்பீட்டு ஆய்வுகள் விளக்கப்பட்டுள்ளன. எல்லார்க்கும் உரிய பொதுவான பண்புகளை ஆய்வாளர் அரசர்க்குரிய சிறப்புப் பண்புகளாகக் காட்ட முனைந்துள்ளார் என்றும் அறிய முடிகின்றது.

## 4.2 மழையும் மன்னனும்

ஒரு நாட்டிற்கு இன்றியமையாதது மழை. வானிலிருந்து உலகத்திற்கு வழங்கிவருவதால்தான் மழையை 'அமிழ்தம்' என்று சிறப்பித்துக் கூறுகிறார் வள்ளுவர். வானம் மழை பெய்யாவிட்டால், மக்களுக்கு உள்நின்று பசிவாட்டும்; தானம், தவம் இரண்டும் உலகில் நடைபெறாது. எனவே, ஒரு நாட்டுக்கு இன்றியமையாதது மழை.

திருவள்ளுவர் இயற்கையாகப் பெய்யும் மழையை அரசியலுடன் தொடர்புபடுத்துகிறார். மேலும், மன்னன் ஆட்சியைப் பொறுத்தே அந்நாட்டின் மழைவளம் அமையும் என்கிறார்.

1956-இல் அ.க. நவநீதக்கிருட்டிணன் "வள்ளுவர் சொல்லமுதம்" என்னும் நூலில்,

> "ஒரு நாட்டின் மழைவளம் செழிப்பதற்கு, மன்னவன் ஆட்சி ஒரு காரணமாகும். செங்கோல் வேந்தன் ஆளுகின்ற நாட்டில், பருவ மழைப் பொழிவதும் விளையுள் பெருகுவதும் தப்பாது" (150, ப.4)

என்கிறார்.

"இயல்புளிக் கோல்ஓச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு" (குறள்.545)

என்னும் குறளையும்,

"மழைவளம் கரப்பின் வான்பேரச்சம்
பிழைவுயிர் எய்தில் பெரும்பேரச்சம்
குடிபுரவுண்டும் கொடுங்கோல் அஞ்சி" (சிலம்பு.25:102)

என்னும் சிலப்பதிகாரப் பாடல் அடிகளையும் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

## 4.3 மன்னனும் இறைமையும்

திருவள்ளுவர் பொருளதிகாரத்தில் அரசியல் தொடர்பான கருத்துகளைக் கூறும்பொழுது முறைதவறா மன்னவனைத் தெய்வநிலைக்கு இணையாக்கிக் கூறுகிறார். திருக்குறள் இறைமாட்சி அதிகாரத்திற்குப் பரிமேலழகர் முன்னுரை கூறும்போது,

"அவன்தன் நற்குண செய்கைகள், உலகபாலர் உருவாய் நின்று உலகம் காத்தலின், 'இறை' என்றார். 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே' (திருவாய்மொழி 4.4:8) என்று பெரியாரும் பணித்தார்" (192, ப.264)

என்கிறார். மன்னவனை இறைத்தன்மையுடன் தொடர்புபடுத்திப் பிற இலக்கியத்துடன் திருக்குறளை ஒப்பிட்ட முதல் ஆய்வு இதுவே ஆகும்.

இருபதாம் நூற்றாண்டிற்குப் பின் 1909-இல் அப்துல் காதிரு "இந்தியா இறைமாட்சி" என்னும் கட்டுரையில்,

"இந்தியர்கள் இராசபக்திப் பெருவெள்ளத்தைக் கண்டு வியந்தன்றோ பொய்யாமொழி முதலிய விதி நூல்களிலும் மற்றும் பல பெருநூல்களிலும் அரசனைத் தெய்வம் என்றே கூறக் காண்கிறோம்" (200,ப.29)

என்கிறார். இவர்,

"....... அனைவர்க்கும் தெய்வம்
இலை நுகப்பைம்பூண் இறை"" (நீதிநெறி. 27)

என்னும் பாடலின் கருத்தை,

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்" (குறள். 388)

என்னும் திருக்குறளோடு ஒப்பிடுகிறார்.

தொடர்ந்து 1974-இல் திரு முருகரத்னம் "வள்ளுவர் கண்ட அரசன் இறைமையின் எல்லையும் இயல்பும்" என்னும் கட்டுரையில்,

"உலகின் அரசியல் வரலாற்றில் 'நாடாளும் மன்னனுக்குத் தெய்வப் பண்பு உண்டு; அதாவது மன்னவர்கள் தெய்வாமிசம் பொருந்தியவர்கள் என்ற கருத்துப் பரவலாக இடம்பெற்றுள்ளது. மேலைநாட்டுச் சிந்தனையிலும் கீழைநாட்டுச் சிந்தனையிலும் இது இறைமைக் கொள்கை என வகுக்கப்பட்டு ஆராயப்பட்டும் வந்துள்ளது. பார்க்கும் இடந்தோறும் பரமன் கோலத்தைக் கண்டுணர்ந்த நம் பாரதநாட்டில் இக்கொள்கை

அரசியற் சிந்தனையில் சிறப்பிடம் பெற்றிருப்பதில் வியப்பில்லை. திருக்குறளிலும் இவ்விறைமைக் கொள்கைக்கு இடம் உண்டு" (171, ப.62)

என்கிறார். இவர்,

"இறைகுடி ... அரசாண்டு" (பதிற். 2:79)

"இறைகிழவோய் ... அரசனாதல் தன்மை" (பதிற். 54:97)

எனப் பதிற்றுப்பத்துப் பாடல்களும்,

"அரசன் திக்பாலகரின் எட்டு அமிசங்களால் நிருபிக்கப்பட்டுள்ளான்" (மனு.5, 96-97)

என்று மனுவும் கூறுவதையே,

"இறைபுரிந்து" (குறள். 541)

எனத் திருவள்ளுவரும் கூறுகிறார் என்று ஒப்பிடுகிறார். செங்கோன்மை என்னும் பொருளில்தான் அன்று இம்மரபினையே வள்ளுவரும் பின்பற்றி வழங்கியிருக்க வேண்டும்.

மேற்கண்ட கருத்திலேயே இரா. சாரங்கபாணி (வள்ளுவர் கண்ட அரசியலும் பிற அற இலக்கியத்தார் கண்ட அரசியலும், 1974), கோ. சுந்தரமூர்த்தி (வள்ளுவர் கண்ட இறைவனும் வடநூல் மரபும், 1974), எஸ். இராமகிருட்டிணன் (திருக்குறள் சமுதாயப் பார்வை, 1980) ஆகியோர் வடநூற் கருத்துகளைத் திருக்குறளுடன் ஒப்பிட்டுச் செங்கோலுக்கு இறைமை கற்பித்தே வடநூல்களும், சங்க நூல்களும் எழுதப்பட்டுள்ளன என்கின்றனர்.

மன்னனை இறைமையுடன் தொடர்புபடுத்தி வெளிவந்த ஆய்வுகளில் சமூகப் பார்வையில் வந்த சில ஆய்வுகளும் உண்டு.

1989-இல் நா. செல்வராசு "சமூகவியல் நோக்கில் தமிழ் மரபுகள்" என்னும் நூலில்,

> "அரசுரிமை எய்துவது நல்லூழால் இயல்வது எனும் கருத்தைப் பரப்புவதாக அமைவு பெற்றுள்ளது. அரசன் திருமால் போன்ற கடவுளரோடு இணைத்துப் புகழ்பெறுகின்றான். பரம்பரையாக ஆண்டுவந்த ஆட்சியுரிமை மன்னர் குடும்பத்தை விட்டு அகலாது இருக்க வேண்டுமாயின் ஆட்சி உரிமையின் இறைத் தன்மையும் அதனை அடையும் மன்னவனது இறைத் தன்மையும் பெரிதாகப் பேசப்பெறுதல் வேண்டும். இவ்வேலையைப் பண்டைப் புலவர்களும் சமயவாதிகளும் மேற்கொண்டனர். மன்னவத் தொழிலுக்கு இறைமை-யூட்டப் பெற்றது. இதனைப் பண்டைத் தமிழ் இலக்கியம் பதிவு செய்துள்ளது" (116,ப.71)

என்கிறார். இவ்வாய்வு சற்றுப் புதிய கண்ணோட்டத்தில் மேற்கொள்ளப் பட்டுள்ளது. ஊழையும், பரம்பரை ஆட்சித் தொடர்வதையும் ஒப்புமைப்படுத்திக் கூறினாலும், முறை செய்யாத அரசு சமூகத்தில் தூக்கி எறியப்பட்டுள்ளதையும் குறிப்பிடுகிறார்.

## 4.4 அரசாட்சி முறை

### சமூகநலன்

ஒரு சமூகம் நிலைபெற்றிருப்பது அதன் நாட்டையும், அரசாங்கத்தையும் பொறுத்தது. எனவே, அரசன் சமூகத்திற்கு அடிப்படையான நல்ல செயல் உருவாக்கங்களை மேற்கொள்ள வேண்டும்.

### 4.4.1 கல்வி

சமூகத்தின் அடிப்படையான நல்லாக்கங்களுள் ஒன்று கல்வி அறிவு. கல்வி மக்களுக்கு இன்றியமையாத ஒன்றாகும். வள்ளுவர் கல்லாதவரின் கண்ணைப்புண் என்றே கூறுகிறார். இதனால் கல்வி தொடர்பான அரசியல் கருத்துகளைத் திருக்குறளுடனும் பிற இலக்கியங்களுடனும் ஒப்பிட்டுச் சில அறிஞர்கள் ஆய்வு மேற்கொண்டுள்ளனர்.

1974-இல் அ.மு. பரமசிவானந்தம் "வள்ளுவர் கண்ட அரசியலும் சங்க இலக்கியங்களும்" என்னும் கட்டுரையில்,

> "அரசர்க்குக் கல்வி இன்றியமையாதது என்ற அடிப்படையில் மட்டுமின்றி, நாட்டுக்கல்வி வளர்ச்சியில் முதலாவதாக அரசன் கருத்திருக்க வேண்டும் என்ற உண்மையினையும் வள்ளுவர் இதன் வழியே உணர்த்துகிறார். நாடு, நாடாக இலங்க வேண்டுமாயின் கல்வியும் அதன்வழி ஊறும் அறிவும் இன்றியமையாதனவன்றோ" (155,ப.35)

என்கிறார்.

கல்வியின் இன்றியமையாமையைக் காட்டிய வள்ளுவர் அதை,

"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும்" (குறள். 395)

என கற்கவேண்டும் என்று கூறி, கற்க வேண்டிய வகையினை வற்புறுத்துவர். இதே கருத்தினை, /ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்,

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே" (புறம். 183)

என்ற வகையில் கூறுவதை அ.மு. பரமசிவானந்தம் ஒப்பிடுகிறார்.

## 4.5 அரசன் தொடர்பு

அரசன் ஆட்சி முறையில் "பெரியோர் தொடர்பு" என்பது இன்றியமையாத ஒன்று. இதன் இன்றியமையாமையையும் திருவள்ளுவர் திறம்படக் குறிப்பிட்டுள்ளார். இதனைப் பிற இலக்கியங்களும் கூறியுள்ளன.

### 4.5.1 பெரியாரைத் துணைக்கோடல்

அரசன் அறிவில் சான்ற பெரியோர்களின் துணையைக் கொண்டிருக்க வேண்டும். ஏனெனில் அரசன் சில நேரங்களில் தாமாகவே எந்த முடிவையும் எடுத்துத் துன்பத்தில் இடர்ப்படவும் வாய்ப்புண்டு. அந்த நேரங்களில் அமைச்சர்களும், ஆன்றோர்களும், பெரியோர்களும் அறவுரை-அறிவுரை கூறி அரசனைத் திருத்தியுள்ளனர்.

1974-இல் அ.மு. பரமசிவானந்தம் "வள்ளுவர் கண்ட அரசியலும் சங்க இலக்கியங்களும்" என்னும் கட்டுரையில், வள்ளுவர்

பெரியாரைத் துணைக்கோடல் என்னும் அதிகாரத்தைக் குறிப்பிட்டுள்ளதும்,

"தொல்லாணை நல்லாசிரியர்
புணர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்" (மதுரை.761)

என்று "நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் பாடிய வரிகளில் பெரியாரைத் துணைக்கொண்ட அவன் குலச்சிறப்பு விளங்குகின்றதன்றோ?" என்கிறார் (155, ப.38).

மேலும், குறளும் "இடிக்குந் துணையாரை" (குறள்.447) என்னுங் குறளில் அல்லன செய்யுங்கால் இடித்துரைத்துத் திருத்திய புலவர்களையும், திருந்திய புரவலர்களையும் காண்கின்றோம் என்கிறார்.

கண்ணகியைத் துறந்த பேகனைப் பரணர் இடித்துத்திருத்த, அவன் திருந்தியதோடு, அவன் யாரும் கெடுக்கா வகையில் நெடிது வாழ்ந்தான் என்று அறிகின்றோம் என்ற சங்க இலக்கிய வரலாற்றுச் சான்றுகளைத் திருக்குறளுடன் அ.மு. பரமசிவானந்தம் ஒப்பிடுகிறார்.

## 4.6 அரசின் வருவாய் முறைமை

அரசன் தன் நாட்டின் வளத்தினால் உண்டான பொருட்களைச் சேர்க்க வேண்டும். அப்படிச் சேர்க்கின்ற பொருள் நடுவுநிலையுடன் அறத்தின் வழிப்பட்டதாக இருக்க வேண்டும் எனத் திருக்குறள் கூறுகிறது. இதனைப் பிற இலக்கியங்களும் குறிப்பிட்டுள்ளன.

4.6.1 அரசின் உரிமைப்பொருள்

அரசின் உரிமைப் பொருள் நடுவுநிலைப்பட்டதாக இருக்க வேண்டும்என்ற நோக்கில் திருக்குறளும் பிற இலக்கியங்களும் கூறியுள்ளன.

1966-இல் செந்துறை முத்து, "வழிகாட்டும் வள்ளுவர்" என்னும் நூலில்,

> "அரசன் பொருளைப் பெருக்க வேண்டும். அது எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றன் கண்ணும் நடுவுநிலைமை கொண்டு ஆராயப்பட வேண்டும்"
> (113, ப.61)

என்கிறார். மேலும்,

> "செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்"
> (குறள். 759)

என்ற அடியை,

> "செய்க பொருள்யாரும் செறுவாரைச் செறுக்கிற்கு
> எஃகும் பிறிதில்லை" (சீவக. காந்த. 5)

என்னும் பாடல் அடிகளுடன் ஒப்பிடுகிறார். இயற்கையாக அரசுக்கு உரிமையானவற்றின் வழி வரும் பொருள்களை அரசன் சேமிக்க வேண்டும். ஆனால், அது அறத்தின் வழிப்பட்டதாக இருக்க வேண்டும்.

4.6.2 வரி

அரசு, பொருளைச் சேர்க்கும் வழிகளுள் ஒன்று வரி வாங்குதலாகும். மன்னன் குடிமக்கட்கு அல்லவை செய்தலாகாது,

குடிதழீஇய கோலோச்ச வேண்டும் என்று குறள் பொதுவாகக் கூறுகின்றதே தவிர, வரிவாங்கும் முறை பற்றி விரிவாகக் கூறவில்லை.

1974-இல் டாக்டர் இரா. சாரங்கபாணி "வள்ளுவர் கண்ட அரசியலும் பிற அற இலக்கியத்தார் கண்ட அரசியலும்" என்னும் கட்டுரையில், "நாட்டு மக்களைக் காத்து வருகின்ற காவற் படைக்கும், அரசு பணிபுரியும் அலுவலர்க்கும், நாடு நகரங்களின் நலம் பெருக்கும் பணிகட்கும் வரிப்பணத்தை வகுத்தளிக்க வேண்டும் என்று நீதிநூல் (குடிகளியல்பு. 4) கூறுவதனை, 'வகுத்தலும் வல்லது அரசு' (குறள்.385) என்னும் குறளுக்கு விளக்கமாகக் கொள்ளலாம் என்கிறார். (87, ப.53)

### 4.6.3 பொருளின் வலிமை

திருவள்ளுவர் பொருளைச் சேர்ப்பதையும், வரி வாங்குவதையும் அறத்தின் வழிப்பட்டதாகக் கூறிப் பின்னர் பொருளின் வலிமையையும் குறிப்பிட்டுள்ளார். பகைவர்கள் தன் நாட்டைக் கண்டு அஞ்சுவனவற்றுள் ஒன்று பொருளும் ஆகும். குறள்.759-க்கு உரை எழுதும்போது பரிமேலழகர்,

> "தமக்கு ஒன்றுண்டாகக் கருதுவார் பொருளை
> உண்டாக்குக, தம் பகைவர் தருக்கினை அறுக்கும்
> படைக்கலம் அதுவாம்; அதற்கு அதுபோலக்
> கூரிய படைக்கலம் பிறிது இல்லை" (192, ப.471)

என்கிறார். இதற்குச் சீவகசிந்தாமணி காந்த.5 பாடலை மேற்கோள் காட்டுகிறார்.

4.7 அரசாட்சி

மன்னவன் தன் அரசாட்சியில் நீதி வழுவாமல்-அறத்தின் வழிப்பட்ட ஆட்சி செய்யவேண்டும். பரிமேலழகர் "அறனிழுக்காது அல்லவை நீக்கி" (குறள். 384) என்னும் குறளின் உரைக்கு,

> "அறமாவது ஓதல், வேட்டல், ஈதல் என்னும் பொதுத்தொழிலினும் படைக்கலம் பயிறல், பல் உயிரோம்பல், பகைத்திறம் பயிறல், பகைத்திறம் தெறுதல் என்னும் சிறப்புத் தொழிலினும் வழுவாது நிற்றல். "மாண்ட அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" (புறம்.55) என்பதனால் இவ்வறம் பொருட்குக் காரணமாதல் அறிக. 'அல்லவை'; கொலை, களவு முதலாயின குற்றமாய மானத்தின் நீக்குதற்கு 'மறன் இழுக்கா மானம்' என்றார்; அதாவது "வீறின்மையின் விலங்களாம் என மதவேழமும், எறியான், ஏறண்டவர்; நிகராயினும் பிறர் மிச்சில் என்று எறியான்-மாறன்மையின் மறம் வாடும் என்று இளையாரையும் எறியான் ஆறன்மையின் முதியாரையும் எறியான் அயில் உழவன்" (சீவக. மண்மக. 160) எனவும்; அழியுநர் புறக்கொடை யயில்வே லோச்சான்" எனவுஞ் சொல்லப்படுவது 'அரசு' அரசனது தன்மை; அதாவது உபசார வழக்கால் அவன்றன்மே னின்றது" (192, ப. 147).

என்று கூறுகிறார். இவர் புறநானூறு, சீவகசிந்தாமணிப் பாடல்களுடன் திருக்குறள் கருத்துகளை ஒப்பிடுகிறார்.

1965-இல் சோ.ந. கந்தசாமி "திருக்குறள் பாயிரம்" என்னும் கட்டுரையில்,

"நீதிநெறி ஒழுங்காக வழங்குதல் அரசியல் கடன். அறத்தின் அடிப்படையில்தான் நீதி வழங்கப்பெற்றது. "சாதிக்கு ஒரு நீதியென அறத்தைச் சொல்லும் கொடுமைத் தமிழகத்தில் இல்லை" (219, ப.185)

என்கிறார். இதற்கு,

"அறனிழுக்கா தல்லவை நீக்கி (குறள். 384)

"அறனறிந்து" (குறள். 441)

என்ற குறட் கருத்துகளை,

"அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" (புறம்.55)

"அறன் வாழ்ந்த நற்காண்ட" (பதிற்.90:12-12)

என்ற சங்கப் பாடல் கருத்துகளுடன் ஒப்பிட்டு, அரசன் தன் ஆட்சியில் அறவழி நீதி வழங்கியமையைக் குறிப்பிடுகிறார்.

1969-இல் சரவண ஆறுமுக முதலியார் "வள்ளுவர் உலகம்" என்னும் நூலில்,

"எந்த அரசியலும் அறநெறி அடிப்படையிலேயே அமைந்திருக்க வேண்டும் என்னும் உண்மையை நந்தம் செந்தமிழ் நாட்டில் பண்டுதொட்டே ஒரு மரபாக மேற்கொண்டு வந்துள்ளனர்" (82, ப.228)

என்கிறார்.

"வேலன்று வென்றி தருவது மன்னவன்" (குறள். 546)

546

என்ற குறட்கருத்தை,

"அல்லவை செய்தார்க்கு அறங்கூற்றாகும்" (சிலம்பு. 20:1)

என்ற சிலப்பதிகாரக் கருத்துடன் ஒப்பிடுகிறார்.

மேற்கண்ட சான்றுகளின் வழியே மன்னவன் தன் ஆட்சியில் நீதியுடன் அறவழியில் ஆட்சி செய்துள்ளான் என்பதைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் கூறியுள்ளதை அறியமுடிகின்றது; இவ்வாய்வுகள் அனைத்தும் ஒத்துவரும் கருத்துகளைக் கோடிட்டுக் காட்டுவனவாக அமைந்துள்ளதையும் காணமுடிகின்றது.

### 4.7.1 நடுவுநிலைப்பட்ட நீதி

அரசன் நீதி வழங்கும்போது பொறுப்புடனும், நடுவுநிலையுடனும் இருக்க வேண்டும்.

1966-இல் செந்துறைமுத்து "வழிகாட்டும் வள்ளுவர்" என்னும் நூலில்,

"அரசன் நீதி வழங்கும்போது எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றன்கண்ணும் நடுவுநிலைமை கொண்டு ஆராயவேண்டும்" (113, ப.61)

என்கிறார். அரசன் நீதி வழங்கும்போது முறைதவறிவிட்டதால்,

"யானோ அரசன் யானே கள்வன்" (சிலம்பு. 20:75)

என்று சிலப்பதிகார மன்னன் வருந்தி உயிர்நீத்தலைக் காணலாம்.

திருவள்ளுவரும்,

"ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து" (குறள். 541)

"சொற்கோட்டம் இல்லது செப்பம்" (குறள்.119)

என்னும் குறள்களில் நீதி வழங்கும்போது நடுவுநிலையுடன் ஆராய்ந்து செயல்பட வேண்டும் என்று குறிப்பிடுவதைச் செந்துறைமுத்து ஒப்பிடுகிறார்.

4.7.2. செங்கோன்மை

அரசன் யாரிடத்தும் கண்ணோடாது நடுவுநிலையுடன் ஆராய்ந்து ஆட்சி புரிவதே செங்கோன்மை எனப்படும். பரிமேலழகர் செங்கோன்மையைப் பற்றிக் கூறும்போது,

"அரசனாற் செய்யப்படும் முறையினது தன்மை; அம்முறை ஒருபாற் கோடாது செவ்விய கோல் போறலின், செங்கோல் எனப்பட்டது. வடநூலாரும், 'தண்டம்' என்றார்" (192, ப.207)

என்கிறார்.

1974-இல் அ.மு. பரமசிவானந்தம் "வள்ளுவர் கண்ட அரசியலும் சங்க இலக்கியங்களும்" என்னும் கட்டுரையில்,

"நாடாளும் நல்லவன் எப்படித் துலாக்கோல் ஒத்து நேர்மையுடன் நடைபெற வேண்டுமென்ற உண்மையினை வள்ளுவர் செங்கோன்மை முதற்பாட்டிலேயே விளக்கிக்காட்டுகிறார்" (155, ப.36)

என்கிறார்.

"ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து" (குறள். 541)

என்னும் குறள் கருத்தினை,

"நீமெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி" (புறம். 10)

என்று ஊன்பொதி பசுங்குடையார் பாட்டும்,

"அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால் நமர் எனக் கோல்கோடாது
பிறர்எனக் குணங்கொள்ளாது" (புறம். 55)

என்ற மதுரை மருதனிள நாகனார் பாட்டும் வலியுறுத்துவதைக் காணலாம். என அ.மு. பரமசிவானந்தம் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

1974-இல் இரா. சாரங்கபாணி "வள்ளுவர் கண்ட அரசியலும் பிற அற இலக்கியத்தார் கண்ட அரசியலும்" என்னும் கட்டுரையில்,

"திருக்குறளும் சிறப்பாக ஏனைய அறநூல்களும்
குடிபுறந்தந்து நெறி பிறழாது ஆளும் செங்கோன்மையையே
சிறப்பிக்கின்றன" (87, ப.48)

என்கிறார். உலகம் வானோக்கி வாழ்தல் போலக் குடிகள் மன்னவன் கோனோக்கி வாழும்; அந்தணர் நூற்கும் அறத்திற்கும் அடிப்படை செங்கோலே; கோல்கோடின் மன்னவன் கேடெய்தும்; குற்றத்திற்குத் தக ஒறுத்துக் குடிமக்களை ஓம்பல், கோனின் கடன். இவ்வாறு செங்கோன்மை அதிகாரத்தில் முறை செய்தலின் நன்மை முதலியன பற்றித் திருவள்ளுவர் கூறியுள்ளார்.

முன்னோர் மொழிப்பொருளே அன்றி அவர் மொழியும் பொன்னே போல் போற்றிப் பின்வந்த அறநூல்கள் ஆட்சி செய்துள்ளன.

"கோனோக்கி வாழும் குடியெல்லாம்" (நான்மணி, 28)

"கோல்கோடி மாராயம் செய்யாமை முன்னினிது"

(இனி. நாற். 6)

"மன்னவர்க்கழகு செங்கோன் முறைமை"

(வெற்றி வேற்கை. 5)

"செங்கோலான் அல்லாக்கால் சேர்ந்தாரும் என்னுவரால்"

(பழமொழி, 250)

எனச் செங்கோன்மையின் உயர்வை நீதி இலக்கியங்கள் கூறுவதைத் திருக்குறளுடன் இரா. சாரங்கபாணி ஒப்பிடுகிறார்.

### 4.7.3 கொடுங்கோன்மை

கல்விக்குக் கல்லாமையும், நட்புக்குத் தீநட்பையும் கூறியதைப் போன்று வள்ளுவர் செங்கோன்மைக்குப் பின் கொடுங்கோன்மையைப் பற்றிக் கூறியுள்ளார்.

1974-இல் இரா. சாரங்கபாணி "வள்ளுவர் கண்ட அரசியலும் பிற அற இலக்கியத்தார் கண்ட (2) அரசியலும்" என்னும் கட்டுரையில், கொடுங்கோன்மை பற்றிய கருத்தையும் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

"குறளும்-பிற அறநூல்களும் கொடுங்கோன்மையினால் உண்டாகும் தீமைகளைக் கூறுகின்றன. அல்லவைச் செய்தொழுகும் வேந்து கொலைஞரினும் கொடியன். அவன் நாட்டில் மழை பொய்க்கும்; ஆபயன் குன்றும்; அறுதொழிலோர் நூல் மறப்பர். அவன் கூழும், குடியும் ஒருங்கிழப்பான் என்று தீயாட்சியின் கொடுமையை வள்ளுவர் கூறுகிறார்.

இக்கருத்துகளை,

"கொடுங்கோன் மறமன்னர்க் கீழ்வாழ்தல் இன்னா"
(இன்னா.7)

"கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தன்
வல்லே மழையருக்கும் கோள்" (திரிகடுகம்.50)

"முறையில் அரசன் நாடு நல்கூர்ந்தன்று"
(முதுமொழி, 9:1)

"சீரிலா வெங்கோலான் கீழ்க்குடிகள் வீந்துகவும்"
(ஏலாதி. 10)

என்னும் பாடல் அடிகள் கூறுகின்றன என்று சான்றுகள் தருகிறார்
(87,பக்.50-51).

## 4.8 அரசனின் உறுப்புகள்

நல்ல அரசுக்கு வலுவுடைய துணைமையான உறுப்புகள் அமைதல் வேண்டும். திருக்குறள் பொருளதிகாரத்தில் 'இறைமாட்சி' என்னும் அதிகாரத்தின் முதல் குறள் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஆறும் உடையான் அரசருள் ஏறு போல்வன் என்று கூறுகிறது.

திருக்குறளைப் பிற இலக்கியத்துடன் ஒப்பிட்டு இக்கருத்துக்கு மேலும் ஒரு விளக்கம் தந்துள்ளனர்.

1964-இல் மதுரை முதலியார் "திருவள்ளுவர் அரசு" என்னும் நூலில், அரசியல் மரமாகவும், அரசன் வேராகவும், அமைச்சர் பருத்த அடிக்கிளைகளாகவும், படைத்தலைவர் கிளைகளாகவும், படைவீரர்

தளிர்களாகவும், குடிகள் மலர்களாகவும் இருக்க வேண்டும் (சுக்.15) என்ற கருத்தைத் திருக்குறள், 381-உடன் ஒப்பிடுகின்றார் (163, ப.13).

### 4.8.1 படை

படை என்பது அரசனின் உறுப்புகளுள் ஒன்று. இதனை, படைமாட்சி (77), படைச்செருக்கு (78) என்னும் இரண்டு அதிகாரங்களில் திருவள்ளுவர் தனியாக விளக்கிக் கூறியுள்ளார். படை, என்பது படைக்குரிய கருவிகளையும், படைவீரர்களையும் குறிக்கும்.

#### 4.8.1.1 படையின் சிறப்பு

படையையும் அரசனையும் தொடர்புபடுத்தி ஆய்வுகள் வந்துள்ளன. 1952-இல் தேவநேயர் "பழந்தமிழாட்சி" என்னும் நூலில்,

> "ஒரு நாட்டு அரசியற்குப் படையே அடிப்படை.
> படையிருப்பின் நாடில்லாதவனும் நாட்டைப் பெறலாம்.
> படையில்லாவிடின் நாடுடையவனும் அதை இழப்பான்.
> ஆதலின் படையானது அரசனுக்கு இன்றியமையாத
> உறுப்பாகும்" (142, ப.44)

என்கிறார். இளங்கோவடிகள் சேனையை, "அரசன் திருமேனி" (சிலம்பு. 25:191) என்று கூறுவதைப் போலத் திருவள்ளுவரும்,

> "உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
> வெறுக்கையுள் எல்லாம் தலை" (குறள். 761)

என்கிறார். அரசன் தொழிலாகிய காவல், போர் இரண்டுக்கும்,

'படை' இன்றியமையாதது என்பதை மேற்கண்ட சான்றுகளின் வழியே அறியமுடிகிறது.

### 4.8.1.2 படைவீரர் கொள்கை

அரசனுக்குப் பாதுகாப்பான படைவீரர் கொள்கையுடையவராக இருக்க வேண்டும். இதனைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் கூறுகின்றன.

1952-இல் தேவநேயப் பாவாணர் "பழந்தமிழாட்சி" என்னும் நூலில்,

> "நீண்ட நாளாகப் போர் பெறாத தொல்படை தன் மறமிகையால் தானே போருக்கு முனைவதும், அரசன் தடுப்பினும் மீறுவதும் உண்டென்பது அறியப்படும்".
>
> (142, ப.47)

என்கிறார். மூலப்படையை வள்ளுவர் தொல்படை என்கிறார். இது வென்றே மீளும் கொள்கை உடையது என்பதனை,

> "உட்பகை ஒருதிறம் பட்டெனப் புட்பகைக்
> கேவான் ஆகலிற் சாவேம் யாமென;
> நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப" (புறம்.68)

என்று புறநானூற்றுப் பாடலும்,

> "உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்
> செறினும்சீர் குன்ற லிலர்" (குறள். 778)

என்று திருக்குறளும் கூறுகின்றன எனத் தேவநேயப்பாவாணர் ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

### 4.8.1.3 படைவீரர் வீரம்

படைக்கலங்கள் நன்றாக இருக்க வேண்டும். அதே வேளையில் படைவீரன் வீரமிக்கவனாக இருத்தல் வேண்டும். இதனைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் கூறுகின்றன.

1974-இல் இரா. சாரங்கபாணி "வள்ளுவர் கண்ட அரசியலும் பிற அற இலக்கியத்தார் கண்ட அரசியலும்" என்னும் கட்டுரையில், படைவீரரின் வீரம் பற்றிக் குறிப்பிடுகிறார்.

"எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்ல தரண்" (குறள். 750)

என்னும் குறட்கருத்து,

"யார்க்கானும் அஞ்சுவார்க்கு இல்லை அரண்" –
(பழமொழி. 285)

என்னும் பழமொழியுடன் ஒப்புடையது. வீரம் இல்லாதவனுக்கு வாளால் பயனில்லை என்பதை,

"வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு" (குறள். 726)

என்னும் குறட்கருத்தும்,

"ஆற்றல் இல்லாதவன் பிடித்த படையின்னா"
(இன்னா. 8)

என்னும் இன்னா நாற்பதும் கூறுவதனை ஒப்பிடுகிறார் (87, ப.54).

4.8.1.4 வீரச்செயல்

படைவீரர்கள் சிலர் வீரச்செயலைப் புரிந்துள்ளனர். இதனைத் தாய் பாராட்டி மகிழ்ந்துள்ளதைச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.

1974-இல் அ.மு. பரமசிவானந்தம் "வள்ளுவர் கண்ட அரசியலும் சங்க இலக்கியமும்" என்னும் கட்டுரையில் 'வீரம்' பற்றிக் குறிப்பிடுகிறார்.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்" (குறள்.69)

என்ற வள்ளுவர் வாக்கினும், ஒருபடி மேலாகச் சென்று காக்கைப்பாடினியார் வீரத்தோடு போரிட்டு மடிந்து மகனைக் கண்டு பெரிது மகிழ்ந்த தாயினத்தை எண்ணி,

"படுமகன் கிடக்கைக் காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே" (புறம்.278)

என்று பாராட்டும் நிலை போற்றுதற்குரியதன்றோ? என்று அ.மு. பரமசிவானந்தம் கூறுகிறார் (155, பக்.38-39). "சான்றோன்" என்பதை வள்ளுவர் அறிவில் சிறந்தவன் என்று கூற, காக்கைப் பாடினியோ வீரத்தில் சிறந்தவனைக் கூறுகிறார் என்று ஒப்போடு உறழ்வையும் சுட்டிக் காட்டுகிறார்.

4.8.2 படைவகைகள்

சங்க காலத்தில் படையை நான்கு வகைகளாகப் பிரித்திருந்தனர். அவை காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படையாகும்.

4.8.2.1 யானைப்படை

யானைப்படைப் பற்றித் திருக்குறளுடன் பிற இலக்கியங்களை ஒப்பிட்டு ஆய்வு வந்துள்ளது.

1974-இல் இரா. சாரங்கபாணி "வள்ளுவர் கண்ட அரசியலும் பிற அற இலக்கியத்தார் கண்ட அரசியலும்" என்னும் கட்டுரையில், யானைப் படை சங்க காலத்தில் அரசனுக்குப் பேருதவியாக இருந்துள்ளது' என்கிறார். இவர்,

"குன்றேறி யானைப்போர் கண்டற்றால்" (குறள்.758)

"புதையம்பிற் பட்டுப் பாடூன்றும் களிறு" (குறள்.597)

"கைவேல் களிற்றொடு போக்கி" (குறள்.774)

என்னும் தொடர்கள் யானைப்போர் நடைபெற்றுள்ளதை உணர்த்துகின்றன. அவர், பின் வந்த அறநூல்களும் யானைப்படையின் இன்றியமையாமையைப் புறக்கணிக்கவில்லை என்பதற்கு,

"படைதனக்கு யானை வனப்பாகும்" (சிறுபஞ்ச.7)

"யானையுடைய படைகாண்டல் முன்னினிதே" (இனியவை.5)

"யானையில் மன்னரைக் காண்டல் நனியின்னா" (இனியவை.23)

என்ற பாடல்களைச் சான்றுகளாகக் குறிப்பிடுகிறார் (87, பக்.53-54).

4.8.2.2 குதிரைப்படை

படையின் வகைகளுள் ஒன்றான குதிரைப்படையின் சிறப்பைச் சங்க இலக்கியமும்-குறளும் கூறுவதை ஒப்பிட்டும் இரா. சாரங்கபாணி ஆய்வு மேற்கொண்டுள்ளார். அவர், குதிரைப்படை இருந்தமையை,

"அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா" (குறள். 814)

என்று குறளும்,

"படைக்குட்டம் பாய்மா உடையான் உடைக்கிற்கும்" (நான். 18)

என்னும் நான்மணிக்கடிகையும்,

"ஊருங்கலிமா உரனுடைமை முன்னினிதே" (இனியவை. 9)

என்று இனியவை நாற்பதும் குறிப்பிடுகின்றன என்கிறார். (87, ப.54)

4.8.2.3 படை ஒப்பனை

இரா. சாரங்கபாணி அரசனுக்கு அமைந்திருந்த நான்கு படைகளும் ஒப்பனை செய்வது சிறப்புடையதாகக் கருதப்பட்டது என்று கூறுகிறார். இதனை,

"படைத்தகையாற் பாடுபெறும்" (குறள். 768)

என்று குறளும்,

"மணியில்லாக் குஞ்சரம் வேந்தூர்தல் இன்னா" (இன்னா. 14)
"புல்லார் புரவி மணியின்றி ஊர்வின்னா" (இன்னா. 16)
"வெறும்புறம் வெம்புரவி ஏற்று இன்னா" (இன்னா. 39)

என இன்னா நாற்பதின் பாடல் அடிகள் படைகளின் ஒப்பனை இன்மையின் இன்னாமையை உணர்த்தும் என்கிறார் (87, ப.54).



### 4.8.3 குடியும் அரசனும்

அரசனின் உறுப்புகளுள் "குடியும்" ஒன்று. இதனை,

"ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு" (குறள்.740)

என்னும் குறள் நாட்டிற்கு மன்னனின் இன்றியமையாமை என்ற கருத்தினையும்,

"மன்னன் உயிர்த்தே மலர்தலையுலகம்" (புறம்.180)

என்றாங்கு மன்னவன் குடிமக்களின் உயிர்தான் என்று கருதித் தன் உடம்பனைய மக்களை நன்குப் புரத்தல் வேண்டும் என்ற புறநானூற்றுக் கருத்தையும் இரா. சாரங்கபாணி ஒப்பிடுகின்றார் (87, ப.55). இவர், நாட்டுமக்கள் பண்பினராக வாழ்ந்தால்தான் அரசனுக்குச் சிறப்பு என்னும் ஆய்வு நோக்கில் ஒப்பிட்டுள்ளார்.

### 4.8.4 அமைச்சு

மன்னவனுக்கு உரிய ஆறு அங்கங்களுள் அமைச்சும் ஒன்று. அமைச்சு என்பதற்கு மந்திரித் தொழில், மந்திரிமார் என்று பொருள்கள் உண்டு. இந்த அமைச்சுப் பற்றிய செய்திகளைத் திருக்குறளிலும் பிற இலக்கியங்களிலும் காணலாம்.

#### 4.8.4.1 அமைச்சுப் பதவித் தோற்றம்

அமைச்சுப் பதவித் தோற்றம் பற்றி ஆய்வு மேற்கொள்ள திருக்குறளைச் சங்க இலக்கியத்துடன் ஒப்பிட்டுள்ளனர்.

1977-இல் கு. ரா. ஜலஜா "அமைச்சு : குறளும் சங்க இலக்கியங்களும்" என்னும் கட்டுரையில்,

> "ஐம்பெருங்குழுவின் ஒன்றான 'அமைச்சு' என்ற பதவி சங்கத்தை அடுத்த குறளிலும், சிலம்பிலும் காணப்படுவதால் வள்ளுவர் தம் காலத்தில் கண்ட அல்லது தான் கேள்வியுற்ற 'அமைச்சு' என்பதைத் தமிழக அரசியலில் சேர்த்திருக்கலாம். எனவே, அமைச்சு என்பது சங்ககால அரசியலில் காணாத ஓரமைப்பே என்று கொள்ள முடிகின்றது" (193, ப.493)

என்கிறார். இதற்கு,

1. சங்க இலக்கியத்தில் இரண்டு இடங்களில் மட்டுமே அமைச்சு, அமைச்சியல் என்ற சொல்லாட்சிகள் உள்ளன.

2. நன்மாந்தரொடு (மதுரை.19), காவிதி மாக்கள் (மதுரை.493) என்ற சங்க இலக்கியச் சொற்களுக்கு உரையாசிரியர்கள் 'அமைச்சர்' என்று பொருள் கூறினாலும் தெளிவு இல்லை.

என்ற இரு சான்றுகளைத் தருகிறார்.

### 4.8.4.2 அமைச்சர் பதவியும் - தகுதியும்

அமைச்சர் பதவியின் தகுதியைப் பற்றிக் குறள் கூறுவதைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டு ஆய்வுகள் மேற்கொண்டுள்ளனர்.

1974-இல் முனைவர் சோ. சுப்பிரமணியன் "வள்ளுவர் கண்ட அரசியலும் மனுவும்" என்னும் கட்டுரையில்,

"பண்டைக்கால அரசாங்கத்தில் அரசர் அறிவாலும், ஆற்றலாலும் சிறந்தவராக இருந்தபோதிலும் தனியாளாக நாட்டு ஆட்சியைத் திறம்பட நடத்தமுடியாது என்று கருதப்பட்டதால் அரசருக்குத் துணையாக அறிவுரை வழங்க அமைச்சரவை ஏற்பட்டதென்பதைக் கூறலாம்"
(106, பக்.102-103)

என்கிறார். அமைச்சரவை பற்றிய கருத்துகளை மனுவும் திருவள்ளுவரும் விரிவாகக் கூறியுள்ளனர். ஆனால், இவ்விருவருக்குமிடையே வேற்றுமையும் உண்டு.

திருவள்ளுவர், அரசருக்குத் துணையாகக் கல்வி கேள்விகளில் சிறந்த மதிநுட்பம் மிக்க, திறமையுடைய இராசதந்திரத்தில் வல்ல அமைச்சர்கள் தேவையென்பதை,

"கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்ட தமைச்சு" (குறள்.631)

என்ற குறட்பாக்கள் வழியே கூறுகின்றார். மனுவோவெனில், 'அமைச்சர்கள், மேற்குலத்தைச் சார்ந்தவர்களாகவும், பரம்பரை பரம்பரையாகப் பதவிக்கு வருபவர்களாகவும் இருக்க வேண்டும்' என்கிறார். பெரும்பாலான ஸ்மிருதிகள் அமைச்சர் பதவி பிராமண வகுப்பைச் சார்ந்தவர்களுக்குத் தரப்படவேண்டும் என்று வற்புறுத்தும்போது, மனு ஒரு சில அமைச்சர்கள் சத்திரியப் பிரிவைச் சேர்ந்தவர்களாகவும் இருக்கலாம் என்று கூறுவதால் வகுப்புவாதிகளால் சற்றுப் பரந்த நோக்குடையவராகத் தோன்றுகிறார் என்கிறார்.

4.8.4.3 குறள் கூறாப் புதிய அமைச்சு

திருக்குறளில் அமைச்சுப் பற்றி விரிவாக வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். ஆனாலும், இவற்றில் காணப்படாத அமைச்சுப் பற்றிய செய்திகள் பிற இலக்கியங்களில் உள்ளன என்று ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1974-இல் இரா. சாரங்கபாணி "வள்ளுவர் கண்ட அரசியலும் பிற அற இலக்கியத்தார் கண்ட அரசியலும்" என்னும் கட்டுரையில்,

> "அமைச்சு, ஒற்று, தூது என்பவர்களின் இலக்கணம் பற்றித் திருக்குறளினும் சிறப்பாகவோ, விரிவாகவோ ஏனை அறநூல்கள் கூறவில்லை. எனினும், அமைச்சர் நடந்துகொள்ளும் முறை பற்றிப் பழமொழி ஒன்று கூறும் செய்தி புதுவதாக உள்ளது" (87, ப.59)

என்கிறார். திங்களைக் காட்டிப் பொய்க்கூறி மருட்டித் தன் குழந்தைக்கு உணவூட்டும் தாய்போலத் தகுதியற்ற செயலை மன்னன் செய்யுங்காலத்து, அறிவுடைய அமைச்சன் சூழ்ச்சி புரிந்து வஞ்சித்தாயினும், அவனை நன்நெறிப்படுத்த வேண்டும் என்று பழமொழி 264 அறிவுறுத்துகிறது. "பொய்மையும் வாய்மையிடத்த" (குறள். 292) என்று கூறும் குறளறம் போல் மேலைப் பழமொழியறத்தைக் கொள்ள வேண்டும் என்கிறார்.
(87, ப.59)

இவ்வகை ஆய்வுகள் ஒப்புமைகளை மட்டுமே சுட்டாமல், கருத்து வளர்ச்சிகளையும் சுட்டிக்காட்டும் போக்கினவாக அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது.

4.8.5 <u>நட்பு</u>

மன்னவனின் உறுப்புகளுள் 'நட்பும்' ஒன்றாகும். திருவள்ளுவர் கூறும் நட்பைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1974-இல் அ.மு. பரமசிவானந்தம் "வள்ளுவர் கண்ட அரசியலும் சங்க இலக்கியங்களும்" என்னும் கட்டுரையில்,

> "நட்பைப் பற்றி பல அதிகாரங்களில் வள்ளுவர் குறிப்பிடுவர். அத்தனைக்கும் விளக்கங்கள் சங்க இலக்கியங்களுள் காணலாம். ஒத்தார் மட்டுமின்றிச் சாதாரண மக்களிடத்தும் அன்பொடு கலந்த நட்பின் நிலையில் மன்னர் வாழ்ந்தார் என்பதைப் பல புலவர்கள் காட்டுவர்" (155, ப.32)

என்கிறார்.

> "பெரிது ஆண்ட பெருங்கேண்மை
> அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்"
> (பொரு. 229-30)

என்று கரிகால் பெருவளத்தான் பண்பு பாராட்டப்பெறுகின்றது. பெரியவர் நட்பினை,

> "புரைய மன்ற புரையோர் கேண்மை" (நற்.1)

என்று நல்லுவமை வழியே பெரியோர் நட்பு காட்டப்பெறுகின்றது. இப்புரையோர் கேண்மையை வள்ளுவர்,

> "மருவுக மாசற்றார் கேண்மை" (குறள்.800)

என்றும்,

"குடிபிறந்து தன்கண் பசி நாணுவானைக்

கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு" (குறள்.794)

என்றும் திருக்குறள்களில் கூறுவர் என்கிறார்.

## 4.9 அரசின் பாதுகாப்புத் திட்டக்குழு

அரசியலில் பாதுகாப்புக்கென ஒரு திட்டக்குழு உண்டு. இதனை வடநூலார் மண்டலக் கொள்கை என்பர்.

1974-இல் முனைவர் கோ. சுப்பிரமணியன் "வள்ளுவர் கண்ட அரசியலும் மனுவும்" என்னும் கட்டுரையில்,

> "இராசதந்திரம், அயல்நாடுகளுடனான உறவுகள் பற்றிய சிறந்த கருத்துகளும் திருக்குறளில் காணப்படுகின்றன. அவ்வாறே மண்டலக் கொள்கைப்பற்றிய கருத்துகளும் விரவிக்கிடக்கின்றன. மனுதர்ம சாத்திரத்திலும், திருக்குறளிலும் இக்கொள்கை எவ்வாறு தரப்பட்டிருக்கின்றதென்பதைக் காணலாம்"(106, ப.104)

என்கிறார். மனுவின் மண்டலக் கொள்கை ஓர் அரசனுக்கு வழிகாட்டும் வகையில் கூறப்பட்டுள்ளது. அவர் சொல்லும் மண்டலத்தில் பன்னிரண்டு அரசர்களும் மொத்தமாக எழுபத்திரண்டு வலிமைக் கோட்பாடுகளும் உள்ளன. இதுதவிரப் பகைவரின் திறனை எவ்வாறு உணர்ந்துகொள்ள வேண்டும்? எப்படி அவர்களை அடக்க வேண்டும்? போரில் ஆறு முறைகளான சாந்தி முதல் துவைதிபாவம் வரையானவற்றைக் கைக்கொண்டு எவ்வாறு வெற்றி காணவேண்டும் என்றும் அவர் குறிப்பிடுகிறார்.

ஆனால், வள்ளுவர் இகல், பகைமாட்சி, பகைத்திறம் தெரிதல் ஆகிய அதிகாரங்களில் சுருங்கக் கூறுகிறார். மேலும், வள்ளுவரும் மனுவும் வேறுபடும் இடங்களும் உண்டு. மனு கூறும் அரசர், "மண்டலம் முழுவதையும் தன் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வருவதற்காகப் போர் செய்வதையே பெரும்பாலும் தன் கடமையாகக் கொண்டிருக்க வேண்டியவ-ராவார்" (மனு.7. 55, 158). ஆனால், குறள் கூறும் அரசர் பகைமையை விரும்பாதவராய், "பகை நட்பாக் கொண்டொழுகும் பண்புடையாளராக" (குறள். 874) இருத்தல் வேண்டும் என எதிர்பார்க்கிறார் என வேறுபடுத்தி சோ. சுப்பிரமணியன் கூறுகிறார்.

இத்தகைய ஒப்பீடுகள், இருபுலத்துச் சிந்தனைகளின் ஒப்புமைகளையும் உறழ்வுகளையும் வெளிப்படுத்துவதோடு, மனுவைப் பார்த்துத்தான் திருவள்ளுவர் தம் கருத்துகளை வடித்தார் என்பது போன்ற கருத்துகளைப் போக்கவும் உதவுகின்றன எனலாம்.

## 4.10 இனமுறை அரசு

ஒரு நாட்டின் மன்னனைத் தேர்ந்தெடுத்தல் என்பது பொதுமுறையாகவும் தனி இனமுறையாகவும் உண்டு என்பதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. இது திருக்குறளிலும்-பிற இலக்கியங்களிலும் எவ்வாறு அணுகப்பட்டுள்ளது என்பதை ஒப்பிட்டு ஆய்வு வந்துள்ளது.

முனைவர் சோ. சுப்பிரமணியன் மனுவையும் திருக்குறளையும் ஒப்பிட்டு அரசன் தேர்வு முறையைக் கூறுகிறார். அவர், திருக்குறள் எந்த ஒரு தனிப்பட்ட அரசரைப் பற்றியோ, ஆட்சியமைப்பைப் பற்றியோ கூறாது பொதுவாக அரசருக்கும், அரசாங்கத்திற்கும் இருக்க வேண்டிய தகுதிகளையும்,

தன்மைகளையும் எடுத்துரைக்கின்றது. இதற்கு ஆதாரமாகப் பொருட்பாலில் 381, 731, 734, 740 என்னும் குறட்பாக்களைச் சான்றாகக் கூறலாம் என்கிறார்.

ஆனால், மனுநீதி பரப்பளவாலும் மக்கள் தொகையாலும் சிறியதாகவுடைய அரசைப் பற்றியும், அவ்வரசில் யார்? அதாவது எப்பிரிவைச் சார்ந்தவர் ஆட்சிச் செலுத்தக்குந்தவர் என்பதைப் பற்றியும் அவ்வரசிற்கே இயல்பாகவுடைய பொருளாதாரத்தைப் பற்றியுமே குறிப்பிடுகிறது. மனுநீதியின் இக்கருத்துகள் அக்காலத்தில் இனஅரசு முறை இருந்தது என்பதைச் சுட்டிக் காட்டுவனவாக அமைந்துள்ளன என முனைவர் சோ. சுப்பிரமணியன் ஒப்பிடுகிறார் (106, பக். 96-97).

## 4.11 அரசு அலுவலர் தேர்வு முறை

அரசின் பணிகளைச் செய்ய அலுவலர்கள் அமர்த்தப்படுவது பழங்காலந்தொட்டு இன்றுவரை செயல்பட்டு வருவதை அனைவரும் அறிந்த ஒன்றாகும். இதனைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் கூறியுள்ள நோக்கினை ஒப்பிட்டு ஆய்வு வந்துள்ளது.

1952-இல் தேவநேயப்பாவாணர் "பழந்தமிழாட்சி" என்னும் நூலில்,

> "ஊர்களிலிருந்த ஆளுங்கணத்தார் ஆங்காங்குள்ள மக்களால் அரசாணை விதிப்படி தேர்ந்தெடுக்கப்பட்டனர். பிற அரசியல் வினைஞரெல்லாம் பெரும்பாலும் அரசனாலும் அவ்வம் மேலதிகாரிகளாலும் அமர்த்தப்பட்டனர்"
>
> (142, ப.35)

என்கிறார்.

இதனை,

"அறநிலைத் திரியா அன்பின் அவையத்துத்
திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக" (புறம்.7)

என்னும் பாடலும்,

"நடுவிகந்தொரீ நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன்" (கலி.8)

என்னும் பாடலும்,

"அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்" (குறள்.501)

என்னும் குறளும் கூறுவதைத் தேவநேயப் பாவாணர் ஒப்பிடுகிறார்.

4.12 தேசியம் : இனவழி அரசு

மொழி, இனம், சமயம், பண்பாடு, இலக்கியம், வரலாறு ஆகியவற்றின் பொதுமையால் ஓரிடத்து வாழும் மக்களிடையே நெருங்கியப் பிணைப்பும் ஒருமையுணர்வுமே தோன்றுகின்றன. இந்தப் பிணைப்பும் ஒருமை உணர்வுமே தேசியம் ஆகின்றது. இந்த நோக்கில், திருக்குறளைப் பிற இலக்கியத்துடன் ஒப்பிட்டு ஆய்வு மேற்கொண்டனர்.

1982-இல் தி. முருகரத்னம் "குறள் கூறும் அரசு" என்னும் நூலில்,

"முடிசூடிய பெருநில வேந்தர்களும் பலப்பல குறுநில மன்னரும்
ஆண்ட ஒரே தமிழகத்தில் இனவழித் தேசியமும்,

மொழிவழித் தேசியமும், தேசிய உணர்வும் இருந்திருத்தல் அரிதே; அரிதேயானாலும் அவை இல்லை என்றும் கூறமுடியவில்லை" (173, பக்.6-8)

என்கிறார். இதற்கு,

"காவா நாவின் கனக விசயனும்
. . . . . . . .
அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலர் ஆங்கெனக்
கூற்றம் கொண்டு இச்சேனை செல்வது"
(சிலம்பு.26:154-162)

என்னும் பாடலில் செங்குட்டுவனின் கூற்றில் தேசிய உணர்வு தெரிகிறது. ஆனால், இச்செங்குட்டுவனுக்குத் தமிழினச் சோழன், பாண்டியன் பகைவர்களே. திருக்குறளிலும், "பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி"(குறள்.733) என்பதில் தேசிய உணர்வு உள்ளது என்று சிலர் கருதுகின்றனர். சிறிதே வலிந்து பொருள் கொள்ளுவதாகத்தான் தோன்றுகிறது என்று தி.முருகரத்னம் முடிவு தருகிறார். திருக்குறளுக்கு இனச்சார்புக் கற்பிப்பதை இவர் ஆய்வு மறுக்கிறது எனலாம். திருக்குறள் சாதி, மதம், இனம், மொழி, நாடு போன்ற அனைத்து எல்லைகளையும் கடந்து எல்லார்க்கும் பொதுவான கருத்துகளையே கூறுவது; இஃது அரசியல் அளவிலும் பொருந்தும். இதனை இந்த ஆய்வு வலியுறுத்துகின்றது.

## 4.13 தமிழில் பொருள்நூல் வரலாறு

வடநாட்டில் சாணக்கியரின் அரசியல் அறிவாற்றலால், சந்திர குப்தரின் பேரரசு இந்திய வரலாற்றிலேயே ஒரு தனிச்சிறப்பு எய்தியிருந்தது. இதைப் போலத் தமிழகத்திலும் இருந்திருக்க வேண்டும்

என்னும் கருத்தில் திருக்குறளைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டு ஆய்வுகள் எழுதியுள்ளனர்.

1977-இல் பி.சி. இராமானுசாச்சாரி "திருக்குறளும் கௌடலீயமும்" என்னும் கட்டுரையில்,

> "அறத்தின் நெறிநின்று பொருளை ஈட்டி, பொருளின் உதவியால் இன்ப வாழ்வு பெறுவதற்குரிய நெறிமுறைகளை அரசியல் ஆணையோடு இணைத்து அறிவுறுத்தும் நூலைப் பண்டைக்காலத்தில் "பொருள்புரி நூல்" என்ற பெயரால் இயற்றியுள்ளனர் எனப் பெருங்கதை ஆசிரியர் போற்றி-யுள்ளார். தமிழ்நாட்டுப் பொருளமைப்பினை உணர்ந்து-கோடற்குச் சங்க இலக்கியங்களும், திருக்குறளும் ஓரளவு துணைசெய்வன என்ற கருத்தை அடியொற்றி குறட்
> கருத்துக்கள் பல ஒற்றுமை பெற்றுள்ள
> கருத்துகளுடன் கௌலீயர் நூற்செய்தியைத் தாலீபுலாகம் என்ற நீதியை ஒட்டி எடுத்துக்காட்டுவாம்"
>
> (39, பக்.45-46)

என்கிறார். மேலும்,

> "ஒற்றர் மூவருடைய சொற்களும் பொருள் ஒற்றுமையுடைய வாக இருக்குமாயின் உறுதியாக நம்பிக்கை கொள்ளலாம்"
>
> (அதி. 12)

என்பதும்,

> "ஒற்றொற் றுணராமை ஆள்க உடன்மூவர்
> சொல்தொக்க தேறப் படும்" (குறள்.589)

என்ற குறட்கருத்தும் ஒத்திருக்கின்றன என்கிறார். இவர், ஒப்புமைப் படுத்திக் கூறுவதை மேற்குறிப்பிட்ட சான்றின்வழி அறியலாம்.

## 4.14 வடநூல் அரசியலும் குறள் அரசும்

திருக்குறளில் அரசியலைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது, பரிமேலழகர் தம் உரையில் அரசநீதி, அரச தண்டம் என்னும் வடநூல் அரசியல் கருத்துகளை ஒப்பிடுகிறார். இதன்பிறகு, இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பரிமேலழகர் உரைப் பதிப்பிக்கப்பட்ட பிறகு வடநூல்களைத் திருக்குறளுடன் முன்னிறுத்தி ஆய்வுகள் வந்துள்ளன. அவை, 1. குறள் அரசும் வடநூலரசும் முரண்பாடுடையன; 2. திருக்குறள் வடநூல் மொழிபெயர்ப்பே; 3. திருக்குறள் வடநூல் பெயர்ப்பு கிடையாது என மூவகைப்பட்டவை.

### 4.14.1 குறளரசும்-வடநூலரசும் முரண்பாடுடையன

திருக்குறள் கூறும் அரசும்-வடநூல் குறிப்பிடும் அரசும் முரண்பாடுடையன என்னும் நோக்கில் 1949-க்குப் பிறகே ஆய்வுகள் வருகின்றன.

1949-இல் இறையனார் "வள்ளுவர் கொள்கையும் வடவர் கொள்கையும் என்னும் நூலில்,

> "வடவர்கள் கொள்கைப்படி அவர்கள் நூலில் கூறியவண்ணமே அரசன் ஆட்சி செலுத்தவேண்டும்; நீதி வழங்கவேண்டும்; குற்றங்களுக்குத் தண்டனை விதிக்க வேண்டும்" (42, ப.1)

என்கிறார். குறிப்பாக,

> "அரசன் சூத்திரனைப் பிராமணனுக்குப் பணிவிடை செய்யும்படி கட்டளையிட வேண்டும்;

செய்யாவிடின் தண்டிக்க வேண்டும்; அப்படியே
செய்யாவிடின் உலகம் அழிந்துவிடும்"
(மனு. அத். 8. சு. 410)

என்றும்,

"மனு நீதிப்படி ஆட்சி செய்யாத அரசனை அந்த
மனுநீதிகொண்டே மந்திரி முதலானவர்கள்
கொன்றுவிடுவார்கள்" (மனு. அத். 7. சு. 26)

என்றும் கூறும். வடநூல் அரசியலுக்கு, முரணாகத் திருவள்ளுவர்,

"ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை" (குறள். 541)

என்று கூறுவதை இறையனார் சுட்டுகின்றார். மனுவின் அரசு நீதிக்கும், திருக்குறள் கூறும் அரச நீதிக்குமுள்ள முரண்பாட்டை இறையனார் கூறுவதைக் காணலாம்.

தொடர்ந்து, 1968-இல் என். முருகேச முதலியார் "திருக்குறளில் அரசியல்" என்னும் நூலில், திருக்குறளையும் அர்த்தசாத்திரத்தையும் ஒப்பிட்டு, அவை இரண்டும் முரண்பட்டிருப்பதைக் கூறுகிறார் (270, ப. 79).

"இன அடிப்படைப் பாதுகாப்பு, அமைப்புகளை வேதப்படி
செய்ய வேண்டும்" (அர்த். 1-3)

என்ற கருத்திற்கு,

"வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடா தெனின்" (குறள். 546)

என்னும் திருக்குறள் கருத்து முரண்பட்டுள்ளதை என். முருகேசமுதலியார் சுட்டுகின்றார். இவர் அர்த்தசாத்திரம் திருக்குறளுடன் மாறுபட்டிருக்கும் கருத்தை மட்டும் ஒப்பிட்டுள்ளார்.

1974-இல் கோ. சுந்தரமூர்த்தி "வள்ளுவர் கண்ட இறைவனும் வடநூல் மரபும்" என்னும் கட்டுரையில்,

> "திருக்குறளில் காணப்படும் அரசியல் குறிப்பாக இறைமைக் கோட்பாடு, ஒருவகையில் சமஸ்கிருத தரும சாத்திர நூல்களினின்றும் வேறுபட்டதாகக் காணப்படுகின்றது. கௌடலீயம் போன்று ஓரளவு கீழ்த்தரமான அரசியல் வள்ளுவருக்கு உடன்பாடில்லை" (101, ப.82)

என்கிறார். வள்ளுவர் அரசன் ஒழுகவேண்டிய விதிமுறைகளையும், அரசுரிமைப் பற்றியும் பேசவில்லை. தகுதி யாரிடம் உள்ளது? அரசுரிமைப் பிறப்பினால் வருகிறதா? அல்லது தேர்தலினால் வருகிறதா? என்பது பற்றி வள்ளுவரும் எதுவும் கூறவில்லை.

வள்ளுவர் அரசனுக்குப் பகையரசர் உண்டு, போர் செய்வதும் உண்டு, காத்துக்கொள்ள அரண் உண்டு, ஒற்றர்கள் உண்டு. ஆனால், புறம்பான போர் உத்திகளைக் கூறவில்லை. ஆனால், கௌடலீயத்தில் இவை பற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளன என்றும் உறழ்வுகளை முறைப்படுத்திக் கூறுகிறார்.

### 4.14.2 குறள் வடநூல் மொழிபெயர்ப்பா?

திருக்குறளில் காணும் இறைமைக் கோட்பாடுகளை விளக்கவந்த உரையாசிரியர்கள் திருக்குறள் வடநூலைத் தழுவியிருக்க வேண்டுமென்ற போக்கில் தம் உரைகளில் குறிப்பிட்டுள்ளனர். இதனை அடிப்படையாகக் கொண்டு திருக்குறள் நூல் வடநூலின் மொழி பெயர்ப்பே என்றும், வடநூலின் மொழி பெயர்ப்பு கிடையாது என்றும் ஆய்வுகள் வந்துள்ளன.

### 4.14.3 திருக்குறள் வடநூல் பெயர்ப்பே

திருக்குறளின் கருத்துகள் வடநூல் கருத்துகளுடன் தொடர்புடையதைக் கொண்டு வடநூலின் மொழிபெயர்ப்பாக இருக்கலாம் என்றும் ஆய்வுகள் வந்தன.

1968-இல் ப. அருணாசலம் "குறளின் செய்தி" என்னும் நூலில்,

> "குற்றங்கடிதல் பதிற்றுப்பத்தை ஒட்டியமைந்துள்ளது என்று கூறுவதை விடவும், அர்த்தசாத்திரத்தை ஒட்டி அமைந்துள்ளது என்று கூறுவதே பொருந்துவதாகவும் உள்ளது" (8, ப.59)

என்கிறார். இதற்கு,

> "சினனே காமம் கழிகண்ணோட்டம்
> அச்சம் பொய்ச்சொல் அன்புமிகவுடமை
> தெறல் கடுமையொடு பிறவும் இவ்வுலகத்து" (பதிற்.22)

என்று கூறும் குற்றங்கள் திருக்குறளில் பலவிடங்களிலும் காணப்பட்டுள்ளனவே தவிர

ஒருங்கு தொகுத்துக் காணப்படவில்லை என்கிறார். இவர் அர்த்தசாத்திரத்தில் இருந்து குற்றங்கடிதல் பற்றிச் சான்றுகள் ஏதும் தரவில்லை. இவர் ஆய்வானது திருக்குறள்-வடநூல் மரபை ஒட்டி அமைந்ததாக இருக்க வேண்டும் என்ற நோக்கில் செல்கிறது.

4.14.4 குறள் வடநூல் பெயர்ப்பு கிடையாது

திருக்குறள் அரசியல் வடநூலை ஒட்டியிருக்க வேண்டும் என்று கூறிய அறிஞர்களின் கருத்தை மறுத்து, திருக்குறளும் வடநூல் அரசியல் கருத்துகளும் அடிப்படையில் மாறுபட்டுள்ளதால் குறள் வடநூல் மொழிபெயர்ப்பு அன்று என்று ஆய்வுகள் வந்துள்ளன.

1971-இல் கு. இராசவேலு "திருக்குறள் காட்டும் ஆட்சிக் கலை" என்னும் நூலில்,

> "வள்ளுவர் பல செய்திகளைத் தொகுத்துக் கூற அர்த்தசாத்திரம் ஒவ்வொன்றையும் விளக்கிச் செல்கின்றது. குறள் வடமொழி பெயர்ப்பாக இருக்குமாயின் தொகுத்துக் கூறும் நடையை யாரும் பின்பற்றியிருக்க மாட்டார்கள். பொருள்நூல் என்னவென்று தெரியாத மக்களுக்கு எதையும் விரித்துரைக்க வேண்டும்" (29, ப.4)

என்று தம் கருத்தினை வழங்கி, குறள் வடநூல் மொழிபெயர்ப்பு கிடையாது என்கிறார். இதற்குச் சான்றுகள் எதுவும் தரவில்லை.

## 4.15 திருவள்ளுவரும் உலக அரசியலும்

திருவள்ளுவர் கூறிய அரசியல் சிந்தனைகளைத் தமிழ், இந்திய இலக்கியங்களுடன் ஒப்பிட்டதைப் போன்று கிரேக்க, சீன மொழி இலக்கியங்களுடன் ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

### திருவள்ளுவரும் கிரேக்க அரசியலும்

திருவள்ளுவரின் அரசியல் சிந்தனைகளை கிரேக்க அறிஞர்களின் சிந்தனைகளுடனும் ஒப்பிட்டு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. 1974-இல் பா. சூரியநாராயணன் "திருவள்ளுவரும், கிரேக்க அரசியற் சிந்தனையாளர்களும்" என்னும் கட்டுரையில்,

> "திருவள்ளுவர் வகுத்த அரசியற் கருத்துகள் தமிழகத்தில் இருந்த முடியாட்சிக்கு மட்டுமின்றி எவ்வகைப்பட்ட ஒரு அரசாங்க அமைப்பின் நல்லியல்புகளுக்கும் பொருந்துவனவாக இருக்கின்றன. மேலும், வள்ளுவர் வாழ்க்கைப் பிரச்சினைகளை எல்லாம், தமக்கு முந்தைய அறிஞர்களுடைய கருத்துகளின் வாயிலாகவும், ஒவ்வொருவருக்கும் இயல்பாக இருக்கக்கூடிய அறவுயர்வை ஒட்டியும், ஆராய்ந்து பார்த்து அரசியல் கருத்துகளை வகுத்தார். வள்ளுவருடைய காலச்சூழ்நிலைகளும் கிரேக்க ஆசிரியர்களுடைய காலச்சூழ்நிலைகளும் வேறுபட்டவை. எனவே, இவ்விரு திறத்தாருடைய அரசியற் கருத்துகளும், ஆராய்ச்சி முறைகளும் வேறுபடுகின்றன. எனினும், அடிப்படையான நோக்கங்களில், எடுத்துக்காட்டாக, அறம் அல்லது நீதி,

அரசாங்கத்தின் நல்லியல்புகள் முதலியவைகளைப் பற்றிய
கருத்துகளில் பெரிய அளவில் ஒற்றுமை காணப்படுகிறது"
(110, ப.113)

என்கிறார். பின்னர், கிரேக்க அரசியற் சிந்தனையாளர்களின் கருத்துகளைத் திருக்குறளுடன் ஒப்பிடுகிறார்.

4.15.1 சாக்ரடீசு

கிரேக்கச் சிந்தனையாளருள் முதலாவதாகக் குறிப்பிடும் சாக்ரடீசு,

"ஒவ்வொருவரும் தமது அறிவாற்றல் மூலம் சுதந்திரமாகச்
சிந்தித்து அறம் அல்லது நீதி என்பதைக் கண்டுகொள்ள
இயலும்"

என்பதை,

"மனத்துக்கண் மாசிலன் ஆதல்" (குறள்.34)

என்னும் குறளோடு சூரியநாராயணன் ஒப்பிடுகிறார்.

4.15.2 பிளேட்டோ

சாக்ரடீசு மாணவராகிய பிளேட்டோ (கி.மு.427-347) நீதி அல்லது அறம் என்பதைப் பற்றி ஆராய்ந்து கற்பனை அரசு என்ற தமது நூலில் எழுதியுள்ளார் என்று குறிப்பிடும் பா. சூரியநாராயணன்,

"வள்ளுவர் கூறும் அறம் அல்லது நீதி என்பது மனத்துக்கண் மாசு அற்ற இல்லற துறவற நெறியைக் குறிப்பதாகவும், பிளேட்டோ கூறும் நீதி, ஒவ்வொருவரும் தமது அறிவாற்றலுக்கேற்ற தொழிலைச் செய்து மற்றவர்களுடைய தொழிலில் தலையிடாமல் இருப்பதால் தோன்றும் நல்லுறவைக் குறிப்பதாகவும் இருக்கின்றன. வள்ளுவர் தமது நூலில் நீதி பற்றிய கருத்தைக் கூறும்போதோ, மற்றெவ்விடத்திலுமோ, பொதுவுடைமைக் கருத்தை ஆதாரமாகக் கொள்ளவில்லை. பொருள் செய்ல்வகை இல்லறவாழ்க்கை முதலியவை பற்றி வள்ளுவர் வகுத்த கருத்துகள் பிளேட்டோ தமது கடைசி () நிலையில் கூறிய கருத்துகளை ஒத்திருக்கின்றன"(110,ப.119)

என்கிறார். மேற்கண்ட சான்றின் வழியே பிளேட்டோ அரசியற் கொள்கையில் திருக்குறள் கூறும் அரசியல் நெறிமுறைகள் ஒத்தும், பிறழ்ந்தும் போவது தெளிவாகத் தெரிகின்றன.

### 4.15.3 அரிசுடாட்டில்

பிளேட்டோவின் மாணவரான அரிசுடாட்டில் (கி.மு.384-322)டு அரசியலின் கோட்பாடுகளைத் திருக்குறளுடன் ஒப்பிடும் சூரியநாராயணன்,

"அரசின் இன்றியமையாமை, அரசின் நோக்கமும் அதன் வகைகளும் என்பன பற்றித் தமது காலத்திலிருந்த நிலைமைகளை ஆராய்ந்து எழுதினாரேயன்றிப் பிளேட்டோ, வள்ளுவர் முதலிய ஆசிரியர்களைப் போல, நீதியின் பொருளை ஆய்வு செய்யவில்லை"(110, பக்.119-120)

என்கிறார். இவர் அரிசுடாட்டில்-வள்ளுவர் இருவருக்கிடையேயுள்ள அரசியல் கொள்கைகளை மட்டும் குறிப்பிடுகிறார்.

## 4.15.4 எப்பிக்யூரசு

கி.மு. நான்காவது, மூன்றாவது நூற்றாண்டுகளில் நகரரசு என்ற அமைப்பும் அதை அடிப்படையாகக்கொண்டு தோன்றியிருந்த சில கருத்துகளும், வழக்கங்களும் வெறுப்பு விருப்புகளும் மறைந்தன. மாவீரர் அலெக்சாண்டரின் வெற்றிகளின் விளைவாகவும், நகரரசு முறை மறைந்து, இராணுவப் பேரரசு என்ற சமுதாய அமைப்புத் தோன்றிற்று. கி.மு. நான்காம் நூற்றாண்டில் ஆதென்சில் வாழ்ந்த எபிக்யூரசு என்ற சிந்தனையாளர் நீதி பற்றி ஆராய்ந்தார். இவருடன் திருவள்ளுவரை ஒப்பிடும் பா. சூரியநாராயணன்,

> "எப்பிக்யூரசு நீதிபற்றிக் கூறிய கருத்து தனிமனிதனின் இன்ப உணர்வு என்ற கருத்தை ஆதாரமாக உடையது. அவருடைய கருத்தில் உள்ள சிறப்பு, அரசாங்கத்தின் நோக்கம் மக்களுக்கு நலன்பயக்கும் செயல்களைச் செய்வது என்பதை வலியுறுத்துவதே ஆகும். இது வள்ளுவருடைய 'வானோக்கி வாழும் உலகெல்லாம்' குறள். 542) என்னும் கருத்துக்கு உடன்பாடே. எனினும் வள்ளுவர் அரசுக்கு அப்பாற்பட்ட நிலையில் தனி மனிதரை வைத்து ஒவ்வொருவருடைய அறிவு உணர்வுக்கும், புலன் உணர்வுக்கும் ஏற்ற கோட்பாட்டை வகுக்கவில்லை. இவ்வகையில் அவர் எப்பிக்யூரசு கூறும் கருத்தினின்றும் வேறுபடுகிறார்" (110, ப.121)

என்கிறார். வள்ளுவர் அரசுக்கும் – எப்பிக்யூரசு கருத்துக்கும் உள்ள ஒற்றுமை, வேற்றுமைகளை மேற்கண்ட ஆய்வில் காணலாம்.

## 4.16 திருவள்ளுவரும் சீன அரசியலும்

திருக்குறளில் கூறும் அரசியல் கருத்துகளைச் சீன அறிஞர்கள் குறிப்பிடும் அரசியல் கருத்துகளுடன் ஒப்பிட்டும் ஆய்வுகள் வந்துள்ளன.

1971-இல் க.த. திருநாவுக்கரசு "திருக்குறள் நீதி இலக்கியம்" என்னும் நூலில் கன்பியூசியஸ் கூறிய அரசியல் அறவுரைகளை திருவள்ளுவரின் அரசியல் கருத்துகளுடன் ஒப்புமைப்படுத்துகிறார். (132, ப.278)

அமைச்சனைப் பற்றி கன்பியூசியஸ்,

> "அறநெறி பிறழாது ஆட்சி புரிய அரசனுக்கு உதவி செய்பவனே சிறந்த அமைச்சனாவான்; அவ்வாறு உதவி புரிய முடியாமல் போனால் பதவியிலிருந்து விலகிவிடுகின்றவனே மிகச்சிறந்த அமைச்சனாவான்" – (முது. 11:23)

என்பதை,

> "அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான்எஞ் ஞான்றுந்
> திறனறிந்தான் தேர்ச்சித் துணை" (குறள்.635)

என்னும் குறளோடு ஒப்பிடுகிறார்.

4.00 முடிவுரை

1. திருக்குறளில் அரசியல் தொடர்பான ஒப்பீட்டாய்வுகள் 1950-களுக்குப் பிறகே பெருமளவு [illegible] வெளிவருகின்றன.

2. 1974-இல் அ.மு. பரமசிவானந்தம் மன்னனின் பண்புகள் பற்றியும், மக்கள் கல்வி பற்றியும், மன்னன், பெரியார் துணைக்கொள்வதைப் பற்றியும் செங்கோன்மையையும் படைவீரர்கள் பற்றியும், மன்னனின் நட்பு பற்றியும் விரிவாக சங்க இலக்கியத்துடன் ஒப்பிட்டு ஒத்த கருத்துகளைமட்டுமே கூறியுள்ளார்.

3. மன்னனுக்கு இறைமையூட்டப்பட்டுவந்தச் செய்தியை 1909-இல் அப்துல் காதிரு கூறினாலும், 1974-களில் தி. முருகரத்னம், இரா. சாரங்கபாணி, கோ.சுந்தர மூர்த்தியும், 1980-களில் எஸ். இராமகிருட்டினன் போன்றோர் செங்கோன்மையை முதன்மைப்படுத்தியே மன்னனுக்கு இறைமையூட்டப்பட்டது என்ற கருத்து வளர்ச்சி நிலையில் ஆய்வை மேற்கொண்டுள்ளனர். நா. செல்வராசு மட்டும் சமூக நோக்கில் ஆய்வு செய்துள்ளார்.

4. 1974-இல் இரா. சாரங்கபாணி வரிவாங்கும் முறை பற்றியும், செங்கோன்மை, கொடுங்கோன்மை பற்றியும், படைவீரர்களின் வீரத்தைப் பற்றியும், யானைப்படை, குதிரைப்படை பற்றியும், படைகளின் ஒப்பனை பற்றியும், குடிக்கும் அரசனுக்குமுள்ள தொடர்பை ஒத்த கருத்துகளுடன் உள்ளதைக் குறளும் பிற சங்க நூல்களும் நீதி இலக்கியங்களும் கூறுகின்றன என்று விரிவாக ஆய்வு மேற்கொண்டுள்ளார். மேலும், திருக்குறளில் கூறப்படாத புதிய அமைச்சு பற்றியும் ஒப்பிட்டுள்ளார்.

5. வடநூல்களுடன் திருக்குறளை ஒப்பிட்டு 1950-க்குப் பிறகே ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. 1974-இல் டாக்டர் சோ. சுப்பிரமணியன் வடநூல் அரசின் பாதுகாப்புத் திட்டக்குழுக் கொள்கை பற்றியும் தமிழில் அரசியல் நூல் வரலாறு தேடுவது பற்றி 1977-இல் பி.சி. இராமானுசாச்சாரியும் ஆய்வுகள் மேற்கொண்டுள்ளனர்.

6. திருக்குறளை தேசிய இனவழிஅரசு நூலாகக் காணும் முயற்சியில் தி. முருகரத்னம் 1982-இல் ஆய்ந்துள்ளார்.



7. திருக்குறள் கூறும் அரசு வடநூல் கூறும் அரசின் கொள்கைக்கு முரண்பாடுடையது என்று 1949-இல் இறையனாரும், 1968-இல் என்.முருகேச முதலியாரும் 1974-இல் கோ. சுந்தரமூர்த்தியும் வேற்றுமைக் கருத்துகளை மட்டுமே ஒப்பிடுகின்றனர்.

8. திருக்குறள் வடநூல் மொழிபெயர்ப்பு என்று 1968-இல் ப. அருணாசலமும், குறள் வடமொழி பெயர்ப்பு கிடையாது என்று 1971-இல் கு. இராசவேலு அவர்களும் ஆய்வு மேற்கொண்டுள்ளனர்.

9. கிரேக்க அரசியலுடன் திருக்குறளை ஒப்பிட்டு 1974-இல் பா. சூரியநாராயணன் சாக்ரடீசு, பிளேட்டோ, அரிசுடாட்டில், எப்பிக்யூரசு போன்றோர்களின் கருத்துகளுள் ஒற்றுமையும் வேற்றுமையும் காணப்படுவதை இனங்காட்டுகிறார்.

10. சீன அரசியலறிஞரான கன்பியூசியசு கருத்துகளுடன் திருக்குறளை ஒப்பிட்டு 1977-இல் க.த. திருநாவுக்கரசு ஒத்த கருத்துகளை மட்டுமே குறிப்பிடுகிறார்.

***

## இயல் ஐந்து

# திருக்குறள் ஒப்பீட்டில் பண்பாட்டு ஆய்வுகள்

## 5.0 பண்பாடு

ஒரு சமுதாயத்தின் மக்கள், வாழ்க்கையை நடத்தும் முறையே பண்பாடாகும். இதைத்தான் பண்பாட்டின் இலக்கணமாக மானிடவியல் கூறுகிறது. உயிர் மலர்ச்சியில் குடும்பத்தின் வளர்ச்சியிலிருந்தே அன்பு என்ற ஒரு பண்பும், சமுதாயத்தின் வளர்ச்சியிலிருந்தே நேர்மை என்ற ஒரு பண்பும், இன வளர்ச்சியிலிருந்தே அறிவு என்ற ஒரு பண்பும் வளர்ந்துள்ளன. இம்மூன்றன் கூட்டே அறம். இதை நன்கு உணர்ந்ததனாலேயே திருவள்ளுவர் அறத்துப்பாலைக் குடும்பத்திலிருந்து தொடங்கி, சமுதாயம், இனம் நோக்கிப் படிப்படியாக வளர்த்துச் செல்கிறார். மேற்கண்ட சமுதாயப் பண்பாட்டு நோக்கில் திருக்குறளைப் பிற இலக்கியங்களோடு ஒப்பிட்டவற்றை இவ்வியலில் மதிப்பிடுகிறது.

## 5.1 அறநெறி

அறநெறி என்பது இருவகைப்படும். ஒன்று பொது அறநெறி, மற்றது தனி அறநெறி. பொது அறநெறி என்பது மனித ஒழுகலாற்றை நெறிப்படுத்த எழுந்த வாழ்க்கைச் சட்டம் எனலாம். தனி அறநெறி என்பது சமுதாயத்தின் ஒவ்வொரு இனத்தவரும் தத்தம் இனத்திற்கென்று நெறிப்படுத்தப்பட்ட ஒழுகலாற்றையொட்டி ஒழுகும் நெறி எனலாம். மனித ஒழுகலாற்றை நெறிப்படுத்துவதன் வழிப்பொது அறநெறி, சமுதாய ஒழுகலாற்றுக்கு வழி செய்கிறது.

### 5.1.1 தனி மனித அறநெறி

ஒவ்வொரு மனிதனும் தன் மனத்தில் சில கொள்கைகளை உடையவனாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் சமூகத்தில்

மதிப்புடைய ஆன்றோராக - வழிகாட்டியாக உயரமுடியும். இது தொடர்பான கருத்துகளை முதன்மைப்படுத்தித் திருக்குறளில் ஒப்பீட்டாய்வுகள் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்து வந்துள்ளன.

5.1.1.1 வாய்மை

வாய்மை எனப்படுவது பொய் சொல்லாமையாகும். பெரும்பாலும் காமமும், பொருளும் பற்றியே பொய்மை நிகழ்வதால், அதை விடுத்து வாய்மையின் வழி மக்கள் ஒழுக வேண்டும் என்று திருவள்ளுவர் தனி அதிகாரமே 'வாய்மை' பற்றி எழுதியுள்ளார். மேலும், வாய்மையை ஒரு அறமாகவே குறிப்பிடுகிறார். தமிழகத்தில் பொய்யாமை பற்றிய கருத்துச் சிந்தனைப் பழங்காலத்திலிருந்தே காணப்படுகின்றது.

1905-இல் இரா. இராகவையங்கார் "பொய்யாமை" என்னும் கட்டுரையில்,

> "பொய்யாமை என்னும் பேரறத்தின் இயல்பும், அப்பேரறம் நமக்கே தொன்றுதொட்டுச் சிறந்ததாலும், அதனை நம்மினும் சிறப்பித்துப் போற்றுகின்றவர் வேறு இல்லையாதலாலும், அவ்வறம் நமக்குப் புதிதாக ஒருவராற் பேசக்கிடந்ததில்லை ஆதலும் உணர்ந்து கொள்க"
>
> (206, ப.142)

என்கிறார். இதனை விளக்க,

"கள்ளும் பொய்யுங் காமமும் கொலையுங்" (மணி. 24:77)

என்னும் பாடலையும்,

"பொய்நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும்"
(திருவிரு. 1:1)

என்னும் பாடலையும்,

"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று" (குறள். 297)

என்னும் திருக்குறளோடு ஒப்பிடுகிறார். இவர் பொய்மையாகிய கள்ளும், காமமும், பொல்லா ஒழுக்கும் தவிர்த்துப் பொய்யாமை நெறியில் நிற்க திருக்குறளும் பிற இலக்கியங்களும் குறிப்பிடுவதைக் காட்டியுள்ளார். திருவள்ளுவரும் ஆழ்வார்களும், சீத்தலைச்சாத்தனாரும் துறவு நிலையிலுள்ளோருக்கு, வாய்மையைப் பற்றிக்கூறினார்கள். ஆனால், இரா. இராகவையங்கார் தனி மனித அற நோக்கில் கூறுவது, ஏற்புடையதாக உள்ளது.

5.1.1.2 குற்றங்கடிதல்

குற்றங்கள் யாவை என அறிந்து அதனை வராமல் காத்தலே குற்றங்கடிதல் எனப்படும். இதுபற்றித் திருக்குறளும், பிற இலக்கியங்களும் குறிப்பிட்டுள்ளன.

1978-இல் ப.ச. ஏசுதாசன் "மலரினும் மெல்லிது" என்னும் நூலில்,

"தன்னைப் போலத் தன் அயலானைச் சிந்திக்க மறுக்கிறான். இது தவறான செயலாகும். இதை மனிதமனம் உணர்ந்து திருந்தினாலன்றி உய்யும் வகையில்லை" (44, ப.36).

என்கிறார். மேலும்,

"தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு" (குறள்.436)

என்னும் குறளும்,

"தம்குற்றம் நீக்கலர் ஆகிப்பிறர்குற்றம்
எங்கேனும் தீர்த்தற்கு இடைப்புகுதல்" (பழ.124)

என்னும் பழமொழியும் குற்றங்கடிதலை வலியுறுத்துகின்றன என்கிறார். இவர், ஒவ்வொரு மனிதனும் தன் குற்றத்தை நினைத்துப் பார்க்கவேண்டும் எனத் திருக்குறளும், பழமொழியும் குறிப்பிட்டுக் கூறுவதைச் சுட்டுகிறார். திருவள்ளுவர் அரசனுக்கு அறிவுரை கூறிய குற்றங்கடிதலைத்தனி மனிதனுக்குக் கூறுவதாகப் ப.ச. ஏசுதாசன் ஆய்வு மேற்கொண்டுள்ளதை மேற்கண்ட சான்றின் வழி அறியமுடிகிறது.

### 5.1.1.3 காலமறிதல்

காலம் அறிதல் எனப்படுவது வினை செய்வதற்கு ஆகும் காலத்தை அறிதலாகும். இதற்கு என்று திருவள்ளுவர் "காலம் அறிதல்" என்று ஒரு தனி அதிகாரமே எழுதியுள்ளார்.

1927-இல் வ. சுப்பையா பிள்ளை "காலம் அறிதல்" என்னும் கட்டுரையில்,

> "நம் பண்டைய பெரும்புலவர்கள் உலகியற்கையின்கண்
> ஆழ்ந்து சென்று ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள்.
> ஒன்று முதல் ஐயறிவுடைய உயிர்ப்பொருள்களிடம்
> அமைந்துகிடக்கும் அரிய செயல்களை எல்லாம்
> நன்கறிந்து ஆறறிவுடைய மக்களின் வாழ்க்கையினைச்
> செம்மைப்படுத்துவான் கருதி எழுதியிருக்கும் பாக்களின்
> நயம் வியக்கற்பாலது" (236,ப.573)

என்கிறார். இதற்கு,

> "கொக்கொக்க கூம்பும் பருவத்து" (குறள்.490)
> "காலங்கருதி இருப்பர்" (குறள்.485)
> "ஞாலங் கருதினும் கைகூடும்" (குறள்.484)

என்னும் குறட்பாக்களும்,

> "அடக்க முடையார் அறிவிலர் என்றெண்ணிக்
> கடக்கக் கருதவும் வேண்டா – மடத்தலையில்

ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடியிருக்குமாம் கொக்கு" (மூதுரை.16)

என்னும் மூதுரையும் சான்றுகளாகும் என்கிறார். காலத்தை அறிந்து வினையாற்ற வேண்டும் என்பதனை ஐயறிவுயிர்களைக் கொண்டு திருக்குறளும், மூதுரையும் அறிவுறுத்துவதை மேற்கண்ட சான்றுகளின் வழியே அறிய முடிகிறது. இவரின் ஆய்வானது அறிவுரை கூறும் போக்கில் காணப்படுகிறது.

## 5.1.2 இல்லறம்

எந்தவிதப் பண்பாட்டு முறையைக் கவனித்தாலும் குடும்பமே சமுதாய வாழ்க்கையின் அடிப்படையாக இருக்கிறது. இல்லறத்தினைப் பற்றித் திருவள்ளுவரும் தம் திருக்குறளில் விரிவாகக் கூறியுள்ளார். இல்லறம் தொடர்பான திருக்குறள் ஒப்பீட்டாய்வுகள் 1905-க்குப் பிறகே வந்துள்ளன.

1958-இல் கருமுத்து இராஜாதியாகராசன் "வள்ளுவர் வகுத்த மனையறம்" என்னும் கட்டுரையில்,

"மனையறம் மாண்புடையதாக இருக்கவேண்டுமானால்
கணவன்-மனைவி இருவரிடமும் ஒன்றிய காதலுறவு
அடிப்படையாக விளங்க வேண்டும்" (242, ப.109)

என்கிறார். மேலும்,

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி"

என்று தேவாரமும்,

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கைப்
பண்பும் பயனும் அது" (குறள். 45)

என்று திருக்குறளும் கூறுவதை ஒப்பிடுகிறார். இவர், கணவன்-மனைவியிடம் காதலாகி, காதலின் வழி அன்பும் அறனும் உடையதாக இருக்கும் பொழுது இல்வாழ்க்கைச் சிறந்ததாக அமையும் என்கிறார். பக்தியில் திளைத்துக் கண்ணீர் மல்கிய காதலே வீடுபேறு அடைய வழிகோலுவதைப் போன்று இல்லறத்தில் கணவன் மனைவியிடம் ஏற்படும் ஆராக் காதலே வாழ்வை வளம்படுத்தும் என்ற நோக்கில் கருமுத்து இராதா தியாகராசன் ஆராய்கிறார்.

5.1.2.1 விருந்தோம்பல்

விருந்தோம்பலாவது, தாம் உண்ணும் காலத்தில் விருந்தினர் அல்லது புதிதாக யாராவது வந்தால் அவர்களுடன் பகுத்து உண்ண வேண்டும் என்பதாகும். இதனைப் பற்றி திருக்குறளில் தனி அதிகாரமே உள்ளது.

இல்வாழ்க்கையில் விருந்தோம்பல் இன்றியமையாத ஓர் அறமாகும். 1970-இல் தி. சுந்தரம்பாள் "குறள்வழிக் குடும்பம்" என்னும் கட்டுரையில், விருந்தோம்பலின் இன்றியமையாமையைத் திருக்குறளும், சிலப்பதிகாரமும் குறிப்பிடுவதை ஒப்பிடுகிறார் (103, ப.133). இவர்,

"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு" (குறள். 81)

என்று திருக்குறள் இல்வாழ்வு விருந்தோம்பலையே குறிக்கின்றது என்றும்,

சிலப்பதிகாரத்தில்,

"விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை" (சிலம்பு.16:73)

என்று கண்ணகி விருந்தோம்பல் செய்ய இயலாமையை எண்ணி வருந்துவதையும் ஒப்பிடுகிறார்.

5.1.2.2 இல்லறமும் தவமும்

அறம் செய்வதற்குரிய இருவகைநிலைகள் இல்லறம், துறவறம். இல்வாழ்க்கையில் வாழவேண்டிய முறையில் அறவாழ்வை நடத்துவார்களே-யானால் துறவறம் தேவையில்லை. இல்லறத்தின் முதிர்ச்சித் துறவறமாகும்.

1958-இல் கு. மதுரை முதலியார் "திருவள்ளுவர் இல்லறம்" என்னும் நூலில், 'துறவறத்தினும் இல்லறமே சிறந்தது' என்கிறார். (162, ப.30)

"ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து" (குறள்.48)

என்னும் குறளும்,

"தாம்வாட தவம்செய்ய வேண்டா
தமதா இமைபோற் உலகாளநிற்பீர்" (திருமங்கை,3:2:1)

என்னும் திருமங்கை ஆழ்வார் பாடலும் இல்லறத்தின் சிறப்பைக் கூறுகின்றன. என்று மதுரை முதலியார் ஒப்பிடுகிறார். அறத்தின் வழி வாழும்போது

துறவறத்தினும் சிறப்படையமுடியும் என்பதை மேற்கண்ட ஆய்வுமூலம் அறியமுடிகிறது. இல்வாழ்க்கைக்கும் பக்தி நெறிக்கும் அறம் ஒன்றே போதும். அதனால் தவத்திலும் சிறந்த பயனை அடையலாம் என்னும் நோக்கில் மேற்கண்ட ஆய்வு செல்கிறது.

5.1.2.3 தந்தை

இல்வாழ்வான், மக்கட் பேற்றினால் 'தந்தை' என்னும் சிறப்புநிலை அடைகின்றான். அவனுக்குச் சில கடமைகள் உண்டு. இதனைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் கூறுவதை ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1963-இல் செந்துறைமுத்து "வள்ளுவர் போல் வாழ்க" என்னும் நூலில்,

> "கல்விப் பருவம் வந்ததும் அச்செல்வனைக் கல்விச்சாலைக்கு அனுப்பி முதன்மையானவனாக விளங்கும்வண்ணம் செய்தல், அச்செல்வனுடைய தந்தையின் தகைசால் கடமையாகும்"
> (112, ப.43)

என்கிறார். இதனை,

> "சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே" (புறம்.132:2)

என்று புறநானூறும்,

"தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்" (குறள்.67)

என்ற குறளும் குறிப்பிடுகின்றன என்கிறார். தந்தையின் கடமைத் தன் மகனை கல்வி அறிவுடையவனாக்குவது என்பதைப் புறநானூறும், திருக்குறளும் வலியுறுத்துவதைச் செந்துறைமுத்து சுட்டுகிறார். மேலும், சான்றோன் ஆக்குதல் என்ற புறநானூற்றினும் அவையத்து முந்தியிருக்கச் செய்தல் என்னும் திருக்குறள், கருத்து வளர்ச்சிப் பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

5.1.2.4 தாய்

இல்வாழ்க்கைத் துணையாகிய 'இல்லாள்', பிள்ளைப் பேறு அடையும் பொழுது 'தாய்' என்னும் சிறப்புநிலையை அடைகிறாள்.

1926-இல் எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை "தாய்" என்னும் கட்டுரையில், "தாயானவள் தன் மக்கள் அறிவுடையவராக இருப்பதையே விரும்புகிறாள்" என்கிறார் (247, ப.150). இவர்,

"சான்றோன் எனக்கேட்ட தாய்" (குறள்.69)
"ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும்" (குறள்.656)
"ஈன்றாள் முகத்தேயும் இன்னாதல்" (குறள்.923)

என்ற குறள்களும்,

"சிறப்பின் பாலால் தாயுமனந்திரியும்" (புறம்.183:4)

என்ற பாடல் அடியும் கூறுவதைச் சான்றுகளாகக் குறிப்பிடுகிறார். பத்துமாதம் சுமந்து பெற்ற தாயே ஆனாலும், கற்ற அறிவிற்சிறந்த

மகனையே விரும்புவாள் என்னும் நோக்கில் எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளைக் குறிப்பிடுகிறார். மேலும் புறநானூற்றுப் பாடலில் 'ஈன்றாள் பசிகாண்பானாயினும் செய்யற்க' என்பது வரையறையிட்டுக் கண்டிப்பான முறையுடன் உள்ள தாயையும் - மகனையும் குறிப்பிடுவதைக் காணலாம்.

5.1.2.5 மக்கட்பேறு

அன்பும் அறனும் உடைய இல்வாழ்க்கைக்கு நல்ல கலனாக அமைவது நன்மக்கட்பேறு.

1916-இல் முருகைய வாத்தியார் "மக்கட்பேறு" என்னும் கட்டுரையில்,

> "மக்கட்பேற்றில் நன்மக்களைப் பெறுதல், பெற்றாரடையும் இன்பம், பெறாதாரடையும் துன்பம், தந்தை மகற்காற்றும் நன்றி, மகன் ஆற்றும் கடமை என ஐவகைப் பகுதிகளும் உள்ளன."(254,ப.140)

என்கிறார். மேலும்,

> "ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
> மக்கட் பேற்றிற் பெரும்பேறில்லை" (முது.மொழிக்.51)

என்னும் பாடலும்,

"பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற" (குறள். 61)

என்னும் குறளும் மக்கட் பேற்றின் சிறப்பை உணர்த்துகின்றன. தொடர்ந்து மக்கட்பேறுடையோர்க்கு உண்டாகும் இன்பத்தையும் மக்கட்பேறில்லாதவர்க்கும் ஏற்படும் துன்பத்தையும் செந்துறைமுத்து (அறிவறிந்த மக்கட் பேறு, 1954) திருக்குறளும், புறநானூறும் கூறுவதை ஒப்பிட்டுள்ளார். மேலும் முதுமொழிக்காஞ்சி 'மக்கட்பேறு' என்று பொதுநிலையில் கூற, திருவள்ளுவரோ "அறிவுடைய" மக்கட் பேற்றையே சிறப்பு என்கிறார். எனவே, மக்கட்பேறு ஒன்றே மக்களின் குறையைப் போக்கி விடாது என்ற திருக்குறளின் கருத்து சிறந்து விளங்குதலை மேற்கண்ட ஒப்பீட்டின் மூலம் இனங்காணலாம்.

5.1.2.6 இல்லறத்தின் அறங்கள்

இல்லறத்திற்கென்று உள்ள சில அறங்களை வள்ளுவர் அறத்துப்பாலில் குறிப்பிட்டுள்ளார். இவற்றுடன் பிற இலக்கியங்களை ஒப்பிட்டு 1905-க்குப் பிறகே ஆய்வுகள் வந்துள்ளன.

5.1.2.6.1 ஈகை

ஈகை என்பது வறியவர்களுக்குக் கொடுத்தலைக் குறிக்கும். இதனைத் திருக்குறள் வலியுறுத்துகிறது.

1908-இல் அப்துல் காதிரு ராவுத்தர் "ஈகை" என்னும் கட்டுரையில்,

"இரக்கத்தினால் கொடுத்தல் ஒழிந்த பிறவெல்லாம் ஓர்வித பரிவர்த்தனையே அன்றி ஈகையாகா" (199, ப.347)

என்கிறார். இவர், ஈகைக்கும் - உதவிக்கும் உள்ள வேற்றுமையை,

"வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீரது உடைத்து" (குறள்.231)

என்னும் குறளில் சுருக்கமாகக் குறிப்பிடுகிறார். இதனை,

"பிறருஞ் சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே" (புறம்.134)

என்னும் புறநானூற்றோடும்,

"ஆற்றுநர்க் களிப்போர் அறவிலை பகர்வோர்" (மணி.15)

என்னும் மணிமேகலையோடும் ஒப்பிடுகிறார். இவருக்குப் பின் க. முனிசாமி (ஈத்துவக்கும் இன்பம், 1969) அவர்களும் ஈகையைப் பற்றிப் பிற இலக்கியங்களும் திருக்குறளும் கூறுவதை ஒப்பிடுகிறார்.

5.1.2.6.2 அருளுடைமை

அருளுடைமை என்பது ஏதேனும் ஓர் உயிர் துன்பப்படின் அதற்குத் தன் உயிர்க்கு ஏற்படும் துன்பத்தினால் வருந்துவதுபோல வருந்தும் ஈரத்தன்மை ஆகும். இதனைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் கூறுகின்றன.

1916-இல் வ.மு. இரத்னேசுவரையர் "அருள்மாட்சி" என்னும் கட்டுரையில்,

"அருளினது மகிமை கூறல், பூமண்டலத்தின் கண்ணே பகுத்தறிவுடைய மானுடர்களாய்ப் பிறந்த மன்னுயிர்கட்கு ஒழுக்கம் போலச் சிறந்தது பிறிதொன்று கிடையாது. அவ்வொழுக்கத்துள் சிறந்த விழுப்பம் தருவது அருளே ஆகும். அவ்வருள் மாட்சியைத் தெளிந்து கடைப்பிடித்துப் பண்டைக்காலத்துக் காவலரும், நாவலரும் ஒழுகி மேம்பட்ட நிலையை அடைந்தார்கள்" (205, ப.167)

என்கிறார்.

"தன்னுயிர் தான்பறிந் தோம்பும் ஆறுபோல்
மன்னுயிர்வைகலும் ஓம்பிவாழுமே" (சீவக.3107:1-2)

என்பதை,

"இருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்" (குறள்.243)

என்னும் குறளோடு ஒப்பிட்டு அருளுடைமையைத் திருக்குறளும், பிற இலக்கியமும் வலியுறுத்தியுள்ளதை இவர் குறிப்பிடுகிறார். சீவகசிந்தாமணியில் தன்னுயிரைப் போல் பிற உயிர்களிடம் அருள் தன்மை வேண்டும் என்பதைக் காட்டிலும், அருள் தன்மை உடையோர்க்கு நரகம் கிடையாது என்ற குறளின் கருத்து மக்களுக்கு எச்சரிக்கை செய்வது போல் காணப்படுகிறது.

5.1.2.6.3 செய்நன்றி அறிதல்

மனிதர்களிடையே ஒருவர் செய்த நன்றியை மறத்தல் என்பது மிகக் கொடுமையானதாகும். இதனால் பெரும்பழி உண்டாகும். இதனைத் திருக்குறளும், பிற இலக்கியங்களும் அறிவுறுத்தியுள்ளன.

1951-இல் சரவண ஆறுமுக முதலியார் "திருக்குறளும் பொது நோக்கமும்" என்னும் நூலில்,

"செய்த நன்றி அறிதலை உணர்ந்தோர் தாம் பெற்ற உதவி தினைத்துணையே ஆயினும் பனைத்துணையாக மதித்து அதன் பெருமையை உணர்வதே அழகாகும்"(81,ப.55)

என்கிறார்.

"செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென
அறம் பாடிற்றே ஆயிழை கணவ" (புறம்.34:6-7)

என்னும் புறநானூற்றுக் கருத்தையும்,

"உதவிகொன் றார்க்கென் றேனும் ஒழிக்கலாம் உபாயமுண்டோ"
(கம்ப.கிட்.62)

என்னும் கம்பராமாயணக் கருத்தையும்,

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (குறள்.110)

என்னும் திருக்குறளுடன் ஒப்பிடுகிறார். ஒருவர் செய்த உதவியை

மறந்தவர்க்கு அதிலிருந்து தப்ப வழியில்லை என்பதைக் கம்பராமாயணம், புறநானூறு, திருக்குறள் முதலியன வலியுறுத்துவதைச் சரவண ஆறுமுக முதலியார் ஒப்பிட்டுக் கூறுவதை மேற்கண்ட சான்றுகளின் வழி அறியமுடிகிறது.

5.1.2.6.4 சுற்றந்தழுவுதல்

தம் சுற்றத்தினரை நீங்கவிடாமல் அனைத்துக் காத்தல் சுற்றந் தழுவுதல் எனப்படும். தம் உழைப்பால் பெற்ற பொருளைத் தம் சுற்றத்தினருடன் பங்கிட்டு உண்ணவேண்டும். இதனைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் பதிவு செய்துள்ளன.

1927-இல் இளவழகனார் "சுற்றந்தழால்" என்னும் கட்டுரையில்,

"காக்கையைப் பார்த்தேனும் நாம் நம் இனத்தைச்
சேர்த்து ஒற்றுமைக் கொண்டு அறமுதலா
மூன்றினையும் அடைய வேண்டும்" (212, ப.639)

என்கிறார். இதற்கு

"காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள" (குறள். 527)

என்னும் குறளை,

"காகமுறவு கலந்துண்ணக் கண்டீர் .....இன்புற்றிட

..............................

தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரும்"

(தாயு. 3:1-4)

என்னும் தாயுமானவர் பாடலுடன் ஒப்பிடுகிறார். தாம் பெற்ற பொருளைப் பிறருடன் பகிர்ந்து உண்ணவேண்டும் என்பதைக் காக்கையுடன் ஒப்பிட்டு அறிவுரை கூறும் போக்கில் குறளும், தாயுமானவர் பாடலும் கூறுவதனை இளவழகனார் குறிப்பிடுகிறார். பகுத்துண்ணலைச் சமத்துவப் பொருளாதார நோக்கில் 1950-க்குப் பிறகு ஆய்வு மேற்கொண்டனர்.

1956-இல் சாமிசிதம்பரம் "வள்ளுவர் வாழ்ந்த தமிழகம்" என்னும் நூலில்,

"பகுத்துண்ணல் என்பது தான் உண்பதை மட்டும் பகிர்ந்து கொள்ளல் என்ற பொருளில் பயிலப்படவில்லை. மாறாகத் தம் உடைமையைப் பகுத்துத் துய்த்தல் என்ற பொருளிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளமை புலனாகும். எனவே, இறுதியான பொதுமைச் சமுதாயக் குறிக்கோளான 'எல்லார்க்கும் எல்லாம்' என்பதை அடைவதற்குரிய கூட்டுடைமைப் பொருளியல் கொள்கையே, 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' என்ற குறளியச் சூத்திரம் மற்ற மூன்று குறட்பாக்களில் கூறப்படும் 'பகுத்துண்ணல்' சமத்துவச் சமுதாயத்திற்கு வழிகோலுகிற தனி மனித நெறியாகும்"

(92, பக்.240-241)

என்கிறார். மேலும், பகுத்துண்ணலைப் பற்றி 42, 227, 110 குறள்கள் கூறுகின்றன என்கிறார்.

பகுத்துண்டு, பல்லுயிர் ஓம்புதல் என்ற இரட்டைக் கொள்கையை 322-ஆம் குறளும்,

"இனியவை பெறினே தனித்தனி நுகர்கேம்
பகுத்தூண் தொகுத்த ஆண்மை" (பதிற்.38:13-14)

என்னும் பாடலும்,

"தமது பகுத்துண்ணுந் தன்னிழல் வாழ்நர்" (புறம்.46:3)

என்னும் பாடலும் கூறுகின்றன என்று சாமிசிதம்பரம் சான்று காட்டுகிறார்.

5.1.2 <u>சமூக அறநெறி</u>

சமுதாயத்தின் வளர்ச்சியிலிருந்தே நேர்மை என்ற ஒரு பண்பும், இன வளர்ச்சியிலிருந்தே அறிவு என்ற ஒரு பண்பும் வளர்ந்துள்ளன. மனித ஒழுகலாற்றை நெறிப்படுத்துவதன் வழிப் பொது அறநெறி, சமுதாய ஒழுகலாறுக்கு வழி செய்கிறது.

சமூகத்தில் ஒரு கட்டுப்பாடு வேண்டும். அந்தக் கட்டுப்பாடு என்பது வரையறையுடையதாக இருக்க வேண்டும். அதை மீறுபவர்கள் சமுதாயத்தில் தண்டிக்கப் படவேண்டும் என்பது சமூக நியதி.

1987-இல் க.த. திருநாவுக்கரசு "திருக்குறளில் அறவியல் சார்ந்த ஆய்வுகள்" என்னும் கட்டுரையில்,

"தனி மனிதப் பழக்கம் அதன் நன்மை கருதிப் பலரால்
பின்பற்றப்பட்டது; சமுதாயத்தில் அந்தத் தனிமனிதப்

பழக்கம் மதித்துப் போற்றப்பட்டது. எனவே, அது சமுதாயத்தில் வழக்கமாக மாறியது. அவ்வழக்கங்களோ- விதிமுறை வகையான் மூதறிஞர்களால் அறிவுறுத்தப்பட்டன. இத்தகைய அறநெறியை வழக்காற்று ஒழுக்கநெறி என்பர். இத்தகைய வழக்காற்று ஒழுக்கநெறி கடைப்பிடிக்கப்பட்ட காலம் அறவியல் உணர்வின் வளர்ச்சியில் இரண்டாவது படிநிலையாகக் கருதப்படுகிறது. இதற்கு அடுத்தநிலை தூய உள்ளமே. மனச்சான்றை மதித்துப்போற்றும் மனமே அறத்தின் நிலைக்களமாகப் போற்றப்படும் காலத்தைச் சார்ந்ததாகும்" (134, பக்.41-42)

என்கிறார். அறநெறியை வழக்காற்று ஒழுக்க நெறியாகக் கடைப்பிடித்ததற்கு,

"உயிரினும் சிறந்த ஒண்பொருள் தருமார்" (அகம்.243)
"உள்ளது சிதைப்போர் உளர் எனப்படார்" (குறுந்.283)
"மன்னா உலகத்து மன்னுவது புரைமே" (கலி.54)
"செல்வத்துப் பயனே ஈதல்" (புறம்.189)

என்று சங்கப் பாடல்கள் கூறுவதையும்,

"மனத்துக்கண் மாசிலன் ஆதல்" (குறள்.34)

என்று திருக்குறள் கூறுவதையும் க.த. திருநாவுக்கரசு ஒப்பிடுகிறார்.

### 5.1.2.1 நடுநிலைமை

சமுதாயத்தில் தொழில்கள் பல வளரவேண்டும். அதன் மூலம் பொருள்கள் பெருக வேண்டும். பெருகும் பொருள்கள் மக்களிடையே பண்டமாற்றுமுறைவழிப் பகிர்ந்தளிக்கப்படவேண்டும். பகிர்ந்தளிக்கும் பொருள்கள் நடுவுநிலையில் வழங்கப்படவேண்டும் என்பதைக் குறளும் பிற இலக்கியங்களும் படம்பிடித்துக் காட்டியுள்ளன என்று ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1956-இல் சாமி சிதம்பரம் "வள்ளுவர் வாழ்ந்த தமிழகம்" என்னும் நூலில், 'சுரண்டலற்ற வாணிகத்தை மேற்கொள்ள வேண்டும் என்பதைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் வலியுறுத்துகின்றன' என்கிறார். (92, ப.40) இவர்,

> "வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
> பிறவும் தமபோற் செயின்" (குறள். 120)

என்னும் குறளும்,

> "தமவும் பிறவும் ஒப்பநாடி
> ................
> கொள்வதூஉம் மிகைகொளாது
> கொடுப்பதூஉம் குறைபடாது" (பட்டி. 208-211)

என்னும் பாடலும் வாணிகத்தில் நடுவுநிலையாக இருக்க வேண்டும் என்பதை அறிவுறுத்தியுள்ளதைக் காணலாம் என்கிறார். மேலும், பட்டினப்பாலையில் பொருளைக் குறைவாகக் கொடுத்தோ,

மிகுதியாகப் பெறவோ வேண்டாம் என்று கூற, திருவள்ளுவர் பிறருடைய பொருளையும் தம்முடையது போல் செய் என்ற கருத்துச் சிந்தனை நட்பாக அமைந்துள்ளதை மேற்கண்ட ஆய்வில் அறியமுடிகிறது.

5.1.2.2 சமூக மதிப்பு

கல்வி, சான்றாண்மை, நட்பு போன்றவை சமூகத்தில் மதிப்பைத் தேடித்தரும் கருவிகளாகும்.

5.1.2.2.1 கல்வி

சமூகத்திற்குக் கல்வியின் இன்றியமையாமையையும், கல்லாதாரின் அவல நிலையையும் திருவள்ளுவர் இரண்டு அதிகாரங்களில் விளக்குகிறார். இதனால் திருவள்ளுவருக்குக் கல்வியின் மீதிருந்த பற்றுப் புலப்படுகிறது.

1942-இல் கொழும்பு அருள் தியாகராஜா "திருவள்ளுவரின் உயரிய நோக்கங்கள்" என்னும் கட்டுரையில்,

> "திருவள்ளுவர் கல்வியினிடத்தே பெரியதோர் விழைவும் ஆர்வமும் உடையவர் என்றும், கல்வியை வற்புறுத்திய மாதிரி வேறொன்னையும் வற்புறுத்தவில்லை"
>
> (243, ப.527)

என்கிறார். இதற்கு,

"ஒருமைக்கண் தான் கற்ற கல்வி" (குறள். 398)

என்னும் குறட்பா ஒருவனுக்கு எழு பிறப்பிலும் அவன் கற்ற கல்வி பயன்படும் என்பதையும், கல்வி சிற்றுயிர்க்கும் பயன் உடையது என்பதனை,

"கல்வியி னூங்கில்லை சிற்றுயிர்க்கு உற்ற துணை"

(நீதி.வெ 2:2)

என்னும் பாடலில் கூறுவதையும் ஒப்பிடுகிறார்.

5.1.2.2.2 கற்பதன் பயன்

சமூகத்தில் மனிதன் தான் கற்கும் கல்வியினால் உயர்ந்த நிலையை அடைகிறான். பலரும் போற்றுகின்ற அளவிற்கு அவனின் கல்வி அறிவு உயர்வடைகிறது.

1963-இல் ந. செகதீசன் "ஈடேற்றம்" என்னும் கட்டுரையில்,

"திருவள்ளுவர் விலங்கு நிலையிலிருந்து மக்களைக் கல்வியுடையவராக்கி, கல்வியுடையவரை அறிவுடையோராக வளர்த்து, அவ்வறிவுடையோரை ஒழுக்கத்தால் பண்புடையவராக உருவாக்கி வானுறையும் தெய்வ நிலைக்கு உயர்த்தும் பெருந்திறனை என்னவென்று வியப்பது" (237, ப.34)

என்கிறார். அவர், கற்றவர்கள் இறைவனின் பாதங்களைத் தொழுவர்,

இறைக்கொள்கை வழிநடப்பர் என்பதை,

"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்" (குறள். 2)

என்னும் குறளும்,

"கற்றாங்கவன் கழல் பேணினர்
அவரொடு கூடுமின் கலந்தே" (திருவா. 508)

என்னும் பாடலும்,

"கற்றவர் தொழுதேத்தும் சீர்க்கறையூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்றவா" (சுந்தரர். 48:1)

என்னும் சுந்தரமூர்த்திப் பாடலும் குறிப்பிடுகின்றன என்று ஒப்பிடுகிறார். கற்பதன் பயன் 'இறைவனைத் தொழுதல்' என்னும் சிந்தனை திருக்குறள் - திருவாய்மொழி - தேவாரம் போன்றவற்றுள் ஒத்திருப்பதை மேற்கண்ட ஆய்வில் காணமுடிகிறது.

தொடர்ந்து 1983-இல் முனைவர் கு. மோகனராசு "திருவள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப்பொதுமையியலும்" என்னும் நூலில்,

"ஒருவன் பெறும் பல்துறைக் கல்வி - அதன் பயனான அறிவு, அவனை உலக நோக்கினனாக மாற்றியமைக்கின்றது"
(178, ப.248)

என்கிறார். அவர்,

"எவ்வ துறைவது உலகம் உலகத்தோ
டவ்வ துறைவ தறிவு" (குறள். 426)

"உலகம் தழீஇய தொட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்ல தறிவு" (குறள். 425)

என்னும் குறள்களுடன்,

"யாதும் ஊரே யாவரும் கேளிர்" (புறம். 192:1)

என்னும் புறநானூற்றுப் பாடலை ஒப்பிடுகிறார். இவர், கல்வியறிவின் பயனாகப் பல்துறையறிவும், உலக நலன்நோக்கிய சிந்தனையும் வாய்க்கிறது என்கிறார்.

5.1.2.2.3 சான்றாண்மை

சமுதாயத்தில் மக்கள் சான்றாண்மையுடன் இருந்தால் அமைதி நிலவும். நற்குணங்கள் நிறைந்த சான்றோர்களை மக்கள் அனைவரும் போற்றுவர்.

1955-இல் பு. அமிர்தலிங்கனார் "வள்ளுவர் கண்ட உயிரினங்கள்" என்னும் நூலில்,

"மக்கள் தம்மைப் பற்றிக் கவலைப்படாமல் பிறருக்காக
வாழும் தன்மையுள்ள மனவுணர்வு அமையப்பெறவேண்டும்.
அப்பொழுதுதான் விலங்கிடமிருந்து மனிதன் வேறுபடுகிறான்"
(4, ப.70)

என்கிறார். இதற்கு,

"சூல்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்" (குறள். 986)

என்னும் குறளை,

"தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே" (புறம்.182:7-8)

என்னும் பாடலுடன் ஒப்பிட்டுக் கூறுகிறார். திருக்குறள் நடுநிலை நிற்றலையும், புறநானூறு பிறர்க்கென வாழ்வதையும் சான்றாண்மைக்கு ஒப்பிட்டு விலங்கிடமிருந்து மனிதன் மாறுவதை பூ. அமிர்தலிங்கனார் குறிப்பிடுகிறார்.

5.1.2.2.4 நட்பு

மனித மனத்தில் அன்பும், அருளும் இருக்கப்பெறுமானால் "நட்பு"த்தானாகவே உருவாகிவிடும். ஒருவர் பிறர்க்கு உதவி செய்வதாலும் அன்புடையவராக இருத்தலாலும் நட்பு உண்டாகும்.

1926-இல் இ.மு. சுப்பிரமணியம் "நட்பு" என்னும் கட்டுரையில்,

"நட்பு இயற்கை நட்பு செயற்கை நட்பு என இருவகைப்படும். நாம் நமது உறவினரிடத்தும் அவர்கட்கும் நமக்குமுள்ள இரத்தக் கலப்பின் பயனாகக் கொள்ளும் அன்பே இயற்கை நட்பாம்.

உதவி செய்தோமாயின் அதை நினைத்து அவன் நமக்கு அன்புடன் மறுஉதவி செய்யமுடியும். நாமும் அதை நினைத்து அவன் மீது அன்புகொள்ளவும் முடியும். இதுவே செயற்கை நட்பாம்" (232, ப.401)

என்கிறார். இவர்,

"கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை எஞ்ஞான்றும்
குருத்து கரும்பிற் தின்றற்றே" (நாலடி.211)

என்னும் பாடலை,

"முகம்நக நட்பது நட்பன்று; நெஞ்சத்து
அகம்நக நட்பது நட்பு" (குறள். 786)

என்னும் திருக்குறளுடன் ஒப்பிடுகிறார்.

## 5.2 சமூகத்தில் பெண்கள்

சமூகத்தில் பெண்கள் இரண்டாந் தரமாகவே நடத்தப்பட்டுள்ளனர். ஆனால், திருக்குறளில் பெண்களின் நிலைமை ஆண்களுக்கு இணையாக உயர்த்திக் கூறப்பட்டுள்ளது. இதனைப் பிற இலக்கியங்களும் கூறியுள்ளன.

### 5.2.1 பெண் தன்மை

சமுதாயத்தில் பெண்களை நுகர் பொருளாகவே எண்ணிவந்துள்ளனர். மேலும், அவர்களுக்கு மனத்திட்பம் குறைவாக உள்ளதாகச் சமுதாயத்தில்

எண்ணப்பட்டனர். இதனை அடிப்படையாகக் கொண்டு 1930-இல் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் "வள்ளுவரும் மகளிரும்" என்னும் நூலில்,

"பெண்கள் கல்வியறிவு, கேள்வியறிவு உடையவர்களாக விளங்கலாம். இயற்கை அறிவு உள்ளவர்களாகத் திகழலாம். எனினும், அவர்கள் மனம் பெரும் பேதைமைத்தாகலின் பேதுற்று ஒரு வழிப்படாது பல வழியும் சென்று தயங்கும் என்பர்" (168, ப.25)

என்கிறார். இதனை,

"இனம் போன்றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்" (குறள்.822)

என்னும் திருக்குறளும்,

"பெண்ணெனப்படுவ கேண்மோ பீடில பிறப்புநோக்கா
உண்ணிறை யுடையவல்ல வோராயிர மனத்தவாகும்"
(சீவக.1597)

என்னும் பாடலும்,

"பெண்மனம் பேதின் றொருப்பேன் என்னும்
எண்ணில் ஒருவன் (வளையா.49:3)

என்னும் பாடலும் பெண் மனம் மாறுபட்டுக்கொண்டிருக்கும் என்பதைத்

தெளிவாக எடுத்துக்கூறுகின்றன என்று சான்றுகள் தருகிறார். இக்கருத்துகள் மறுக்கப்பட்டு பரத்தையரின் மனம் மட்டும் மாறுபடும்என்பதை தேவநேயப் பாவாணர், முனைவர் கு. மோகனராசு போன்றோர் தம் உரைகளில் குறிப்பிடுகிறார்கள்.

### 5.2.2 கற்பு

கற்பு என்பது சமுதாயத்தில் பெண்களுக்கு மட்டும் விதிக்கப் பட்டுள்ளது. அது ஆண்களுக்குக் கட்டாயப்படுத்தப்படவில்லை. பெண்களின் கற்புக்கு மழையை தொடர்புபடுத்தியுள்ளதைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் கூறியுள்ளன. இது தொடர்பான ஆய்வுகள் 1900-க்குப் பிறகு வந்துள்ளன.

1909-இல் எம்.கே.எம். அப்துல் காதிரு ராவுத்தர் "கற்பு" என்னும் கட்டுரையில்,

> "கன்னிப் பருவத்துத் தாய், தந்தை, மூத்தோர் முதலியோர் பெரியோராயினும் கடிமணம் முடிந்தபிற்றை நாயகனானும், முதுமைப் பருவத்துப் புதல்வரானும் கற்பித்தப்படியே ஒழுகலாம். இதனால் பெண்கள் என்றும் சுதந்திரமற்றவர்கள் என்பர்"
>
> (201, ப.419)

என்கிறார். இவர், பெண்கள் கணவனையே முதன்மையாகக் கொண்டவர்கள் என்பதற்கு,

"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" (குறள். 55)

என்னும் குறளை,

"கொண்டோன் அல்லது தெய்வமும் பேணாப்
பெண்டிர் தங்குடி" (மணி. 8:101-102)

என்னும் பாடலுடனும்,

"காமனை என்றுஞ் சொல்லார்
கணவர்க்கை தொழுதுவாழ்வார்" (சிந்தா.1598)

என்னும் பாடலுடனும் ஒப்பிட்டுக் கூறுகிறார். மேற்கண்ட சான்றுகள் பெண்கள் கணவனுடன் ஒத்து அவர் சொற்படி நடந்து வாழ்வதைக்கற்பு என்னும் நோக்கில் குறிக்கின்றன. இக்கருத்து ஏற்புடையதன்று; குறளுக்கும் ஒவ்வாது.

பெண்களுக்குக் கற்புத்தேவை என்று வற்புறுத்துவதாகவும் சில ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1930-இல் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் "வள்ளுவரும் மகளிரும்" என்னும்நூலில்,

"அடிமைப் பற்றிய உரிமை எல்லாம் ஆண்டானின்
உரிமையேயாகும். அகமுடையாளைப் பற்றிய உரிமை

எல்லாம் அகமுடையானின் உரிமையாகும். அடிமை ஆண்டானைக் கடவுளெனத் தொழுவது போல மனைவியும் மணாளனையே தொழுதல் வேண்டும்" (168, ப.3)

என்கிறார். இவர், "தெய்வந் தொழாஅள்" (குறள். 55) என்னும் குறளின் கொள்கையையே சீத்தலைச் சாத்தனாரும் தம் பாடல்களில் போற்றுகிறார் என ஒப்பிடுகிறார். மனைவி கணவனைத் தொழுது- சார்ந்து வாழவேண்டும் என்னும் நோக்கில் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் தம் கருத்தைக் குறிப்பிடுகிறார்.

### 5.2.3 கற்பின் ஆற்றல்

சமூகத்தில் கற்புடன் வாழும் பெண்களைக் 'குலமகளிர்' என்று பாராட்டுவர். மேலும் அவர்களின் கற்புக்குள்ள ஆற்றலையும் நம்புகின்றனர். இதனைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் பதிவு செய்துள்ளன.

1950-இல் சி. கணேசய்யர் "பெண்களுக்குப் பெருந்தகைமை கற்பே" என்னும் கட்டுரையில், கற்பின் ஆற்றலைப் பற்றிக் குறிப்பிடுகிறார். (218, ப.133)

மேலும்,

"தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" (குறள். 55)

என்னும் குறள் மழையையும் பெய் என்று சொன்னால் பெய்யும் ஆற்றல் கற்புடை மகளிர்க்கு உள்ளது என்றும்,

"நீயே உலகுக்கொரு சான்று நிற்கே தெரியுங்கற்பதனிற்
தூயேன் எண்ணிற் தொழுகின்றேன் எரியவனைச் சுடேல்"

என்னும் கம்பராமாயண கற்புடையாள் சீதை கூறிய வண்ணம், நெருப்பும் அனுமனைச் சுடாமல் போனதையும் ஒப்பிட்டுக் கூறுகிறார். இதனால் கற்புடைய மங்கையர் தம் கற்பினாற்றலால் இயற்கையானவற்றையும் எதிர்க்க முடியும் என்ற கருத்தை வெளிப்படுத்துகின்றார். இஃது ஆராய்தற்கு உரியது. தொடர்ந்து இதே நோக்கில் கோ.சிவகுருநாதன் (தெய்வந்தொழாஅள், 1976) வ.குருநாதன் (கற்பென்னும் திண்மை, 1981), இரா. முத்துக்குமாரசாமி, (பொய்யில் புலவன் பொருளுரை ஏது, 1984) போன்றோரும் திருக்குறளைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டுப் பத்தினிப் பெண்டிர் தம் கற்பின் ஆற்றலால் மழையைப் பெய்விப்பர் என்று கற்பின் ஆற்றலைக் குறிப்பிடுகின்றனர்.

### 5.2.4 பரத்தமை

சில பெண்கள் பொருளுக்காகத் தீய ஒழுக்கங்களில் ஈடுபடுகின்றனர். இவர்களை விலைமகளிர் என்றும் பரத்தையர் என்றும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. திருவள்ளுவர் இவர்களை 'வரைவின் மகளிர்' என்கிறார்.

1988-இல் சரளா இராசகோபாலன் "திருக்குறளில் பரத்தமை ஒழிப்பு" என்னும் கட்டுரையில்,

"சங்க இலக்கியத்தில் இருநூற்று அறுபத்து மூன்று பாடல்களில் இருநூற்று இருபத்தொரு பாடல்கள் பரத்தமை தொடர்பாகவே இருக்கின்றன. இப்பாடல்களால் அக்கால சமுதாய நிலையையும்

பரத்தையர் பெருக்கத்தையும்

காணமுடிகிறது" (226, ப.12)

என்கிறார். திருவள்ளுவர் பரத்தமையைக் காமத்துப்பாலில் கூறாது பொருட்பாலில் மட்டுமே கூறியுள்ளதைச் சங்க இலக்கியத்துடன் ஒப்பிட்டு சரளா இராசகோபாலன் கூறுகிறார்.

5.2.5 களவொழுக்கம்

காதலினால் காதலர்களுக்கு விமர்சனங்கள் பல உண்டாகும். இதனால் காதலனும், காதலியும் மன வருத்தம் அடைவர். குறிப்பாகப் பெண்களுக்குக் கூடுதலான மன வருத்தத்தை உண்டாக்கும்.

1955-இல் சு. குமாரசாமி ஆச்சாரி "திருவள்ளுவர் கால இல்வாழ்வும் துறவும்" என்னும் கட்டுரையில் "களவுக் காலத்தில் ஆண்களைவிடப் பெண்கள் மிகையாக பாதிக்கப்படுகிறார்கள்" என்கிறார்.

(222, ப.25)

மேலும்,

"யாங்கண்ணிற் காண நகுப அறிவில்லார்

யாம்பட்ட தாம்படா வாறு" (குறள்.1140)

என்னும் குறளும்,

"பழியொடு வருமின்பம் வெஃகார்"

. . . . . . . . .

பொன்கோளொழுக்கம் கண்கொள நோக்கி" (அகம். 112)

என்னும் பாடலும் களவுக் காலத்தில் ஏற்படும் இடையூற்றை அறிவிக்கின்றன என்கிறார். இதனால் பெண்கள் களவு ஒழுக்கத்தில் ஈடுபடாமல் இருந்திருப்பர் என்கிறார். இருப்பினும் இது ஒன்றைக்கொண்டு முடிவுக்கு வருதல் முறையாகாது.

5.2.6 சமூகத்தில் காதல்

உயிரினங்களிடையே இயற்கையாக அமைவது காதல். இது முறையான ஆண், பெண்களிடையே ஒத்த அழகாலும், அன்பாலும், மனத்தாலும் ஏற்படும்.

1960-இல் வீ.ப. கா. சுந்தரம் "கண்டதும் காதலா" என்னும் கட்டுரையில்,

"ஏதோ கண்டவுடன் காதல் கொள்ளல் என்பதும் உடல் அழகால் மட்டும் உடனே மயங்கிவிடல் என்பதும் உடல்புணர்ச்சியில் உடனே ஈடுபடல் என்பதும் அறிஞர் கண்ட ஆய்வாகாது. காதல் ஆய்ந்து கொளற்குரியது என்பதைப் பல்வேறு கோணங்களிலிருந்து காணலாம்"

(230, ப.336)

என்கிறார்.

காதலும் நட்பும் ஒன்றே என்பதற்கு,

"உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு" (குறள்.1122)

என்னும் குறளையும்,

"பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே" (குறுந்.3)

என்னும் பாடலையும் ஒப்பிடுகிறார். காதலில் நட்பைக் கூறும் குறுந்தொகையிலும், உடம்பிற்கும் உயிருக்குமுள்ள தொடர்பினை நட்பாகத் திருவள்ளுவர் கூறும் சிந்தனை, கருத்து வளர்ச்சி பெற்றதை உணர்த்துகிறது.

5.2.7 காதல் தன்மை

காதலித்தவர்கள் பிரியக்கூடாது. பிரிந்தால் மயக்கமும், தயக்கமும் சோர்வும் துன்பமுமே தொடரும். சில வேளைகளில் உயிர்கூடப் பிரிந்துவிடும். உளவியல் அடிப்படையிலும் பாதிப்பு ஏற்படும்.

1978-இல் ப.ச. ஏசுதாசன் "மலரினும் மெல்லிது" என்னும் நூலில்,

"காதல் என்பது ஒரு தீ ! ஆனால், இந்தத் தீ
விசித்திரமானது. உலகில் நாம் காணும் நெருப்புத்

தொட்டால்தான் சுடும். விலகியிருந்தால் சுடாது.
ஆனால், காதல் தீயோ நீங்கினால் பிரிந்தால்
சுடுகின்றது" (44, ப.114)

என்கிறார். அவர்,

"தொடிற்சுடின் அல்லது காமநோய் போல"(குறள்.1157)

என்னும் குறளை,

"ஈரமில் கேள்வன் உறீஇய காமத்தீ
நீருள் புகினும் சுடும்" (கலி.27:61-62)

என்னும் பாடலுடன் ஒப்பிட்டுக் காதலின் தன்மையினைக் கூறுகிறார்.

5.2.8 பசலை

காதலர் பிரிவினால் காதலிக்கு துன்பம் ஏற்படும். துன்பம் மிகுதியினால் அவருக்குப் 'பசலை' என்னும் நோய் ஏற்படுமென்பதைச் சங்க இலக்கியப் பாடல்களும் திருக்குறளும் கூறுகின்றன.

1987-இல் மு. பொன்னுசாமி "பசலை பாய்தல்" என்னும் கட்டுரையில், குறள் கூறும் பசலைச் சிந்தனையைக் குறுந்தொகையுடன் ஒப்பிடுகிறார் (248, ப.347).

பிரிவுத் துயரத்தால் தலைவி எய்தும் பசலை பற்றியும், தலைவன் வந்ததும், அது மாய்வது குறித்தும் சங்கப்புலவர் கூறியுள்ளனர். சான்றாகக் குறுந்தொகை பசலையை,

"பசலை நோய் நெற்றிமுழுதும் பரந்துவிட்டது" (குறு.6 : 7)

என்றும், வள்ளுவரும் பசலையை, 'விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன், முயக்கற்றம் பார்க்கும் பசப்பு' (குறள்.1186) என்றும் குறிப்பதைக் கருத்தளவில் ஒப்பிடுகிறார். காதலி 'பசலை' என்னும் நோயினால் பாதிக்கப்படுவதை மேற்கண்ட ஒப்பீட்டின்வழி அறியமுடிகிறது.

5.3 கலை

கலை என்பது மக்கள் அணியும் ஆடை, அணிகலன், பொழுதுபோக்கு நிகழ்வுகள் இசை போன்றவைகளை உள்ளடக்கியதாகும்.

5.3.1 ஆடை

மனிதன் பிறந்த மேனியுடன் இருந்து பின்னர் ஆடையணிய வேண்டும் என்னும் அறிவைப் பெற்றான். மனித இன வளர்ச்சியில் ஆடையின் தேவையைப் பற்றிய அறிவு வளர்ச்சி உருவாயிற்று. பழந்தமிழகத்தில் மக்கள் ஆடையையும் வாழ்க்கையையும் தொடர்புபடுத்திப் பேசியுள்ளனர். ஆடைகளைத் தொடர்பு படுத்தி அறங்களையும் ஒப்புமைப்படுத்தியுள்ளனர். இந்நோக்கில் 1980-களுக்குப் பிறகே ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

1980-இல் டாக்டர் கே. பகவதி "தமிழர் ஆடைகள்" என்னும் நூலில்,

> "உடை கொடுப்பவன் நன்மை அடைவதும், கொடாதவன் தீமை அடைவதும் உண்டு. எனினும் உடையும் கொடுப்பதைத் தடுப்பவன் கொடாதவனைவிடத் தண்டனை பெறுவான் என்பதையும் தமிழர் நம்பினர்" (153, ப.120)

என்கிறார். இதனை,

> "கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
> உண்பதூஉம் இன்றிக் கெடும்" (குறள். 166)

என்னும் குறளும்,

> "கொடுப்பது விலக்கு கொடியோய் உனது சுற்றம்
> உடுப்பதூஉம் உண்பதூவும் இன்றி விடுகின்றாய்"
> (கம்ப. வேள்வி. 33)

என்னும் பாடலும் ஆடையுடன் அறத்தைத் தொடர்புபடுத்திக் குறிப்பிடுவதைக் கே. பகவதி சுட்டுகிறார். தொடர்ந்து இந்நோக்கில் ஆய்வுகள் வரவில்லை.

### 5.3.2 முத்து

கடலிலிருந்து எடுக்கப்படுவது முத்து. இது அழகாக ஒளிதரும் தன்மையது. இதனை மக்கள் அணிந்துகொண்டு மகிழ்ந்துள்ளதை

இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. 1967-இல் தேவநேயப்பாவாணர் "தமிழ் வரலாறு" என்னும் நூலில்,

> "பாண்டிய கவாடம் என்னும் பருமுத்தவகை சாணக்கியரின் அர்த்தசாத்திரம் என்னும் நூலில் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது" (143, ப.21)

என்கிறார். தமிழ் மக்கள் அணிகலனாகப் பயன்படுத்திய முத்தினை உவமைகளாகத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் பதிவு செய்துள்ளன.

> "முறிமேனி முத்தம் முறுவல்" (குறள். 1113)

என்னும் திருக்குறளும்,

> "கண்ணீர்த்துளி பருமுத்துறையும்" (சீவக. 1318)

என்னும் பாடலும்,

> "முத்து நீர்ச்சாந்தடைந்த மூஉய்" (பரி.10:13)

என்னும் பாடலும் முத்துப் பற்றிக் குறிப்பிட்டுள்ளதைத் தேவநேயப் பாவாணர் ஒப்பிடுகிறார்.

### 5.3.3 நாடகம்

தமிழகத்தில் மக்கள் பொழுதுபோக்கிற்காக நாடகம் போன்றவற்றை நடத்தியுள்ளனர். நாடகத்தின் வழி நடிப்பும், பாடலும்

இணைந்திருப்பதால் மக்களுக்கு வாழ்வியல் கருத்துகள் நேரடியாக, எளிமையாகப் போய்ச் சேருகின்றது.

1968-இல் ப. அருணாசலம் "குறளின் செய்தி" என்னும் நூலில், "திருக்குறள் காமத்துப்பாலைப் போன்று பொருட்பாலும் நாடகப்பாங்கில் உள்ளது" என்கிறார் (8, ப.50). இவர்,

"என்னைமுன் நில்லன்மின் தெவ்வீர் பலரென்னை"
(குறள். 771)

என்னும் திருக்குறளையும்,

"மாவீராயினும் கூழைதார் கொண்டு
யாம் பொருதும் என்றல் ஓம்புமின்" (புறம்.88)

என்னும் புறநானூற்றையும் ஒப்பிட்டுத் திருக்குறளும், புறநானூறும் நாடகப்பாங்கில் உள்ளன என்று இனங்காட்ட முயல்கிறார்.

5.3.4 இசை

மக்களை இன்பத்திலும், துன்பத்திலும் ஆழ்த்துவது இசை. இசைக்கு உருகாத உயிரினமே கிடையாது. இசையைப் பற்றியும் இசையினது கருவிகளைப் பற்றியும் நம் இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.

1936-இல் உ.வே. சாமிநாதையர் "திருவள்ளுவரும் திருக்குறளும்" என்னும் நூலில்,

> "இசைச் செய்திகளாகக் குறளில் உள்ளவை சில "குழலினிது யாழினிது என்ப "என்பதில் குழலும் யாழும் சொல்லப்படுகின்றன. குழலின் பின்னர் யாழை வைத்த முறை அவற்றின் தோற்ற முறையையும், குழலின் பின் யாழ் வாசிக்கப்படும் மரபையும் பின்பற்றியது" (84,ப.7)

என்கிறார். அவர்,

> "குழலினிது யாழினிது என்ப" (குறள். 66)

என்னும் குறளை,

> "குழல்வழி நின்றது யாழே" (சிலம்பு.3:139)

என்னும் பாடலுடன் ஒப்பிடுகிறார். மேற்கண்ட சான்றுகளின் வழியே குழல் முன்னதாகவும், யாழை பின்னதாகவும் தோன்றியிருக்க வேண்டும் என்னும் சிந்தனையை உ.வே. சாமிநாதையர் சுட்டுகிறார்.

### 5.3.4.1 இசை மயக்கம்

இசைக்கு மனிதன் மட்டுமின்றி விலங்குகளும் கட்டுப்பட்டுள்ளன என்பதையும், கருத்தானது சிறந்ததாக இருக்குமாயின் மக்கள் நின்று கேட்பர் என்பதையும் இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.

1984-இல் ந. சுப்புரெட்டியார் "செவியுணவு" என்னும் கட்டுரையில் திருக்குறளைப் பெரியாழ்வார் பாடலுடன் ஒப்பிட்டு

இசைக்கு மயங்கும் நிலையினைக் குறிப்பிடுகிறார் (235, ப.4) அவர்,

"கறவையின் கணங்கள் கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்திரங்கிச் செவியாட்ட கில்லாவே"
(பெரியாழ் திரு. 3:6-8)

என்னும் பாடலும்,

"செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்" (குறள். 412)

என்னும் குறளை ஒப்பிடுகிறார். வயிற்றுக்குப் பசியுணவு எப்படித் தேவையோ, அப்படிச்செவிக்கும் இசையுணவு அமைகின்றது என்று ந. சுப்புரெட்டி கூறுகிறார். இவர் ஒப்பிட்டுக் கூறும் இசை மயக்கம், திருக்குறளுடன் வலிந்து ஒப்பிடுவதாக உள்ளது.

## 5.4 சமூகப் பழக்கவழக்கங்கள்

சமூகத்தில் பொழுதுபோக்குக்காகச் சில விளையாட்டுகளை மக்கள் விளையாடினர். அது அறிவைத் தூண்டுவதாகவும் அமைந்தது. இந்தப் பழக்கம் சமூகத்தில் ஒரு வழக்கமாகவே மாறிவிட்டது. இதனை நம் பண்டைய இலக்கியங்களும் திருக்குறளும் பதிவு செய்துள்ளன.

1979-இல் க. இராமச்சந்திரன் "திருக்குறளில் பழக்க வழக்கங்கள்" என்னும் கட்டுரையில்,

"திருக்குறளில் சுட்டப்பட்ட பழக்கவழக்கங்கள் பல இன்றைய
சமுதாயத்தில் இடம்பெறாது இருப்பினும் அவற்றைப்
பண்டைக்கால ஒழுகலாறுகளாக எண்ணுதல் வேண்டும்"
(32, ப.293)

என்கிறார். இப்பழக்கங்களுள் வட்டாடுதல் ஒன்று. வட்டாடுதல் என்பது உருண்டை உருட்டுதல் என்னும் பண்டைக்காலப் பொழுதுபோக்கு விளையாட்டு, இவ்விளையாட்டை நிகழ்த்தும்போது அதற்குரிய களமாக அரங்கம் அமைத்துக் கொள்ளுதல் பண்டைக்கால வழக்கம். இதனை,

"அரங்கின்றி வட்டாடி யற்றே" (குறள்.401)

என்ற குறளும்,

"கட்டளை யன்ன வட்டரங்கு இழைத்துக்
கல்லாச் சிறாஅர் நெல்லிவட்டாடும்" (நற்.3)

என்ற பாடலும் கூறுவதை க. இராமச்சந்திரன் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

## 5.5 சாதி

தொழில்களை முதன்மைப்படுத்திச் சாதிகள் உருவாக்கப்பட்டுள்ளன. பின்னர் பிறப்பையே சாதியாக மாற்றிவிட்டனர். இதனுள் உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி என இருபிரிவுகள் தோன்றின. இதனைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் எதிர்த்துள்ளன.

1954-இல் சு. குமாரசாமி ஆச்சாரி "திருவள்ளுவர் கால வாழ்க்கைநிலை" என்னும் கட்டுரையில்,

> "மக்கள் அந்தணர், அரசர், வணிகர், அளவர், உமணர், இடையர், இயவர் முதலிய பல பிரிவுகளாக வாழ்ந்துவந்துள்ளனர். இவை எல்லாம் குலம் குறிக்கவந்தனவல்ல; தொழில் குறிப்பன என்பர் பலர்"
>
> (221, ப.33)

என்கிறார். மேலும், வண்ணார், புலையர்களை இழிபிறப்பினர் எனப் புறநானூறு 170, 131-ஆம் செய்யுட்கள் குறிப்பதை எதிர்த்துத் திருக்குறள், "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" (குறள். 972) என்று கூறுவதைக் குமாரசாமி ஆச்சாரி சுட்டுகிறார். இவ்வாய்வு சாதிப்பிரிவையும், சாதி எதிர்ப்பையும் சுட்டுவதாக அமைந்துள்ளது.

## 5.6 பழமொழி

பழந்தமிழகத்தில் மக்கள் தம் பேச்சுகளிடையே பழமொழிகளைக் குறிப்பிடுவர். இவை, கற்றதனால் மட்டுமின்றி அனுபவத்தால் வருவன.

1970-இல் கு. அழகிரிசாமி "திருவள்ளுவர் கற்ற கல்வி" என்னும் கட்டுரையில்,

> "பழமொழி என்பது அன்றும் சரி இன்றும் சரி நூலாசிரியர்களோ கல்விமான்களோ உற்பத்தி செய்தவை அல்ல. அனுபவத்தில் கண்ட உண்மைகளைப் பொதுமக்களே பழமொழிகளின் உருவில்

வெளியிட்டிருக்கிறார்கள். இந்த ஆற்றல்
பொதுமக்களுக்குத்தான் உண்டு" (13, ப.53)

என்கிறார். இதனை,

"இனிய உளவாக இன்னாத கூறல்" (குறள்.100)

என்னும் குறளும்,

"கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனேனே" (அப்பர்.
ஆரூர்.1)

என்ற தேவாரமும், 'கனியிருப்பக் காய்கவர்ந்தற்று' என்னும் பழமொழிக்கருத்தினை எடுத்தாளுவதை கு. அழகிரிசாமி ஒப்பிட்டுள்ளார். பழமொழியினைத் திருக்குறளும், தேவாரமும் தம் பாக்களினிடையே பயன்படுத்தியுள்ளதை இவர் ஆய்வு நோக்கில் அறியமுடிகிறது.

## 5.7 புராணங்கள்

புராணம் என்பது மக்களை நல்வழிப்படுத்தும் எளிய கருவியாக அமைந்தது. அப்போக்கில் தமிழ்ப்புராணங்களில் பல தத்துவங்கள், இயற்கை இயல்புகள் விளக்கம் பெற்றன. புராணங்களில் வரும் பெயர்கள், உலகங்கள், தெய்வங்களைப் பற்றி மக்கள் நம்பிக்கை கொண்டு வாழ்ந்தமையை இலக்கியங்கள் கூறியுள்ளன. இதனைத் திருக்குறளோடு ஒப்பிட்டு 1975-களுக்குப் பிறகே ஆய்வுகள் வந்துள்ளன.

1976-இல் இ. சுந்தரமூர்த்தி "சொல்வலை வேட்டுவர்" என்னும் நூலில்,

"சங்க நூற்களுக்கும் திருக்குறளுக்கும் மிகுந்த வேற்றுமையின்மையும் முரண்பாடின்மையும் அவற்றை ஒப்பிட்டுப் பார்க்கும்போது நன்கு தெளியலாம். சங்ககால மக்கள் தெய்வம், ஊழ், மறுபிறப்பு, வீடுபேறு, சடங்குகள், வேதங்கள், வேள்விகள், நரகம் முதலியவற்றில் நம்பிக்கை கொண்டு வாழ்ந்தனர் என்பது சங்க நூற்பாக்களால் அறியலாம்" (98, ப.21)

என்கிறார். இவர்,

"புத்தேள் உலகம்" (புறம்.22)
"வாரா உலகம்" (புறம்.341)
"தேவர் உலகம்" (புறம்.228)

என்ற தொடர்களுடன்,

"புத்தேள் உலகு" (குறள்.234)

என்னும் குறளை ஒப்பிடுகிறார். இவர் புத்தேள் உலகு பற்றிய கருத்தினைப் புறநானூறும், திருக்குறளும் சுட்டுவதை ஒப்பிட்டுக் கூறியுள்ளார்.

5.7.1 கூற்றுவன்

புராணங்களில் இடம்பெறும் நம்பிக்கைகளுள் கூற்றுவன் ஒன்றாகும். கூற்றுவன் என்றால் உயிரைப் பறிப்பவன் (எமன்) என்று பொருள்.

1979-இல் ஆ. இராமசாமிப்பிள்ளை "திருக்குறளில் புராணக் கருத்துகள்" என்னும் கட்டுரையில்,

> "சங்க இலக்கியங்களைப் போலத் தமிழ் மறையான திருக்குறளிலும் இப்புராணக் கருத்துகள் நிறைய இடம்பெற்றிருக்கின்றன" (35, ப.59)

என்கிறார். இவர்,

> "கூற்றாயினவாறு" (திருஅதிகை. வீரட். 1:1)
>
> "காலன் வருமுன்னே கண்பஞ்சடைமுன்னே" (பட்டி.369:1)

என்ற பாடல் அடிகளை,

> "கூற்றுடன்று மேல்வரினும்" (குறள்.765)
>
> "உயிருண்ணும் கூற்று" (குறள். 326)

என்னும் திருக்குறள் தொடர்களுடன் ஒப்பிட்டுக்கூறுகிறார். இவர் கூற்றுவன் பற்றிய நம்பிக்கைகளைத் திருக்குறளும், பட்டினத்தார் பாடலும் எடுத்தாளும் பாங்கை தம் ஆய்வில் இனங்காட்டிச் செல்கிறார்.

5.7.2 எழு பிறப்பு

எழு பிறப்பு பற்றிய மக்கள் நம்பிக்கையை குறளும், பெரியபுராணமும் கூறுகிறது.

"மீண்டும் பிறப்புண்டேல்" (காரைக். புராணம். 60)

என்னும் பாடலும்,

"எழுபிறப்பும் தீயவை தீண்டா" (குறள். 62)

என்னும் குறளும் எழுபிறப்பு பற்றிய கருத்தினைப் பதிவு செய்துள்ளன என்று ஆ. இராமசாமிப் பிள்ளை ஒப்பிட்டுக் கூறுகிறார்.

5.8 சமூகப் பொருளாதாரம்

சமுதாயத்தில் மக்கள் அனைவரும் பசியின்றி வாழவேண்டுமானால் பொருளாதாரச் சீர்திருத்தம் வேண்டும். இதில் குறைகள் இருப்பதனால்-தான் ஏழை-பணக்காரன், ஆண்டான்-அடிமை என்ற வேறுபாடுகள் தோன்றுகின்றன. திருக்குறளில் சமூகத்தில் பொருளாதாரச் சிந்தனைத் தொடர்பான கருத்துகளும் இடம் பெற்றுள்ளன. இது தொடர்பான ஆய்வுகள் 1954-க்குப் பிறகே வந்துள்ளன.

5.8.1 வறுமை

அரசினாலும், பொருளாதார நிலையினாலும்தான் வறுமையை ஒழிக்க முடியும் என்ற சிந்தனை இலக்கியங்களில் காணப்படுகிறது.

1954-இல் பரணி "திருவள்ளுவர் ஒரு புரட்சிக்காரர்" என்னும் நூலில்,

"நல்ல அரசும், பொருளாதார சமத்துவமும் நாட்டில் நிலைபெற்றால் ஒழிய, மக்கள் ஒழுக்கமும் உயர்வும் பெற்று இன்ப வாழ்வை எட்ட இயலாது" (154, ப.16)

என்கிறார். அவர் வறுமையை நீக்குவது உழவுத் தொழில் என்பதை,

"இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்" (குறள்.1040)

என்னும் திருக்குறளும்,

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்"
(31, சுதந்திரப் பள்ளு 4)

என்னும் பாரதி பாடலும் கூறுவதை ஒப்பிடுகிறார். இவர் உழவுத் தொழில் மூலம் பொருளாதாரத்தைப் பெருக்கத்திருக்குறளும், பாரதியாரும் அறிவுறுத்தியவற்றை ஒப்பிட்டுக் கூறுகிறார்.

தொடர்ந்து 1984-இல் பி.பி. கனியபெருமாள் "பசிப்பிணி மருத்துவம்" என்னும் கட்டுரையில்,

"இருப்போர் இல்லாதாரைப் புரந்திடல் வேண்டும் என்பது கொள்கையாக இருந்தது. இந்த நிலையே பிற்காலத்திலும் தொடர்கின்றது" (52, ப.129)

என்கிறார். இவர்,

"இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின்" (குறள். 1062)

என்னும் குறளை,

"பஞ்சமோ பஞ்சம் என்றே பரிதவித்தே உயிர்துடித்து
துஞ்சி மடிகின்றாரே ! இவர் துயர்களைத்
தீர்க்க ஓர் வழியிலையே" (பாரதி கவிதை, 15:6:3)

என்னும் பாரதியாரின் கவிதை அடிகளோடு ஒப்பிட்டுக் கூறுகிறார். பி.பி. கவியபெருமாள் வறுமையினால் இரப்பவர்க்கு, பொருள் உடையவர்கள் உதவி செய்து இல்லாமை நிலையினை உருவாக்க வேண்டும் என்ற சிந்தனையில் திருக்குறளும், பாரதி பாடல்களும் குறிப்பிடுகின்றன. இவ்வொப்பீட்டின் மூலம் திருவள்ளுவரும் - பாரதியும் வறுமையைக் கண்டு வருந்திக் கூறியவற்றை இனங்காண முடிகிறது.

### 5.8.2 அறத்தின் வழிப்பட்ட பொருள்

ஒருவனின் உழைப்புக்கு ஏற்ற, அதே வகையில் பிறருக்குத் தீமை தராத வகையில் பொருள் பெறவேண்டும். அதுவே அறத்தையும் இன்பத்தையும் தரும். பொருள் இயற்றுவதிலும் அறத்தைக் கருவியாகக் கொள்ளவேண்டும் என்ற 1985-க்குப் பிறகே ஆய்வுகள் வருகின்றன.

1985-இல் கு.ச. ஆனந்தன் "திருவள்ளுவர் தரும் பொருளியல் கோட்பாடுகள்" என்னும் நூலில்,

"தனி மனிதனின் திறமையறிந்து, உழைப்பைப் பெற்று அந்த உழைப்புக்கேற்ற ஊதியத்தை நல்கி, தனி மனிதனுக்கோ,

சமுகத்திற்கோ எவ்வகைத் தீமையையும் இழைக்காமல்
வந்த பொருளே அறத்தையும் இன்பத்தையும் தரும்"
(20, ப.18)

என்கிறார். இதற்குச் சான்றுகளாக,

"சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படும்" (புறம்.31)

என்னும் பாடலை,

"அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்" (குறள். 754)

என்னும் குறளுடன் ஒப்பிடுகிறார். புறநானூற்றுப் பாடலை விடத் திருக்குறள், திறன் அறிந்து, தீதின்றி வரும் பொருள் எனக் குறிப்பிடுவது அதன் கருத்து வளர்ச்சியினைக் குறிக்கிறது.

## 5.9 பண்டைய சமுகப் பண்பாட்டு வரலாறு

பழந்தமிழகப் பண்பாட்டு வரலாற்றைக் காணும் நோக்கில் 1960-களுக்குப் பிறகு திருக்குறளில் ஒப்பீட்டாய்வுகள் வந்துள்ளன.

1968-இல் பெ. கோவிந்தன் "தமிழர் யாவர்" என்னும் நூலில்,

"தமிழ் நாட்டில் பிறந்து...தமிழைத் தாய்மொழியாகக்
கொண்டு பேசி... மணஞ்செய்து இல்லறம் நடத்தினோரும்,

துறந்த துறவறம் பூண்டோரும் இறந்துவிட்டத்து அவர்களுக்கு மக்கள் பிணக்கடன் செய்தனர்" (70, ப.160)

என்கிறார். இதனை,

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை"(குறள். 43)

என்னும் குறளும், 'உதியஞ் சேரலாதன் துறக்கம் எய்திய மறப்படை மறவர்களுக்குப் பெருஞ்சோறு படைத்து வழிபட்டான்' (அகம்.233) என்னும் அகநானூற்றுக் கூறுவதை ஒப்பிட்டுத் தமிழகத்தில் பிணக்கடன் செய்துள்ள வரலாற்றைச் சுட்டுகிறார்.

5.9.1 தமிழ்ச்சங்கம்

தமிழகத்தில் சங்கம் இல்லை என்ற பி.டி. சீனிவாச ஐயங்கார் கருத்துக்கு முரணாகச் சங்கம் இருந்தது என்பதற்குத் திருக்குறளையும் பிற இலக்கியங்களையும் ஒப்பிட்டு 1989-இல் ஆய்வு மேற்கொண்டுள்ளனர்.

குறிப்பாக 1989-இல் புலவர் கா. கோவிந்தன் "தமிழர் வரலாறு-1 மொழிபெயர்ப்பும் திறனாய்வும்" என்னும்நூலில், சங்கம் இருந்தது என்பதை உறுதிப்படுத்த சங்க இலக்கியங்களிலிருந்தும் திருக்குறளிலிருந்தும் சான்றுகள் தருகின்றார்.

5.9.1.1 எண்ணும் முறை

தமிழகத்தில் பழங்காலத்திலிருந்தே எண்ணும் முறை இருந்தது என்பதற்கு புலவர் கா. கோவிந்தனார்,

"ஆண்டு-கணிப்புமுறை பண்டைத் தமிழர் காணாத ஒன்று. எழுத்தில் உண்மை இருக்கலாம். ஆனால் தமிழர்கள் எண்ணும் முறையினையே அறியாதவர்கள் என்பது தமிழகத்துப் பண்டைய வரலாற்று நிலையை உணரத் துணை நிற்கும் எண்ணற்ற நூற்களில் ஒரு நூலைத் தானும் அறியாதார் கூற்றே ஆகும்" (69, ப.369)

என்கிறார். மேலும்,

"வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்" (குறள். 1261)

"வைக்கும் தன் நாளை எடுத்து" (குறள்.776)

என்னும் குறட்பாக்களிலும்,

"வேலின் நட்ட களிறு பெயர்த் தெண்ணின்" (புறம்.302)

"எண்ணும் வரம்பு அறியாப் பன்மா" (பதிற். 32,74,84)

"ஒன்று இரண்டு அலபல" (பதிற்.41)

என்னும் பாடல்களிலும் எண்ணும் முறையினை மக்கள் அறிந்திருந்தனர் என்பதை ஒப்பிட்டுக் கூறுகிறார்.

5.9.1.2 அவை

'அவை' என்று குறிப்பிடும் 'மன்றம்' பழந்தமிழகத்தில் இருந்திருக்கின்றது. இதனை,

"உறந்தை அவையத்து அறம்நின்று" (புறம். 39)

"முரசு முழங்குதானை மூவருங்கூடி அரசவை" (பொருந.54)

என்னும் பாடல்களில் நீதி வழங்கும் அவைகளும்,

"கூத்தாட்டு அவைக்குழாம்" (குறள்.332)

என்னும் குறளில் நாடக அரங்கில் இடம்பெறும் அவையையும் ஒப்பிட்டு 'அவை' பற்றிய சிந்தனைத் தமிழகத்தில் இருந்துள்ளது என்று கா. கோவிந்தனார் நிறுவுகிறார்.

5.9.1.3 அவைத்தலைவரும் கற்றவரும்

அவையினது தலைவரும், கற்றவரும் பண்டைய சமுகத்தில் சிறந்த மதிப்புடையவர்களாகக் கருதப்பட்டுள்ளனர் என்பதை,

"மாங்குடி மருதன் தலைவனாக" (புறம். 72)

என்னும் பாடல் அடியும்,

"சொல்தெரிதல் நல்லார் அகத்து" (குறள். 717)

என்னும் குறளும் வெளிப்படுத்துகின்றன என்று புலவர் கா.கோவிந்தன் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

5.9.1.4 தலைவர்

தலைவர் பற்றிக் கூறும் புலவர் கா. கோவிந்தன்,

"பலர் குடியிருக்கும் ஓர் அமைப்பை வழிநடத்திச் செல்ல இவர்களுக்குள்ளாகவே ஒருவர் இருக்கவேண்டியது இன்றியமையாதது. அவ்வாறு ....வழிநடத்திச் செல்வோர்க்கு இட்டு வழங்கும் பட்டம் தலைவர் என்பதாகும்" (69, ப.370)

என்கிறார். இதனை,

"தலைமக்கள் இல்வழி இல்" (குறள். 770)

என்னும் திருக்குறளுடன்

"கோடியர் தலைவ" (பொரு. 57)

"கலம்பெறு கண்ணாளர் ஒக்கல் தலைவ" (மலை.50)

என்னும் சங்கப்பாடல்களை ஒப்பிட்டு இனம் காட்டுகிறார்.

மேற்கண்ட சான்றுகளின் வழி சங்கம் இருந்திருக்க வேண்டும் என்பதற்கு என்னும் முறை, அவை, அவைத்தலைவர், கற்றவர், தலைவர் ஆகிய சான்றுகளிலும் பதிவாகியுள்ளதைக் காணமுடிகிறது.

5.10 இயற்கை அறிவு

வாழ்க்கையின் பின்புலங்களுடன் இயற்கையை இணைத்துப் பார்ப்பதில் கைதேர்ந்தவர்கள் பழந்தமிழ் இலக்கியப் புலவர்கள். திருவள்ளுவத்திலும் இயற்கை பற்றியச் சிந்தனை உள்ளது என்று ஒப்பீட்டாய்வுகள் 1940-களில் வந்துள்ளன.

1941-இல் மு. இராசாக்கண்ணு "யாமம்" என்னும் கட்டுரையில்,

> "இயற்கையின் எழிலை இன்புற உணர்ந்து இயற்கை வாழ்வே உயிர்க்கு வாழ்வு எனும் திவ்விய எண்ணத்தை ஏற்று ஏற்றவாறே போற்றிச் சிறந்தோர் நம் முதாதையர்" (207, ப.290)

என்கிறார். இவர்,

> "ஊர்துஞ்சு யாமமும் விடியலுமின்றி" (குறுந்.32)
>
> "யாமத்தும் துயிலாள்" (கலி.45)

என்னும் பாக்களுடன்,

> "காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
> யாமத்தும் யானே உளன்" (குறள்.1167)

என்னும் குறளை ஒப்பிட்டுச் சிறுபொழுதுகளில் ஒன்றாகிய 'யாமத்தை' அறிந்திருந்த சிந்தனையைக் குறிப்பிட்டுள்ளார்.

## 5.11 உலகம் என்னும் அறிவு

'உலகம்' என்னும் இளவாகிய இயற்கை ஒட்டிய அறிவுச் சிந்தனையைத் திருக்குறளும் பழந்தமிழ் இலக்கியங்களும் பதிவு செய்துள்ளன. இந்நோக்கில் 1980-களுக்குப் பிறகே ஆய்வுகள் வந்துள்ளன. குறிப்பாக,

1983-இல் முனைவர் கு. மோகனராசு "திருவள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப் பொதுமையியலும்" என்னும் நூலில்,

> "தமிழர்கள் உலகத்தைப் பற்றிய இயற்கை அறிவைப் பெற்றிருந்தனர்" (178, ப.279)

என்கிறார். மேலும், உலகம் கடலால் சூழப்பட்டுள்ளது என்பதை

> "கடல்சூழ் மண்டலம்" (குறுந். 137:7)
>
> "விரிகடல் வேலி வியலுலகம்" (சிறுபாண்.114)
>
> "இருள்நிற முந்நீர் வளையிய உலகத்து" (முருகு.293)
>
> "புலவுக் கடல் உடுத்த
> மலர்தலை உலகம்" (பெரும். 409-410)

என்று சங்க இலக்கியப் பாடல்களும்,

> "விரிநீர் வியனுலகம்" (குறள். 13)
>
> "மாறாநீர் வையம்" (குறள். 701)

"வளிவழங்கும் மல்லன் மாஞாலம்" (குறள்.245)

"ஈர்ங்கண்மா ஞாலம்" (குறள். 1058)

என்ற குறட்பாக்களும் உலகம் நீரால் சூழப்பட்டுள்ளது என்னும் அறிவினை உணர்த்துவனவாக உள்ளன என்கிறார்.

## 5.00 முடிவுரை

1. தனி மனித அற நெறி பற்றிய திருக்குறள் ஒப்பீட்டாய்வுகள் கருத்தளவிலேயே மேற்கொள்ளப்பட்டுள்ளன. 1906களில் இரா. இராகவையங்கார், வ. சுப்பையா பிள்ளை, ப.ச. ஏசுதாசன் போன்றோர் தனி மனித அற நெறியை ஒப்பிட்டவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

2. 1956-களில் கருமுத்து இராதா தியாகராஜன், தி. சுந்தராம்பாள், செந்துறைமுத்து, எம்.எஸ். பூரணலிங்கம்பிள்ளை போன்றோர் இல்லறவியல் தொடர்பான திருக்குறள் ஒப்பீட்டாய்வில் ஈடுபட்டவர்கள் ஆவர்.

3. 1956-இல் பகுத்துண்வைக் கூட்டுடைமைப் பொருளியலாக சிந்தித்தமை சாமி சிதம்பரம் அவர்களையே சாரும்.

4. 1987-இல் சமுகப் பழங்கங்கள் வழக்காற்று அற நெறிகளாக மாறியுள்ளதை ஆய்வு நோக்கில் க.த. திருநாவுக்கரசு கூறியுள்ளது ஏற்கத்தக்க ஒன்றாகும்.

5. சமூக மதிப்பைத் தரும் கல்வியியல் தொடர்பான ஆய்வுகள் 1942-இல் கொழும்பு அருள்தியாகராஜா அவர்களால் தொடங்கப் பெற்றாலும் 1983-இல் முனைவர் கு. மோகனராசு கற்பதனால் மனிதன் பல்துறை அறிவு பெறும் நிலையினைப் புதிய கோணத்தில் கூறியிருப்பது சிறந்த ஆய்வு நோக்கு.

6. சமூகத்தில் பெண்கள் நிலைமைகள் குறித்து 1930-க்குப் பிறகே தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் ஆய்வு மேற்கொண்டுள்ளார்.

7. 1950-க்குப் பிறகே கற்பின் ஆற்றலைப் பற்றி சி. கணேசய்யர் போன்றோர் ஆய்வுகள் மேற்கொண்டாலும் 1988-களில் சரளா இராசகோபாலனின் பரத்தைத் தொடர்பான ஆய்வு வரவேற்கத்தக்கதே.

8. 1987-இல் பசலை பற்றிய மு. பொன்னுசாமியின் ஆய்வும், 1980-இல் ஆடை பற்றிய கே. பகவதியின் ஆய்வும் புதிய நோக்கிலானவை.

9. 1979-இல் க. இராமச்சந்திரன் பழக்கவழக்கங்கள் பற்றியும், புராணங்களைப் பற்றி 1976-இல் இ. சுந்தரமூர்த்தி, ஆ. இராமசாமிப்பிள்ளை போன்றோரின் ஆய்வுகள் சிறந்த நோக்கிலானவை.

10. 1980-களுக்குப் பிறகு கு.ச. ஆனந்தனின் பொருளியல் சிந்தனையும், புலவர் கா. கோவிந்தனின் சங்கம் இருந்தது என்பதற்கான ஒப்பீட்டாய்வும், 1983-இல் கு.மோகனராசுவின் இயற்கைசூழ்ந்த உலகியல் அறிவு தொடர்பான ஆய்வும் வரவேற்கத்தக்கன.

***

## 6.0 திருக்குறளில் அறிவியல்

உலகத்தில் எக்காலமும் பலவிதமான நிகழ்ச்சிகள் காணப்படுகின்றன. அவற்றைக் கவனித்துச் சேர்த்து, வகைப்படுத்தி, அவற்றிடையே உள்ள உறவுகளை அறிந்து ஒழுங்கு செய்த அறிவே அறிவியல் எனப்படும். அறிவியல் முறை என்பது விவரங்களைச் சேகரித்தல், அவற்றுள் ஒற்றுமை காண ஊகித்தல், அந்த ஊகத்தைப் புதிய விவரங்களைக் கொண்டு சோதித்தல் என்னும் படிகளை உடையது. மனிதன் உலகத்தில் சடப்பொருள்களாலும் உயிருள்ள பொருள்களாலும் சூழப்பெற்றுள்ளான். அவற்றின் தன்மைகளை ஆராய்ந்து, அவற்றைப் பயன் படுத்துவதற்கு வேண்டிய அறிவை வளர்த்துள்ளான். அதனால் தொடக்கத்தில் மனிதனுடைய சிந்தனைக்கு இடமாயிருந்த அறிவுத்துறைகள் சடப்பொருள்களைப் பற்றிய இயற்பியல், வேதியியல் என்பனவும், உயிர்ப்பொருள்களைப் பற்றிய தாவரவியல், விலங்கியல் என்பனவுமாகும். அவற்றுடன் தன்னுடைய உடலியலையும் ஆராய்ந்து மருத்துவயியலையும் பயன்படுத்தி வந்தான். மேற்கண்ட அறிவியல் நோக்கில் திருக்குறளைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

## 6.1 வேதியியல்

சடப்பொருள்களைப் பற்றிய அறிவியல் வேதியியல் எனப்படும். இதன் தொடர்பான திருக்குறள் சிந்தனை 1977-க்குப் பிறகே வருகின்றது.

1977-இல் ந.வீ. செயராமன் "உழவியல்" என்னும் கட்டுரையில்,

" நிலமும் நீரும் தனித்தன்மை வாய்ந்த பொருள்கள்.
இவை ஒன்றோடொன்று இணையுங்கால் ஒருவகை
வேதியியல் மாற்றம் நிகழ்தல் இயற்கை".

நிலத்தொடு சேர்ந்த நீரின் தன்மை மாறும்.
அதனால், அதன் நிறமும் சுவையும் வேறுபடும்"
(114, ப.172)

என்கிறார். இக்கருத்தை,

" நிலத்தியல்பால் நீர்த்திரிந் தற்றாகும்" (குறள்.452)

என்னும் குறளும்,

" செம்புலப் பெயல்நீர் போல" (குறுந்.40)

என்னும் பாடலும் கூறுவதை இவர் சான்றாகக் கூறுகிறார். மாறுபட்ட இருபொருள்கள் இணையுங்கால், மாற்றம் தரும் இயற்கை நிகழ்ச்சியை வேதியியல் சிந்தனையாக நவீ. செயராமன் கூறுவது ஏற்கத்தக்கது. இவருக்குப் பின், தொடர்ந்து 'வேதியியல்' தொடர்பான திருக்குறள் சிந்தனைகள் வெளிவரவில்லை.

6.2 உயிரியல் விளக்கம்

இயற்கையோடு வாழ்ந்து ஆய்வுக்கண் கொண்டு நோக்கி, ஒவ்வொரு உயிர்ப்பொருளின் தன்மையை உணர்ந்து, அத்தன்மையறிவை உருப்பெருக்கியாக்கி அவற்றின்வழி நுண்ணணு போன்ற உண்மைகளை எல்லோரும் பெரிதாகக் காணுமாறு காட்டுதல் வள்ளுவரின் புலனெறி வழக்கு. எனவே, அவர் ஒரு தேர்ந்த உயிர்நூல் புலவர் என்றால் அது மிகையாகாது. அவர்தம் திருக்குறளில் கூறியுள்ள உயிரியல் கருத்துகளைப் பிற இலக்கியங்களும் கூறியுள்ளன என்று ஆய்வுகள் வந்துள்ளன.

### 6.2.1 விலங்கியல்

விலங்குகளைப் பற்றிய கருத்துகளைச் சேகரித்த அறிவியல் விலங்கியலாகும். திருக்குறளில் இடம் பெற்றுள்ள விலங்குகளுடன் பிற இலக்கியத்தில் இடம் பெறும் விலங்குகளை ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

#### 6.2.1.1 யானையும் புலியும்

யானையையும் புலியையும் ஒப்பிட்டு 1955-இல் பூ.அமிர்தலிங்கனார் "வள்ளுவர் கண்ட உயிரினங்கள்" என்னும் நூலில் கூறியுள்ளார்.

"பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்" (குறள்.599)

என்ற குறளில், யானை உருவத்தால் பெரியதாயினும் புலிக்கு அஞ்சும் என்று கூறப்படுகிறது. ஆனால், சங்க இலக்கியத்தில்,

"கொல்முரண் இரும்புலி அரும்புழைத் தாக்கிச்
செம்மறு கொண்ட வெண்கோட்டு யானை" (நற்.151:1-2)

எனவும்,

"மறங்கொள் இரும்புலித் தொல்முரண் தொலைத்த
முறஞ்செவி வாரணம்" (கலித்.42 : 2-3)

எனவும் யானையின் வீரம் குறிப்பிடப்படுகிறது. இது மாறுபட்டுள்ளது. இவ்வாறு யானை, புலி பற்றிய விலங்கியல் சிந்தனைகளை பூ.அமிர்தலிங்கனார் திருக்குறள், சங்க இலக்கியத்துடன் ஒப்பிடுகிறார். மேலும், முதலை என்னும்

பெரிய விலங்கு நீரிலிருக்கும் பொழுது தன் உடலினும் பெரிய யானையை கொன்றுவிடும் என்பதை "நெடும்புனலுள் வெல்லும் முதலை" (குறள்.495) என்னும் குறளும், "உரவுக் களிறு கரக்கும் இடங்கர்" (மலை.211) என்னும் பாடலும் வெளிப்படுத்துகின்றன. முதலையின் உடலமைப்பு நீருள் வலிமையும், நிலத்தில் வலிமையிழந்தும் இருக்கும் என்னும் விலங்கியல் சிந்தனையைக் காணமுடிகிறது.

### 6.2.1.2 விலங்குச் சண்டை

விலங்குகளிடையே இயல்பாகச் சண்டை நிகழும். இது தற்காப்புக்காகவும் ஏற்படும்.

1970-இல் ந. சொக்கலிங்கம் "யானையும் கோழியும்" என்னும் கட்டுரையில்,

> "இன்சுவை வழங்கும் இலக்கிய ஏடுகளில் யானையையும் கோழியையும் பல்வேறு நோக்கங்களில் பயன்படுத்தி யுள்ளனர். இவ்விரு இனங்களின் வாழ்க்கை முறையில் அவைகளுக்குள்ளே பூசலிட்டுக் கொள்வதனை அறியலாம்" (240, ப.286)

என்கிறார். மேலும்,

> "குன்றேறி யானைப்போர் கண்டற்றால்" (குறள்.758)

என்றும்,

"குப்பைக் கோழித் தனிப்போர் போல்" (குறுந்.305:6)

என்றும் விலங்குகளிடையே நிகழும் சண்டைகளை ந. சொக்கலிங்கம் ஒப்பிடுகிறார்.

6.2.1.3 கால்நடையியல்

திருக்குறளில் கால்நடைகளைப் பற்றிய அறிவியல் சிந்தனைகளும் இடம் பெற்றுள்ளன. உழவுத் தொழிலைப் போற்றிய திருவள்ளுவர், உழவு மாடுகளின் வளத்தினைப் பற்றியும் சிந்தித்துள்ளார். உழவுத் தொழிலுக்குப் பயன்படுவது "காளை" என்னும் விலங்கு. இது வண்டி இழுக்கவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை முதன்மைப்படுத்தி, 1972-இல் தேவநேயப் பாவாணர் "தமிழர் வரலாறு" என்னும் நூலில்,

> "காளை மறம் விஞ்சியது மட்டுமன்று; கற்பாறையிலும் ஆற்று மணலிலும் சேற்று நிலத்திலும் மேட்டிலும் பள்ளத்திலும் பொறை வண்டியை மருங்கொற்றி மூக்கூன்றித் தான் கவழ்ந்து இழுத்துச் செல்லுங் கடைப்பிடியுமுள்ளது" (145, ப.79)

என்கிறார். இதனை,

"மடுத்த வாயெல்லாம் பகடன்னான் உற்ற" (குறள்.624)

என்னும் குறளும்,

"அரிமணன் நெமரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையுமுண்டோ" (புறம்.90:8-9)

என்னும் புறநானூற்றுப் பாடல் அடிகளும் குறிப்பிடுகின்றன. மேற்கண்ட

சான்றின் வழியே காளைக்கு உடலியல் சிந்தனை அடிப்படையில் இயற்கையாக வீரம்–வலிமை உள்ளது என்றும், அதனை வலிமையுள்ளதாகப் பாதுகாக்க வேண்டும் என்னும் கால்நடை வளம் பற்றிய அறிவியல் சிந்தனையைக் காணமுடிகிறது.

6.2.1.4 கவரிமா

கவரிமாவைப் பற்றித் திருக்குறளுக்கு உரை எழுதிய ஆசிரியர்கள் சரியான விளக்கத்தைத் தரவில்லை. உண்மையான பொருளைக் கண்டறிய அறிஞர்கள் சிலர் முற்பட்டனர்.

1970–இல் பி.எல். சாமி "சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்" என்னும் நூலில்,

"சங்க இலக்கியத்தில் கூறப்படும் பிறநாட்டு விலங்குகளில் கவரிமா என்பதும் ஒன்றாகும் (83, ப.457)

என்கிறார். இவர், கவரிமா வாழ்ந்த இடத்தை செவிவழிச் செய்தியாகவோ, கண்டாரிடம் கேட்டதாகவோ, நூல்வழியோ திருவள்ளுவர் அறிந்ததாகவோ இருக்க வேண்டும். இதனை,

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா" (குறள்.969)

என்று திருவள்ளுவர் கூறுகிறார். கவரிமா இமயத்தில் வாழ்ந்ததாக,

"நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி
......
வடதிசை யதுவே வான்றோ யிமயம்" (புறம்.132)

என்ற பாடல் கூறுகிறது.

கவரிமா என்பது ஒருவகை மான் அன்று; இமயமலையில் உள்ள "யாக்" என்னும் விலங்கினமாகும் என்பது இவர் முடிவு. இதனைத் தக்க சான்றுகள் வழி இவர் நிறுவியுள்ளார்.

இது, திருக்குறள் ஆய்வு வளர்ச்சியில் ஒரு புதிய திருப்பம் எனலாம். இவ்வாய்வுக்குப் பின்னர், திருக்குறளுக்கு உரை எழுதிய உரையாளர்கள் சிலர் இவர் கருத்தைப் பின்பற்றியுள்ளனர் (குறள். 960) (முனைவர் கு. மோகனராசு, திருக்குறள் மக்கள் உரை, 1994.)

6.3 ஊர்வன

ஊர்வனவாகிய பாம்பைப் பற்றிய செய்திகள் திருக்குறளிலும் பிற இலக்கியங்களிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன.

1955-இல் பு. அமிர்தலிங்கனார் "வள்ளுவர் கண்ட உயிரினங்கள்" என்னும் நூலில், பாம்பின் உடல் இயற்கைப் பண்பைத் தீய-உடன்பாடற்ற மனிதர்களின் நட்புக்கு ஒப்பிடுகிறார்.

"குடங்கருள் பாம்போடு உடனுறைந் தற்று" (குறள். 890)

என்னும் குறளை,

". . . . . . . . . . . . . ஓரறையுள்
பாம்போடு உடனுறையும் ஆறு" (பழமொழி, 394:3-4)

என்னும் பழமொழிக் கருத்துடன் ஒப்பிடுகிறார்.

6.4 பறவைகள்

பறவைகள் பற்றிய அனைத்துச் செய்திகளையும் திருக்குறளில் காணமுடியாது; ஆங்காங்கே ஒரு சில பறவைகளையும், அவற்றின்

இயல்புகளையும் மட்டுமே காணலாம். அவை, அறிஞர்களின் ஒப்பீட்டில் கருவாகியுள்ளன.

6.4.1 அன்னம்

அன்னம் என்னும் பறவையைப் பற்றிப் பிற இலக்கியக் கருத்துகளுடன் திருக்குறளையும் ஒப்பிட்டுள்ளனர்.

1953-இல் தி.நா. அறிவுஒளி "தமிழ் நூல்களில் புள்ளினம்" என்னும் கட்டுரையில், அன்னத்தின் இயல்புத் தன்மையை முதன்மைப்படுத்தும் வகையில்,

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும்" (குறள்.1120)

என்னும் திருக்குறளோடு,

"அன்னச் சேவல்" (புறம்.67:1)

"விளங்குமென் தூவிச் செங்கால் அன்னம்" (நற்.356:2)

என்ற சங்க இலக்கியப்பாக்களை ஒப்பிடுகிறார். (204, ப.358) அன்னத்தின் உடல் மென்மைத் தன்மையுடையது என்னும் அறிவியல் நோக்கை மேற்கண்ட ஆய்வு வெளிப்படுத்துகின்றது.

6.4.2 காகம்

காகம் என்னும் பறவையினைப் பற்றி 1955-இல் பு. அமிர்தலிங்கனார் "வள்ளுவர் கண்ட உயிரினங்கள்" என்னும் நூலில் குறிப்பிடுகிறார். அவர் காக்கை இயல்பாக ஒலி செய்து உண்ணும் இயல்புடையது. இதனைத் தவறாக, விருந்துடன் தொடர்புபடுத்தி,

"விருந்து வரக்கரைந்த காக்கை" (குறுந்.210:6)

என்னும் குறுந்தொகைச் செய்தியும்,

"காக்கைக் கரவா கரைந்துண்ணும்" (குறள்.527)

என்னும் திருக்குறள் செய்தியும் கூறுகின்றன என்கிறார். மேற்கண்ட சான்றின் வழிக் காக்கையின் ஒலிக்கும் தன்மையான இயற்கைப் பண்பினை பூ. அமிர்தலிங்கனார் கூறுவதைக் காணமுடிகிறது.

### 6.4.3 காகமும் கூகையும்

விலங்குகளில் சிலவற்றிற்குச் சில நேரங்களில் மட்டுமே வினை செய்யமுடியும். சில நேரங்களில் ஒன்றுமே செய்ய இயலாத நிலைக்குள்ளாகி விடும். இத்தகைய உடலமைப்பைக் காக்கையும், கூகையும் பெற்றிருக்கின்றன என்பதைப் பூ. அமிர்தலிங்கனார் தம் ஆய்வில் சுட்டியுள்ளார். இதற்கு,

"பகல்வெல்லும் கூகையைக் காக்கை" (குறள்.481)

என்னும் குறள் கருத்தையும்,

"தடத்திடைக் காக்கை, ஒன்றே ஆயிரம்கோடி கூகை" (சீவக.1927)

என்னும் அடியையும் ஒப்பிட்டுக் காட்டுகின்றார். மேற்கண்ட ஆய்விலிருந்து, காக்கைப் பகற்பொழுதில் வலிமையும், கூகை பகற்பொழுதில் வலிமை குறைந்தும் காணப்படுவதையும் அறிய முடிகின்றது. பறவைகளின் உடல் தன்மைப் பற்றிய இச்செய்தி அறிவியல் நோக்குடையது என்பதையும் காணமுடிகிறது.

## 6.5 தாவரவியல் விளக்கம்

மனிதன் தோன்றிய காலம் முதல் இயற்கையோடு இயைபுடையவனாகவே இருந்துவருகின்றான். இயற்கையிலுள்ள தாவரங்களோடு அவனுக்குள்ள தொடர்பு பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக ஏற்பட்டுள்ளது. தாவரவியல் என்பதை ஓர் அறிவியல் துறையாக முதன்முதல் தெளிவாக உருவாக்கினோர் கிரேக்க மக்களே ஆவர். அக்காலந்தொட்டுப் புதிய புதிய அறிவானது, மேலும், மேலும் உண்டாகி, வளர்ந்து, பெருகு இந்த இயலானது தனிப்பட்ட ஒரு அறிவியலாக அமையப் பெற்றுள்ளது.

தாவரவியலின் ஒரு சில அடிப்படைச் சிந்தனைகள் திருக்குறளில் உள்ளதைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டு 1980-களுக்குப் பிறகே ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

### 6.5.1 பசும்புல்

தாவரங்களில் முதல் முதலில் தோன்றிய தாவரம் "பசும்புல்" என்பர். இதனைப் பற்றி 1981-இல் இரா. குமாரசாமி "திருக்குறள் மூலிகைகள்" என்னும் நூலில் கூறுகிறார். அவர்,

> "ஒளிச்சேர்க்கை வழி உணவு சேர்க்கும் வள்ளுவரின் முதல் மூலிகை பசும்புல்லே. இவ்வழியில் உலகில் தோன்றும் முதலுணவு புல்லுணவாகும். உயிர்களுக்கு இயற்கை தரும் முதலுணவு புல்லே" (59, ப.70)

என்கிறார், இக்கருத்தை,

"கல்வினுள் தேரை கருப்பை உயிர்க்கெல்லாம்
புல்லுணவூட்டி புரந்திடும் ஈசன்"

என்று பெயர் தெரியாப் பழந்தமிழ்ப் பாடலும்,

"பசும்புல் தலைகாண்பது அரிது" (குறள்.16)

என்று திருக்குறளும் கூறுகிறது என்கிறார். மேற்கண்ட ஆய்வில் தாவரங்களின் தோற்றம் பற்றிய தாவரவியல் சிந்தனையைக் காணமுடிகின்றது.

6.5.2 அனிச்சம்

தாவரங்களில் அனிச்சமும் ஒன்று. இதனை,

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம் (குறள்.1120)

என்று திருக்குறள் கூறுகிறது. இது சிறுசெடியாக இருந்திருக்க வேண்டும் என்பதற்கு,

"அரிநீர் அவிழ்நிலம் அல்லி அனிச்சம்" (கலி. மரு.26:1)

என்னும் பாடலைச் சான்று தருகிறார். மேலும், அனிச்சம் தாமரை, அல்லி போன்ற சிறுநீர்ச் செடிகளுடன் வளர்வதைப் போன்று சிறுசெடியாக இருக்க வேண்டும் (59, பக்.16-17) என்கிறார்.

மேற்கண்ட ஆய்வின் வழியே அனிச்சம் சிறுசெடி வகையைச் சார்ந்தது என்னும் தாவரவியலின் செடி, கொடி இனத்தைப் பற்றிய சிந்தனையை உய்த்துணர முடிகிறது. இது, திருக்குறள் கருத்திற்கு - அனிச்சம் என்பது என்ன என்பதற்கு - ஒரு வெளிச்சம் தரும் ஆய்வாக அமைந்துள்ளது.

6.5.3 மலரின் பருவம்

தாவரத்தின் வளர்நிலையில் பயன்படும் பொருள்களில் ஒன்று மலர். இம்மலர், வளர்ந்த நிலையைத் திருக்குறளும் சங்க இலக்கியமும் குறிப்பிட்டுள்ளன. இதனைப் பற்றி 1981-இல் முனைவர் கு. மோகனராசு "திருக்குறளில் மரபுகள்" என்னும் நூலில்,

> "திருக்குறளிலும், சங்க இலக்கியத்திலும் பூக்கள் எவ்வாறு அணுகப்பட்டுள்ளன என்பதை அறிந்தால்தான் திருக்குறளில் தாவரங்களின் மரபு பற்றிய கருத்து உருவாகும்" (177, ப.184)

என்கிறார். இதற்கு,

> "காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
> மாலை மலரும்இந் நோய்" (குறள்.1277)

என்பதனை,

> "மாரிமொக்குள் புடைக்கும்" (ஐங்.275:3)
>
> "மொக்குள் அன்ன" (புறம்.333:2)
>
> "முகைத்தன்ன" (அகம்.140

என்று சங்க இலக்கியப்பாக்கள் கூறுகின்றன என்று ஒப்பிடுகிறார். முனைவர் கு. மோகனராசு திருக்குறளில் மரபு நிலை என்னும் இவ் ஆய்வில் தாவரவியல் சிந்தனையைக் கூறியுள்ளதைக் காணமுடிகிறது.

6.5.4 பழம்

தாவரவியலில் பயன்தரக் கூடிய பொருள்களில் பழமும் ஒன்று. இதனைத் திருக்குறளிலும் பிற இலக்கியங்களிலும் காணலாம்.

1981-இல் கு. மதிவாணன் "குறளில் உயிரியல் கூறுகள்" என்னும் கட்டுரையில், "பழம்" தொடர்பான கருத்துகளைக் கூறுகிறார். (161, ப. 320)

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்" (குறள். 1120)

என்று திருக்குறளும்,

"நாய்பெற்ற தெங்கம் பழம்" (பழமொழி 151:4)

என்று பழமொழியும் கூறுவதைக் கொண்டு, முதிர்ந்த பழத்திற்குத் தேங்காயையும், உலர்ந்த வெடிக்கும் பழத்திற்கு நெருஞ்சியையும் சான்றுகளாகத் தருகிறார். மேற்கண்ட ஆய்விலிருந்து பழம் பற்றிய தாவரவியல் சிந்தனையைக் காண முடிகின்றது.

## 6.6 தொழில் விளக்கம்

ஒரு நாட்டின் வாழ்க்கைத்தரம் அதன் தொழில் வளர்ச்சியைப் பொறுத்தது. பலவகைத் தொழில்களும் வளர்ச்சியடைந்து மிகுந்த பொருள்களை உற்பத்திச் செய்யும் நாட்டில் வாழும் மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்ததாகவும் இருக்கிறது. இயற்கைவளம், கனிவளம், முதலீடு ஆகியவை தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாதன. திருக்குறளைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்ட அறிஞர்கள் தொழிலியல் சிந்தனை அடிப்படையிலும் ஓரளவு ஆய்வு மேற்கொண்டுள்ளனர்.

### 6.6.1 உழவுத் தொழில்

எல்லாத் தொழில்களுக்கும் உழவுத் தொழில் முதன்மையானதாகும். மக்களுக்கும், கால்நடைகட்கும் அடிப்படையாகத் தேவைப்படும் உணவுப் பொருள்கள் உழவின் வழிக் கிடைக்கின்றன. உழவின்றி வாழ்க்கை நடைபெறாது.

அதனால் உழவு இன்றியமையாத முதல் தொழில் எனும் சிறப்படைகிறது. திருக்குறள் ஒப்பீட்டாய்வில் உழவியல் சிந்தனைகள் 1950-களுக்குப் பிறகே வெளிவருகின்றன.

6.6.2 உழவு

உழவுத் தொழிலின் வளர்ச்சியைப் பற்றியும், அதன் உயர்வைப் பற்றியும் திருக்குறளின் உழவு அதிகாரத்தில் நன்கு அறியமுடிகிறது.

1966-இல் சி. பழனியப்பன் "பண்பாட்டைக் காட்டும் சொற்கள்" என்னும் கட்டுரையில்,

> "பண்டைத் தமிழ் மக்களின் பண்பாட்டை, அத்தமிழ் மக்கள் சொற்களின் வாயிலாகக் காணலாம்" (246, ப.10)

என்கிறார்.

> "சுழன்றும் ஏர்பின்னது உலகம்" (குறள்.1031)

என்னும் திருக்குறளில் ஏரின் சிறப்பையும்,

> "வில்லேர் வாழ்க்கைச் சீறூர், மதவலி" (புறம்.331:2)

என்னும் புறநானூற்றில் வில்வீரர்களை 'வில்ஏர்' என உழவுத் தொழிலினை அடிப்படையாகக் கொண்டு பெயரிட்டிருப்பதை ஒப்பிடுகிறார்.
சி. பழனியப்பன் "உழவுத்தொழிலின் சொல்லாட்சி"யைப் பற்றியும், அது மக்களிடையே பெற்றிருந்த செல்வாக்கையும் குறிப்பிடும் நோக்கில் ஆய்வை மேற்கொண்டுள்ளார்.

தொடர்ந்து 1974-இல் மு. சண்முகம்பிள்ளை "திருக்குறளும் வேளாண்மையும்" என்னும் கட்டுரையில், 'பிற தொழில் செய்வோர்களையும் உழவர் என்னும் சொல்லால் குறிப்பிட்டுள்ளதைக் கூறுகிறார். (77, ப.15).

புலமையாளரைப் "புலன்நா உழவர்" (கலி.68:4) என்றும், கடல் நீரிலிருந்து உப்பு விளைவிப்போரை, உழாஅர் உழவர் (நற்.331:1) என்றும், சோலையில் உழைத்து உண்ணும் உழவரை, "தண்டலை உழவர்" (நற்.97:9) என்றும், சங்க இலக்கியங்கள் குறிப்பிடுவதைக் கூறித் திருக்குறளுடன் ஒப்பிடுகிறார். மேலும், "உழந்தும் உழவே தலை" (குறள்.1031) என்னும் திருக்குறள் வாக்கு வேளாண்மையின் உயர்வுச் சிறப்பைக் காட்டுகின்றது என்கிறார்.

## 6.6.3 உழவும் மழையும்

உழவுத் தொழிலுக்கு நீர் இன்றியமையாதது. எனவே, மழையுடன் உழவுக்கிருந்த ஒற்றுமைக் கருத்துகளைத் திருக்குறளும் பிற இலக்கியங்களும் பதிவு செய்திருக்கின்றன.

1971-இல் தா.வே. வீராசாமி "திருக்குறள் காட்டும் தொழில் முயற்சி" என்னும் கட்டுரையில்,

> "இருபதாம் நூற்றாண்டில் தொழில் என்பது பற்றி நாம் கருதும் கொள்கையை வள்ளுவர் காலத்தில் காணவியலாது. அவர் கண்ட கொள்கைகளைச் சங்ககாலத்துக் கொள்கையின் வளர்ச்சியாகத்தான் கொள்ள வேண்டும்" (184, ப.5)

என்கிறார். சங்க காலத்தில் மழையுடன் மாந்தர் செய்யும் தொழில் இணைந்திருப்பதை,

"மழைதொழி லுதவ மாதிரங் கொழுக்க" (மதுரை. 10)

என்று கூற, திருக்குறளும்,

"ஏரின் உழாஅர் உழவர்" (குறள். 14)

என்கிறது என்று ஒப்பிடுகிறார். இவர் திருக்குறளின் உழவுத் தொழில் சங்க இலக்கியத்தின் வளர்ச்சி என்னும் நோக்கில் ஒப்பிடுவதைக் காணலாம்.

6.6.4 விதைத்தல்

உழவுத் தொழிலுள் ஒரு பகுதி விதைத்தல். விதைத்தால்தான் பயிரோ, செடி, கொடி, மரமோ வளரும். எனவே, 'விதை' இன்றியமையாதது.

1971-இல் இல.செ. கந்தசாமி "திருக்குறளும் தொழில் வளர்ச்சியும்" என்னும் கட்டுரையில், விதைத்தலைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அவர், விதைத்தலைப் பற்றி,

"வீழ்குடி உழவன் வித்துண் டாஅங்" (புறம். 230:13)

என்று புறநானூறு கூற,

"உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து" (குறள். 24)

என்று குறளும் கூறுகிறது என்கிறார். உழவுத் தொழிலில் விதையின் சிறப்பைக் கூறத் திருக்குறளையும் புறநானூற்றையும் ஒப்பிட்டு இல.செ. கந்தசாமி தம் ஆய்வில் குறிப்பிடுகிறார்.

## 6.7 பிற தொழில்கள்

உழவுத் தொழில் தவிரப் பிற தொழில்களையும் திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். வாணிபம், மருத்துவத் தொழில், ஆசிரியத்தொழில் என வரும் பிற தொழில்களைத் திருக்குறளும் சங்க இலக்கியங்களும், காப்பியங்களும் பதிவு செய்துள்ளன எனும் போக்கில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன.

### 6.7.1 வாணிபம்

பண்டைக் காலத்தில் மக்களின் பொருளாதார வாழ்வு எளியது. அப்பொழுது மக்களின் தேவைகள் மிகச்சில. எனவே, உற்பத்தி, வாணிகம் போன்ற செயல்கள் சிறிய அளவில் எளிய முறையில் நடைபெற்று வந்தன.

1975-இல் காமாட்சி சீனிவாசன் "குறள்கூறும் சமுதாயம்" என்னும் நூலில், "தமிழகத்தில் வாணிகம் நடைபெற்றிருந்ததைக் குறளும் சிலம்பும் கூறுகின்றன" என்கிறார். மேலும்,

> "கலத்தினும் காலினும் தருவனர் ஈட்டக்
> குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்" (சிலம்பு.2:7-8)

என்று சிலப்பதிகாரமும்,

> "வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
> பிறவும் தமபோல் செயின்" (குறள்.120)

என்று திருக்குறளும் கூறுவதை ஒப்பிடுகிறார். வாணிகத்தில் ஏமாற்றுதலின்றிப் பிறரும் தம்மைப் போன்றவர்களே எனக் கருதும் நற்குணத்தராய் வணிகர்கள் வாழ்ந்தார்கள் என்ற சான்று மேற்கண்ட ஆய்வின் வழியே காணமுடிகிறது.

### 6.7.2 மருத்துவத் தொழில்

மருத்துவத் தொழில் செய்து வாழ்ந்தவர்களைச் சிலப்பதிகாரமும் திருக்குறளும் கூறுகின்றன என்று காமாட்சி சீனிவாசன் ஒப்பிட்டுள்ளார்.

"உற்றவன் தீர்ப்பான்" (குறள். 950)

என்று குறளும், பட்டினப்பாக்கத்தில்,

"ஆயுள் வேதரும்" (சிலம்பு.5:44)

என்று சிலப்பதிகாரமும் கூறுவதைக் கொண்டு மருத்துவத்தொழில் நடைபெற்றிருந்தது எனக் காமாட்சி சீனிவாசன் ஆய்வு மேற்கொண்டுள்ளார். (56, பப.30-65)

### 6.00 முடிவுரை

1. அறிவியல் தொடர்பான திருக்குறள் ஒப்பீட்டாய்வுகள் 1950-களுக்குப் பிறகே வெளிவந்துள்ளன. முதல்முதலில் 1955-இல் பு. அமிர்தலிங்கனார் அவர்களே உயிரியல் தொடர்பான சிந்தனைகளை விரிவாக வெளியிட்டுள்ளார்.

2. வேதியியல் தொடர்பான ஒப்பீட்டாய்வுகள் பெருமளவு வரவில்லை. 1977-இல் ந.வீ. செயராமன் ஒருவரே வேதியியல் சிந்தனைப் பற்றி எழுதியுள்ளார்.

3. 1953–இல் தி.நா. அறிவு ஒளி, 1955–இல் பூ. அமிர்தலிங்கனார், 1970–இல் ந.சொக்கலிங்கம் போன்றோர் விலங்குகளின் உடலியல் சிந்தனைகள் தொடர்பான ஆய்வுகளை மேற்கொண்டுள்ளனர்.

4. கால்நடை வளம் பற்றி 1972–இல் தேவநேயர் எழுதியுள்ளார். பிற நாட்டு விலங்கான கவரிமாவைப் பற்றி பி.எல். சாமி 1970–இல் ஆய்வு மேற்கொண்டுள்ளார். இது திருக்குறளுக்குப் புதிய ஒளி தந்துள்ளது.

5. தாவரவியல் சிந்தனைப் பற்றி 1980–களுக்குப் பிறகே திருக்குறள் ஒப்பீட்டாய்வுகள் வந்துள்ளன. தாவரத்தின் தோற்றம், அனிச்சச் செடியின் வகையைப் பற்றி 1981–இல் தி.நா. அறிவு ஒளி ஆய்வு மேற்கொண்டுள்ளார்.

6. திருக்குறளில் மரபு நிலையை மலரின் பருவ வளர்ச்சிகொண்டு 1981–இல் முனைவர் கு. மோகனராசு ஒப்பிட்டுள்ளார். கு. மதிவாணன் பழம் பற்றிய சிந்தனை நோக்கிலான ஆய்வை மேற்கொண்டுள்ளார்.

7. உழவுத் தொழிலின் சிறப்பையும், அது மக்களிடையே பெற்றிருந்த செல்வாக்கைப் பற்றியும் 1966–இல் சி. பழனியப்பன் ஆய்வு மேற்கொண்டுள்ளார்.

8. 1974–இல் மு. சண்முகம்பிள்ளை பிற தொழிலாளர்களும் 'உழவர்' என்னும் சொல்லால் வழங்கப்பட்டுள்ளதைக் கொண்டு அக்காலத்தில் உழவுத் தொழிலுக்கிருந்த உயர்வினை அறியும் ஆய்வு நோக்கில் திருக்குறளை ஒப்பிட்டுள்ளார்.

9. தா. வே. வீராசாமி உழவும் மழையும் இணைந்துள்ள செய்தியிணையும், இல.செ. கந்தசாமி விதைத்தல் பற்றியும், 1970-ஆம் ஆண்டுகளில் ஆய்வு மேற்கொண்டுள்ளனர்.

10. 1975-களில் காமாட்சி சீநிவாசன் வாணிகத்தில் நடுவுநிலைபற்றியும் மருத்துவப் பணி பற்றியும், திருக்குறள் ஒப்பீட்டில் ஆய்வு மேற்கொண்டுள்ளார்.

***

## 7.0 முன்னுரை

ஒரு பொருளைத் தனியாக அறிவதைக் காட்டிலும் பிற பொருள்களுடன் ஒத்தும் உறழ்ந்தும் அறிகையில் அதனியல்புகள் மிகத்தெளிவாகும். தமிழகத்தில் தற்காலப் பகுதியில் மொழித்துறையில் கால்டுவெல் தொடங்கி வைத்த இவ்வொப்பாய்வு தமிழ் இலக்கியத்துறையிலும் ஊடுருவியது. திருக்குறள் ஒப்பீட்டு ஆய்வில் பிற இலக்கியங்களோடு ஒப்பிட்ட ஆய்வின் நோக்கும் போக்கும் இங்குத் தெளிவு செய்யப்படுகின்றன. அவற்றை, 1. திருக்குறளில் தாக்கம், 2. திருக்குறளின் தாக்கம், 3. ஒப்புமைக் காண்பது, 4. ஒற்றுமையும் வேற்றுமையும், 5. வளர்ச்சி நிலை என ஐந்தாகப் பிரிக்கலாம்.

## 7.1 திருக்குறளில் தாக்கம்

திருவள்ளுவர், திருக்குறளை எழுதுவதற்கு முன்னர், முற்கால நூல்களையும்-சமகால நூல்களையும் கருத்தில் கொண்டு எழுதியிருக்க வேண்டும். மேலும், இவர் நூலோர், என்ப, தொகுத்தவற்றுள் என்ற சொற்களைக் குறட்பாக்களில் கூறியிருப்பதையும் காணலாம். இக்கருத்தை முதன்மைப்படுத்தித் திருக்குறளில் பிற இலக்கியத்தின் தாக்கம் காணப்படுகிறது என ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

### 7.1.1 தமிழ் இலக்கியம்

தமிழ் இலக்கியத்தில் பழந்தமிழ் இலக்கியங்களுள் ஒன்றான சங்க இலக்கியத்தின் தாக்கம் மட்டுமே திருக்குறளில் காணப்படுகிறது என்று 1970-களில் ஆய்வுகள் வந்துள்ளன. குறிப்பாக 1970-இல்

மு. வை. அரவிந்தன் "திருக்குறளும் சங்க இலக்கியங்களும்" என்னும் நூலில்,

> "திருவள்ளுவர் கற்க வேண்டிய நூல்களைக் கசடறக்
> கற்றவர்; நுண்மாண் நுழைபுலம் உடையவர்;
> மதிநுட்பம் நூலோடு வாய்க்கப் பெற்றவர்.
> திருவள்ளுவர் சங்க இலக்கியங்களைக் கற்றுத்
> தேர்ந்துள்ளார்" (7, ப.14)

என்கிறார். மேலும், திருவள்ளுவர் சங்க நூல்களைக் கற்று நல்லன தீயனவறிந்து, தக்கதை ஏற்றும் தகாதனவற்றை எதிர்த்தும் கூறியுள்ளார் என்று குறிப்பிடும் மு. வை. அரவிந்தன்,

> "பெருந்தோட் குறுமகள் அல்லது
> மருந்து பிறிதில்லை யானுற்ற நோய்க்கே" (குறுந். 80)

என்னும் பாடலின் கருத்தினை,

> "பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
> தன்நோய்க்குத் தானே மருந்து" (குறள். 1102)

என்னும் குறள் எடுத்தாளுவதாகச் சான்று தருகிறார். மேற்கண்ட ஆய்வு ஒத்த கருத்துகளைக் கொண்டு, திருக்குறள் சங்க இலக்கியப் பாடலின் கருத்தினை எடுத்தாளுவதாகக் கூறபட்டிருப்பதைக் காணலாம்.

தொடர்ந்து 1983-இல் முனைவர் கு. மோகனராசு "திருவள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப்பொதுமையியலும்" என்னும் நூலில்,

> "சங்க நூல்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய பதினெட்டு நூல்களையும் திருக்குறளோடு ஒப்பிட்டுக் காணும்பொழுது கருத்தளவிலும், தொடரளவிலும் பல்வேறு ஒப்புமைகள் காணப் படுகின்றன. பெரும்பாலோர் கருதுவது போன்று சங்கத் தொகை நூல்களின் தாக்கந்தான் திருக்குறளில் ஏற்பட்டுள்ளது எனக்கொள்ளின், திருவள்ளுவர் சங்கத்தொகை நூற்பாடல்களை நன்கு அறிந்திருந்தவர் என்பது போதரும்" (178, ப.254)

என்கிறார். இவர் சங்க இலக்கியத்தைத் திருக்குறள் பின்பற்றியுள்ளது என்ற கருத்தினைப் பல்வேறு சான்றோர்கள் குறிப்பிடுவதையும், கருத்து ஒப்புமை, தொடர் ஒப்புமைகளைக் கொண்டும் திருக்குறளில் சங்க இலக்கியத்தின் தாக்கம் உள்ளது என்று முடிவு தருகிறார். மேற்கண்ட முடிவையே தமிழ் ஆராய்ச்சியாளர்கள் பலரும் கூறிச் சென்றுள்ளனர்.

### 7.1.2 வடமொழி இலக்கியம்

வடமொழி இலக்கியம் என்பது சமற்கிருத இலக்கியங்களைக் குறிக்கும். இவற்றை வேதகால இலக்கியம், செம்மொழிக்கால இலக்கியம் என இரண்டாகப் பிரிப்பர். இவற்றுள் வேதகால இலக்கியத்தின் தாக்கம் திருக்குறளில் காணப்படுகிறது என்று ஆய்வுகள் வந்துள்ளன.

7.1.2.1 வேதகால இலக்கியம்

1952-இல் எஸ். வையாபுரிப்பிள்ளை "இலக்கிய உதயம்" என்னும் நூலில், மடல் பற்றிய செய்தி வடநூலிலிருந்தே திருவள்ளுவர் எழுதியுள்ளார் என்கிறார் (191, ப.26). அவர் சில சான்றுகளைத் தருகிறார். அவை பின்வருமாறு;

> "காதலால் மீறப்பட்ட தலைவி, தலைவன் உருவப்படத்தைக் கிழியில் எழுதி அதன் இதயத்தின் மீது கொழுந்துவிட்டெரியும் அம்பு நுனியை எறிந்து அதர்வணவேதம் 6-ஆம் காண்டம் 130, 138-ஆவது சூத்திரங்களைக் கொண்டு ஓதுவாள்" என்று பெண் மடலேறும் செய்தியினைக் கூறுகிறார்.

ஆனால், திருக்குறளில் மடல் ஏறும் வழக்கம் பெண்பாலார்க்குக் கிடையாது என்பதை,

"மடலேறாப் பெண்ணின் பெருந்தக்கதில்" (குறள்.1137)

என்னும் பாடலடி குறிப்பிடுகிறது. இக்கருத்துகளை ஒப்புமைப்படுத்தும் வையாபுரியார் வடநூலின் தாக்கம் திருக்குறளில் காணப்படுகிறது என்று கூற முற்படுகிறார். தமிழ் இலக்கியங்களிலும் மடல் பற்றிய சிந்தனைகள் இருப்பதால் இவர் தம் கூற்று, அத்துணை ஏற்றுக் கொள்ளுமாறு இல்லை எனலாம்.

7.1.2.2 பாரதம்

திருக்குறளில் பாரத இதிகாசங்களின் தாக்கம் இருந்திருக்க வேண்டும் என்று 1980-களில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

1980-இல் நா. இராமலிங்கம் "திருக்குறளும் தமிழ்பாரத நூல்களும்" என்னும் நூலில்,

> "பாரத நிகழ்ச்சிகளில் தமிழ்நாட்டுத் தொடர்புகள் காணப்படுதலாலும், பாரதக் கதைக் குறிப்புகள் சங்க இலக்கியங்களிலும் காப்பியங்களிலும் இடம்பெறுதலாலும் தமிழ்ச்சான்றோரும் பொதுமாந்தரும் இவ்விதிகாசத்தினையும், இதில் இயம்பப் பெற்றுள்ள நீதிகளையும் நன்கு அறிந்தவர்கள் என்பது புலனாகும். ஆதலின் வள்ளுவர்கூட, தம் நீதி நூலினை வகுத்து வழங்குவதற்கு இவ்விதிகாசப் புலமை ஓரளவேனும் பயன்பட்டிருத்தல் கூடும்" (38, ப.2)

என்கிறார். எனினும் பாரத கருத்துகளிலிருந்து சான்றுகள் தந்து திருக்குறளில் தாக்கம் உள்ளதாகக் குறிப்பிடவில்லை.

7.1.2.3 மனு

திருக்குறளில் மனுசாத்திரத்தின் கருத்துகள் தாக்கம் பெற்றுள்ளன என்று 1955-களுக்குப் பிறகு ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

1958-இல் எஸ். வையாபுரி பிள்ளை "இலக்கிய விளக்கம்" என்னும் நூலில்,

> "திருக்குறளில் பல அதிகாரங்கள் வடமொழி நூல்களிலுள்ள பொருள்களையே அமைத்துக்கொண்டுள்ளன. பல குறள்கள் மனுநூற் சுலோகங்களின் மொழிபெயர்ப்பாக அமைந்துள்ளன" (191, ப.97)

என்கிறார். இவர்,

> "சிறைகாக்கும் காப்பு எவன்செய்யும் மகளிர்
> நிறைகாக்கும் காப்பே தலை" (குறள்.57)

என்னும் குறள் கருத்து,

> "சொற்படி ஒழுகும் ஆப்தர்களால் வீட்டில் நன்கு காக்கப்பட்ட பெண்டிர் காப்புடையராகார். தம்மைத்தாமே காத்துக் கொள்ளும் பெண்டிரே நன்கு காக்கப்பட்டவராயுள்ளார்கள்"
> (மனு. 9, 12 சுலோகம்)

என்ற மனுஸ்மிருதியின் சுலோகத்தை உள்ளடக்கியதாக உள்ளது என்கிறார். தொடர்ந்து, கே.கே.ஆர். சாஸ்திரி, (மனுவும் திருவள்ளுவரும், 1968), பி.ஆர்.ஆர். தீட்சிதர் (தமிழர் வரலாறு 2, 1989) போன்றோர் ஒத்த கருத்துகளைக் கொண்டு திருக்குறளைப் பின்னதாகவும், வடநூல்களை முன்னதாகவும் கூறும் நோக்கில் ஆய்வு மேற்கொண்டு முடிவு தருகின்றனர்.

இவை பற்றி மாறுபட்ட கருத்துகளும் உள்ளன. எனவே, இவ்வாய்வு மேலும் சிந்திக்கத்தக்கதாகும்.

7.1.2.4 பாலிமொழி

சமற்கிருதத்திலிருந்து மாற்றம் பெற்ற மொழிகளுள் ஒன்று பாலிமொழி. இம்மொழியில் தோன்றிய இலக்கியம் தம்மபதம். இதன் கருத்துத் தாக்கம் திருக்குறளில் காணப்படுகிறது என்று 1976-இல் ஆய்வுகள் வந்துள்ளன.

1976-இல் எஸ். ஜெயலட்சுமி "திருக்குறளும் தம்மபதமும்" என்னும் நூலில்,

> "தம்மபதத்திற்குக் காலத்தால் பிற்பட்டது வான்மறை வள்ளுவம். எனவே, பௌத்த தருமநூலின் தாக்கம், திருக்குறளில் காணப்படும் என்பதில் ஐயம் இல்லை. இரண்டு நூல்களும் அறநூல்கள் என்று போற்றப்படும்" (195, ப.7)

என்கிறார். இவர்,

> "ஒழுக்க இயல்கள் மனோநிலையைப் பின்பற்றியவை. மனச்செயலால் நிகழ்பவை. மனோமயம் ஆனவை. தீய நினைப்போடு ஒருவன் ஒன்று பேசினும், செய்யினும் இழுப்பவன் அடியைத் தொடரும் சக்கரம் போல அவனைத்துன்பம் தொடரும்" (இரட்டைச் செய்யுள்.1)

என்பது,

"தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடிஉறைந் தற்று" (குறள். 208)

என்னும் குறளில் உள்ளது என ஒப்பிடுகிறார். இவர் தம்மபதம் முற்பட்டதாகவும் திருக்குறள் பிற்பட்டதாகவும் கொண்டு முடிவு தருகிறார்.

## 7.2 திருக்குறளின் தாக்கம்

திருக்குறள் வடிவ அமைப்பு, சொல்லாட்சி, கருத்தமைவு ஆகியவற்றில் மயங்கிய அறிஞர்கள் - புலவர்கள் பலர். இச் சான்றோர்கள் தாம் இயற்றிய படைப்புகளில் திருக்குறள் கருத்து, அடி, தொடர்களை மாற்றியும் - மாற்றாமலும் எடுத்தாண்டுள்ளனர். அவை, ஒப்பீட்டாய்வின் நோக்கினை ஓரளவு புலப்படுத்துகின்றன.

### 7.2.1 தமிழ் இலக்கியங்களில்

தமிழ் இலக்கியங்களில் திருக்குறளின் தாக்கம் காணப்படுகிறது என்று 1906-இல் இருந்தே ஒப்பாய்வுகள் தொடங்கப்பட்டுள்ளன.

1906-இல் சி. கணேசய்யர் "வள்ளுவரும் கம்பரும்" என்னும் கட்டுரையில்,

"திருவள்ளுவர் அருளிச் செய்த திருக்குறளில் சிற்சில
அதிகாரங்களிலும் சிற்சில குறள்களிலும் உள்ள பொருள்களை

அமைத்துக் கம்பர் தாம்பாடிய இராமாவதாரத்துச்
சிற்சில இடங்களில் கூறியிருக்கின்றார்" (215, ப.205)

என்கிறார். இவர்,

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்" (குறள். 972)

என்னும் குறளின் கருத்தினை,

"........... குலத்தியாவர்க்கும்
வினையினால் வரும் மேன்மையும் கீழ்மையும்"
(கம்ப. வாலி. 115)

என்று கம்பர் எடுத்தாளுவதைச் சான்று காட்டுகிறார். தமிழ் இலக்கியத்தில் திருக்குறளின் தாக்கம் எனத் தொடங்கும் முதல் ஆய்வு இதுவே ஆகும். தொடர்ந்து சங்க இலக்கியம், காப்பியங்கள், பக்தி இலக்கியம், பெருங்கதை, பாரதம், திருவிளையாடல் புராணம், தேம்பாவணி, நால்வர் நான்மணிமாலை, பிரபுலிங்கலீலை, அறப்பளிச்சுர சதகம், தணிகை புராணம், வள்ளலார் பாடல்கள், மனோன்மணீயம், நீதி நூல்பாடல்கள், பாரதியார் கவிதைகள், பாரதிதாசன் கவிதைகள் போன்ற தமிழ் இலக்கியங்களில் திருக்குறளின் தாக்கம் காணப்படுகிறது என்று ஒப்பீட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

## 7.3 ஒப்புமைக் காண்பது

திருக்குறளைப் பிற இலக்கியங்களோடு ஒப்பிட்டுக்கூறும் பொழுது ஒத்தக் கருத்துகளை மட்டுமே சுட்டிக்காட்டுவர். மொழியால், இனத்தால், கருத்தால், நோக்கத்தால் மாறுபட்ட இலக்கியங்களைக் கூடத் திருக்குறளுடன் ஒப்பிட்டு ஒத்தக் கருத்துகளைக் குறிப்பிடும் ஒப்பாய்வுப் போக்கில் ஆய்வுகள் வந்துள்ளன.

### 7.3.1 தமிழ் இலக்கியங்கள்

தமிழ் இலக்கியங்களில் பதினெண் கீழ்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய திணைமாலை-150 என்னும் நூலுடன் திருக்குறளை ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1966-ஆம் ஆண்டு தி.நா. அறிவு ஒளி, "திறனாய்வு திணைமாலை-150" என்னும் கட்டுரையில்,

> "பண்டைப் பண்பாட்டை விளக்குவதிலும், அந்நாளைய
> வாழ்வியல் வரலாற்றையும், தமிழுணர்வைப்
> புலப்படுத்துவதிலும், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு,
> குறள் ஆகியவற்றோடு ஓரிணையாக வைத்துக்
> கருதுவதற்குரியது திணைமாலை நூற்றைம்பது"
> (204அ, ப.33)

என்கிறார். அவர் ஒப்பிட்டுக் கூறுவதில் எடுத்தாண்ட சான்றுகள் சில.

அவை பின்வருமாறு,

"பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து" (குறள். 1102)

என வரும் தலைவிக் கூற்றை, கணிமேதாவியார் திணைமாலை-150-இல்,

"..............வண்கயம்
போலும் நின்மார்பு புளிவேட்கைத்து ஒன்றியவள்
மாலும் மாறாநோய் மருந்து" (திணைமாலை.142)

எனத் தலைவன் கூற்றாகக் கூறுகின்றார். கருத்தொப்புமை வைத்து இரண்டையும் ஒப்பிடுகிறார். இவர் திருக்குறளுக்கு இணையாக திணைமாலை-150 அமைந்துள்ளது என்னும் நோக்கில் ஒப்பிடுவதை மேற்கண்ட சான்றின்வழி அறியமுடிகிறது.

### 7.3.2 இந்திய இலக்கியம்

இந்திய மொழியிலுள்ள இலக்கியங்கள் சிலவற்றுடன் திருக்குறளை ஒப்பிட்டு ஒற்றுமைக் கருத்துகளைக் காணும் முயற்சி சில ஆய்வுகளின் வழி வெளிவந்துள்ளது.

#### 7.3.2.1 வடமொழிகளுடன்

வடமொழிகளிலுள்ள இலக்கியங்களுடன் திருக்குறளை ஒப்பிட்டு 1960-களுக்குப் பிறகு ஒத்த கருத்துகளைக் கூறும் ஆய்வுகள் வந்துள்ளன.

7.3.2.1.1 கீதை

கீதை என்ற பெயர் மகாபாரதத்தில் போர்முனையில் கிருட்டிணனுக்கும் அர்ச்சுனனுக்கும் நடந்த உரையாடலில் உருவான பகவத் கீதையைக் குறிக்கும்.

1969-இல் கெம்பு ஆறுமுகம் "குறளும் கீதையும்" என்னும் நூலில்,

> "மொழியால் நிறத்தால், இனத்தால், நடையுடை பாவனைகளால் பாரதநாடு பலவாகக் காணப்பட்ட போதிலும் அதனடிப்படை நெறிகளும் மக்களின் எண்ணப்போக்கும் ஒன்றே. கீதையிலும் குறளிலும் விரவிக்கிடக்கும் பொதுவான கருத்துகள் ஒன்றையொட்டி மற்றொன்று உருவானதல்ல. கால இடைவெளியற்றக் கருத்து மாறுபாடிருப்பினும் இவைகள் ஒத்தியம்பும் அடிப்படை நெறிகள் ஒன்றாக இருப்பதைக் காண்கிறோம்" (19, பப.7-15)

என்கிறார்.

> "அகர முதல எழுத்தெல்லாம்" (குறள். 1)

என்பது போன்று,

"அனைத்திற்கும் ஆதியும் இடையும் முடிவும் அவனே"
(10-20. கீதை)

என்று கீதையிலும் ஒத்த கருத்துடையதைக் கெம்பு ஆறுமுகம் சான்று காட்டுகிறார். இவர், மொழியாலும், எடுத்துக்கூறும் நோக்கிலும், மாறுபட்ட கீதையுடன் குறளை இணைத்து ஒற்றுமைக் கூறுவதைத் தம் ஆய்வாகக் கொள்கிறார். இவருக்குப் பின் டாக்டர் சுபத்ரா ஜா (திருக்குறளும் சமற்கிருத நீதிபோதனையும், 1973), ச. தண்டபாணி தேசிகர் (திருக்குறளில் காமத்துப்பால் சிந்தனைகள், 1987), ஜி. வரதாச்சாரி (திருக்குறளும் சமற்கிருத இலக்கியமும், 1974) போன்றோர் வடமொழி இலக்கியங்களுடன் திருக்குறளை ஒப்பிட்டு ஒத்தக் கருத்துகளை மட்டுமே குறிப்பிடுகின்றனர்.

7.3.2.1.2 இந்தி

இந்தோ - ஆரிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது இந்தி. இந்தி மொழியின் ஆதிக்கவி என்றழைக்கப்படும் கபீர் ஒரு சமூகச் சீர்திருத்தவாதியும், சமயக் குறைபாடுகளைப் போக்க முயன்ற புரட்சி வீரரும் ஆவார். இவரின் நூறுகவிதைகளை இரவீந்திரநாத் தாகூர் வங்காள மொழியில் மொழிபெயர்த்துள்ளார். இவற்றுடன் திருக்குறளை ஒப்பிட்டும் ஆய்வுகள் வந்துள்ளன.

1973-இல் இரவீந்திர குமார் சேத் "வள்ளுவரும் கபீரும் கண்ட வாய்மை" என்னும் கட்டுரையில், "சமூக அமைப்பிலும், இயற்கை-அரசியல் மாற்றங்களினாலும் எத்தனை நூற்றாண்டுகளானாலும்

உண்மை என்னும் உயரிய கொள்கை மாறாதது" (247, ப.17) என்கிறார். இவர்,

"வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்" (குறள். 291)

"பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்" (குறள். 292)

என்னும் குறள்களின் கருத்துகளைப் போன்று, "வாய்மையே வெல்லும்; கடவுளின் அருளைப் பெற 'உண்மை' என்னும் நற்பண்பு வேண்டும் என்ற கபீரின் முண்டக உபநிடதமும் 3.1.6 கூறுவதைச்சான்று கொள்கிறார்.

தொடர்ந்து உறர்னம் சிங் உநான் (திருவள்ளுவரும் குருநானக்கும் காட்டிய நன்னெறிகள், 1973) குருநானக்கின் கருத்துகளைத் திருக்குறளுடன் ஒப்பிடுகிறார். கன்னட இலக்கியத்தில் இரா. நடராசன் (பசவேசரும் திருவள்ளுவரும், 1972), மாரியப்ப பாட் (திருக்குறளும் கன்னடச் சிந்தனைகளும், 1973), போன்றோர் திருக்குறளைப் பசுவருடைய கருத்துகளுடன் ஒப்பிட்டுள்ளனர்.

உலக இலக்கியங்களுள் கிரேக்கம், ஆங்கிலம், பாரசீகம் போன்ற இலக்கியங்களுடன் திருக்குறளை ஒப்பிட்டு 1971-க்குப் பிறகு ஆய்வுகள் வந்துள்ளன.

1971-இல் க.த. திருநாவுக்கரசு "திருக்குறள் நீதி இலக்கியம்" என்னும் நூலில், கிரேக்க நாட்டின் சிறந்த புலவரான சோலனின் கவிதைகளுடன் திருக்குறளை ஒப்பிட்டு ஒத்த கருத்துகளை மட்டும் இணைக்க முயல்கிறார்.

"என்றும் அழியாது நிலைபெற்று விளங்கும் தெய்வங்கள் நமக்கு அளிக்கும் பரிசுகளை நாம் புறக்கணிக்கக்கூடாது. நாம் தொடங்கும் ஒவ்வொரு செயலுக்கும் இன்னலும் இடையூறும் உண்டாவது இயற்கை. ஒருவன் ஒரு செயலைச் செய்யத் தொடங்கும் பொழுது அதன் எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதை முன்கூட்டி அறியமுடியாது; அவன் எதிர்பார்த்ததற்கு நேர்மாறாக அது முடிந்தாலும் முடியலாம்" (கிரே. பா. தொ. பக்.47)

என்ற சோலனின் கருத்து முறையில்,

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்" (குறள். 380)

என்று திருவள்ளுவர் மொழிந்துள்ளமை இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும் என்கிறார். இவர் இரு இலக்கியங்களின் கருத்தினை இணைத்துப் பார்க்க முயற்சி செய்துள்ளதை இவ்வாய்வில் காணமுடிகிறது.

தொடர்ந்து சு. சாலமன் பாப்பையா (சாக்ரடீசும் வள்ளுவரும், 1970) சாக்ரடீசுடனும், தா.வே. வீராசாமி (பண்டைய உலகில் தொழில், 1971)பிளேட்டோவுடனும் ஒப்பிடுகின்றார்கள்.

ஆங்கிலமொழியிலக்கிய அறிஞரான ஷேக்ஸ்பியர் படைப்புகளுடன் தி. மாணிக்கவாசகம் (வான் புகழ் வள்ளுவம், 1960), ப.முருகன் (திருவள்ளுவரும் சேக்சுபியரும், 1968), தே.வே. சந்தானம் (வள்ளுவரும் ஜூலியஸ் சீசரும், 1984) போன்றோர் ஒத்த கருத்துகளைக் காணும் நோக்கில் திருக்குறளை ஒப்பிடுகின்றனர். பாரசீக கவிஞர் ஷேக்சாஅதி அவர்கள் படைப்புடன் திருக்குறளை ஒப்பிட்டு ர.பா.மு. கனி (வள்ளுவரும் சாஅதியும், 1953) எழுதியுள்ளார்.

## 7.4 ஒற்றுமையும் வேற்றுமையும்

திருக்குறளைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டு ஒற்றுமை, வேற்றுமையுடைய கருத்துகளைக் குறிப்பிட்டும் ஆய்வுகள் சில வந்துள்ளன.

### 7.4.1 தமிழ் இலக்கியங்கள்

தமிழ் இலக்கியங்கள் அனைத்துடனும் திருக்குறளை ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன. ஆனால் அவ்வொப்பீடுகளில் ஒற்றுமையையும், வேற்றுமைகளையும் இனம் பிரித்துக்காட்டிய ஆய்வுகள் மிகக் குறைவே. திருக்குறளை நீதிநெறி விளக்கத்துடன் ஒப்பிட்டு ஒற்றுமை-வேற்றுமைப் படும் கருத்துகளை க.ப. அறவாணன் பிரிக்கின்றார்.

1970-இல் க.ப. அறவாணன் "திருவள்ளுவரும் நீதிநெறி விளக்கமும்" என்னும் கட்டுரையில்,

"திருவள்ளுவர் தலைமைக் கவிஞருள் ஒருவர் என்பதில் ஐயமில்லை. ஆனால் பின்வந்த அனைத்து

அறஇலக்கியங்கட்கும் அவரே தாய்மைக் கவிஞர் என்பதை ஏற்பதற்கில்லை. வேண்டுமானால் அற இலக்கிய உடன்பிறப்புகளுள் திருவள்ளுவர் மூத்தவர் என்பதை ஏற்றுக்கொள்ளலாம்" (14, ப.64)

என்கிறார். மேலும், இவர் திருவள்ளுவத்தையும் - குமரகுருபரரின் நீதிநெறி விளக்கத்தையும் ஒப்பிட்டு பின்வரும் சில முடிவுகளைத் தருகிறார்.

1. திருவள்ளுவர் சமயச் சார்பாளராக வெளிப்படையாகக் காட்டிக்கொள்ளவில்லை. ஆனால், குமரகுருபரர் சைவர் என்பதை 1, 85, 86-ஆம் பாடல்களின் மூலம் அறியலாம்.

2. யாக முறையை வள்ளுவர் எதிர்க்கவில்லை. குமரகுருபரர் பாடல்களில் யாகத்திற்கு ஆதரவு உண்டு.

3. எல்லாச் செய்திகளும் திருக்குறளில் பேசப்படுகிறது. ஆனால், நீதி நெறி விளக்கத்தில் பேசப்படவில்லை.

மேற்கண்ட சான்றுகளின் வழியே திருக்குறளுக்கும் - நீதிநெறி விளக்கத்திற்குமுள்ள வேறுபாடுகளைக் காண க.ப. அறவாணன் முயன்றுள்ளதை அறிய முடிகிறது.

## 7.4.2 இந்திய இலக்கியங்கள்

இந்திய இலக்கியங்கள் சிலவற்றுடன் திருக்குறளை ஒப்பிடும்பொழுது ஒற்றுமை, வேற்றுமைக் கருத்துகளைக் குறிப்பிட்டும் ஆய்வுகள் மேற்கொண்டுள்ளனர்.

### 7.4.2.1 நீதிப்பாடல்

சமற்கிருத நீதிப்பாடல் எழுதிய பரித்ருஉறரியுடன் திருக்குறளை ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1971-இல் க.த. திருநாவுக்கரசு "திருக்குறள் நீதி இலக்கியம்" என்னும் நூலில்,

> "மேற்போக்காக நோக்குகின்றவர்களுக்குப் பர்த்ருஉறரியின் சிருங்கார சதகமும், வள்ளுவரின் காமத்துப்பாலும் ஒற்றுமை உடையனவாகத் தோன்றும். ஆனால், இரண்டு நூல்களையும் ஆழ்ந்து படித்தால், இரண்டிற்கும் இடையே பெருத்த வேறுபாடு உள்ளதை நாம் அறியலாம்" (132, ப.320)

என்கிறார். இவர் தரும் ஒத்த கருத்துகளுள் சில.

> "அறிவில் முதிர்ந்தோரது அவைக்கண்ணே அறிவிலார் மௌனமே கொண்டிருப்பாராயின், அம்மௌனமே அவருக்கு அணிகலனாகும்" (நீதி. ச.7)

என்பதும்,

"கல்லாதவரும் நனிநல்லர் கற்றார் முன்
சொல்லா திருக்கப் பெறின்" (குறள். 403)

என்ற குறளும் ஒத்துள்ளதைக் குறிப்பிடுகிறார். மேலும் சில முரண்பட்ட கருத்துகளையும் தருகிறார்.

வள்ளுவர் "ஒருவனுக்கு ஒருத்தி" என்ற கோட்பாட்டை நாடகப் பாங்கிலே காமத்துப்பாலில் விளக்கியுள்ளார். அவர் 'பெண்ணின் பெருமையைப் பாடிய பாவலர். பரித்ருஉறரி பெண்களுக்கு மதிப்புக் கொடுக்கத் தயங்குகிறார். மேலும், நெறிகெட்டு வாழும் ஆடவர்களைத் திருத்தி நெறிப்படுத்துவதாகச் சிருங்கார சதகத்தை' அவர் இயற்றினார் என்று நாம் சொல்லலாம். இதற்குப் பொதுமகளிருடைய வாழ்க்கையை இழித்துப் பேசும் பகுதிகள் சிறந்த சான்றுகளாகும் என்று கூறுகிறார். இவர் பெண்ணுரிமைச் சிந்தனையை மேற்கோள் காட்டி வள்ளுவரும் பரித்ருஉறரியும் மாறுபடுவதை இனங்காட்டுகிறார்.

7.4.2.2 மனு

மனுவுடன் திருக்குறளை ஒப்பிட்டு மாறுபடும் கருத்துகளை மட்டும் ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1948-இல் வள்ளுவப் பதிப்பகத்தார் "திருக்குறளும் பெரியாரும்" என்னும் நூலில், "மக்கள் நல்வாழ்க்கைக்குக் கேடாக வந்து சேர்ந்த ஆரிய அதர்மத்தை ஒழிப்பதையே நோக்கமாகக் கொண்டு ஒரு மறுப்பு நூலாகவே எழுதப்பட்டதாகத்தான் அதைக் கருதமுடிகிறது" (180, ப.5) என்கிறார்.

இவர் மனுவையும் - திருக்குறளையும் ஒப்பிட்டு வேறுபடும் சில சான்றுகளைத் தருகிறார்.

மனுதர்மம் மக்களில் பிராமணன், சத்ரியன், வைசியன், சூத்திரன் என நான்கு சாதிகளைக் கூறுகிறது. ஆனால், திருக்குறள் "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" (குறள். 972) என்று சாதி எதிர்ப்பைக் கூறுகிறது. தொடர்ந்து, இறையனார் (வள்ளுவர் கொள்கையும், வடவர் கொள்கையும், 1949), புலவர் குழந்தை (திருக்குறளும் பரிமேலழகரும், 1952), பெ.ந. அப்புசாமி (சொல்லும் செயலும், 1968) போன்றோர் திருக்குறளுடன் மனுஸ்மிருதியை ஒப்பிட்டு மாறுபட்டுக் கூறும் கருத்துகளையே குறிப்பிடுகின்றனர். மனு வருணாசிரமக் கொள்கையைக் கூறுகிறது என்பதைக் குறிப்பிட்டுத் திருக்குறளினும் மனு வேறுபடுவதை அனைவரும் சுட்டுகிறார்கள்.

## 7.4.2.3 அர்த்தசாத்திரம்

பண்டைக்காலத்தில் இந்திய மக்களிடையே பல்வேறு அர்த்தசாத்திரங்கள் வடமொழியில் பயின்று வந்தன. கௌடில்யர் அவை அனைத்தையும் சுருக்கி ஓர் அர்த்தசாத்திரத்தை எழுதினார். இதனுடன் திருக்குறளை ஒப்பிட்டு ஒற்றுமை வேற்றுமைக் கருத்துகளைக் குறிப்பிடும் ஆய்வுகள் 1968-இல் வந்தன.

1968-இல் ப. அருணாசலம் "குறளின் செய்தி" என்னும் நூலில்,

"சில கருத்துகளை விளக்கிச் செல்வதில் குறளுக்கும் அர்த்தசாத்திரத்திற்கும் ஒற்றுமையிருப்பினும்,

அடிப்படையில் இரண்டும் வெவ்வேறு
போக்குடையன" (8, ப.67)

என்கிறார். இவர் ஒத்த கருத்துகளுக்கு, போர்மேல் செல்லும் ஒருவனையே, காலமறிந்து இடமறிந்து செல்க என்று கௌடில்யர் கூறுவதையே வள்ளுவரும் குறிப்பிடுகிறார் என்கிறார். மாறுபட்ட கருத்துக்கு, புரோகிதனால் வளர்க்கப்பட்டதும், மந்திரியின் சூழ்ச்சியினால் காக்கப்பட்டதும், நீதிநூல் நெறியொழுகுவதுமாகிய அரசகுலம், படைத்துணையின்றியே எய்துதற்குரிய வெற்றிகளை நன்றாக எய்துவதாகும் என்னும் (பொருள் நூல்.1-9) கருத்தும், வள்ளுவரின் பெரியாரைத் துணைக்கோடல் கருத்தும் அடிப்படையில் வெவ்வேறு போக்குடையன என்கிறார்.

தொடர்ந்து அ. தவமணிதேவி (திருக்குறளில் அறிவுத்துறைகள், 1977), இரா. வேலு (திருக்குறளும் கௌடலீயமும் ஒப்பாய்வு, 1989) போன்றோர் அர்த்தசாத்திரத்தையும் - திருக்குறளையும் ஒப்பிட்டு ஒத்த, மாறுபட்டுவரும் கருத்துகளை இனங்காட்டியுள்ளார்கள்.

7.4.2.4 காமசூத்திரம்

வாத்சாயனர் எழுதிய நூல் காமசூத்திரம். இந்நூலில் ஆயிரத்து இருநூற்று ஐம்பது சுலோக அளவைக் கொண்ட சூத்திரங்களில் முப்பத்தாறு அத்தியாங்கள் உள்ளன. இதனுடன் திருக்குறளை ஒப்பிட்டு மாறுபட்ட கருத்துகளைக் கூறும் ஆய்வுகள் 1979-இல் வந்துள்ளன.

1979-இல் தி. முருகரத்னம் "குறள் நெறி" என்னும் நூலில்,

"வள்ளுவர் காட்டும் காமத்துப்பால் மரபு, வாத்சாயனர் காட்டும் காமசூத்திரமரபு ஆகிய இவற்றிடையே பெருவேறுபாடு அமைந்தது... ஆராய்தற்குரியது. வரன்முறையற்ற களியாட்டமாக அல்லது அன்பின் ஐந்திணை ஒழுகலாறாக அவர் காமத்துப்பாலைக் காண்கிறார். இது குறிப்பிடத்தக்க மாற்றமே" (172, ப.86)

என்கிறார். மேலும், சான்றுகள் ஏதும் தராமல் பொதுவானக் கருத்துகளைக் கூறிச்செல்வதைத் தி. முருகரத்னம் அவர்களின் ஆய்வில் காணமுடிகிறது.

### 7.4.2.5 சாத்திர நூல்களில்

திருக்குறளைப் போதாயனர், சாணக்கியர், கௌடில்யர் போன்ற வடநூலறிஞர் கருத்துகளுடன் ஒப்பிட்டும் 1966-இல் ஆய்வுகள் வெளிவந்துள்ளன.

1966-இல் கி. இராமலிங்கனார் "மாசு கற்பிக்கும் முயற்சி" என்னும் கட்டுரையில், "மனுவும் போதாயனரும் தருமசாத்திரம் எழுதினர். சாணக்கியரும், கௌடில்யரும் அர்த்தநூல் எழுதினர். காமசூத்திரத்தை வாத்சாயனார் வரைந்தார். இம்மூன்று வகையினரின் கொள்கைகளும் வள்ளுவரின் கொள்கைக்கு நேர்மாறானவை என்பதை இவர் நூல்களை அறிந்தவர்கள் ஒப்புக்கொள்வர்" என்கிறார் (36, அ, ப.41). இவர், தரும் சான்றுகள் சில:

போதாயனர்-விருந்தில் மதுவகைகள், 25 விலங்குகள், பறவைகளின் இறைச்சி படைக்க வேண்டும் என்கிறார். சாணக்கியர் விலை மாதர்க்கும், மதுவிற்கவும் வரிபோட்டு மன்னன் வருமானத்தை பெருக்கிக் கொள்ளலாம் என்கிறார். மேலும் கௌடில்யர் கையூட்டு தந்தும், ஏமாற்றியும், ஒழுக்கங்கெட்ட பிறச் செயல்களைச் செய்தும் அரசியலிலும் வெற்றிபெறலாம் என்கிறார். மேற்கண்ட இம்மூன்று ஆசிரியர்களினின்றும் திருவள்ளுவர் தம் திருக்குறளில் மாறுபட்டுக் கூறுகிறார் என்று சீ. இராமலிங்கனார் குறிப்பிடுகிறார்.

### 7.4.2.6 தம்மபதம்

பாலி மொழியில் தோன்றிய தம்மபத இலக்கியத்துடன் திருக்குறளை ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1976-இல் எஸ். ஜெயலட்சுமி "திருக்குறளும் தம்மபதமும்" என்னும் நூலில் திருக்குறளுக்கும் தம்மபதத்திற்குமுள்ள ஒற்றுமை, வேற்றுமைகளைக் குறிப்பிடுகிறார். (195, ப.5)

> "ஒழுக்க இயல்கள் மனோநிலையைப் பின்பற்றியவை,
> மனச் செயலால் நிகழ்பவை. மனோமயம் ஆனவை.
> தீய நினைப்போடு ஒருவன் ஒன்று பேசினும், செய்யினும்
> இழுப்பவன் அடியைத் தொடரும் சக்கரம் போல
> அவனைத் துன்பம் தொடரும்" (இரட்டைச் செய்யுள்.1)

என்ற கருத்தும்,

"தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடியுறைந் தற்று" (குறள். 208)

என்ற குறள் கருத்தும் ஒற்றுமையுடையனவாக உள்ளன என்பதை ஒப்பிடுகிறார்.

புத்தர் அறக்கடவுள் வந்து அவர்கண்ட அறமார்க்கத்தைப் போதிக்க வேண்டும் என்று கூறியபின் தன் கொள்கையைப் பரப்பினார். ஆனால் குறளில் இவ்வாறு கிடையாது.

7.4.2.7 தெலுங்கு

திருக்குறளைத் தெலுங்கு இலக்கியங்களுடனும் ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1974-இல் ஜி. என். ரெட்டி "வள்ளுவரும் வேமனரும்" என்னும் கட்டுரையில், திருவள்ளுவரின் கருத்தும், வேமனரின் கருத்தும் ஒன்றுபட்டும், சில இடங்களில் மாறுபட்டும் காணப்படுகின்றன என்கிறார் (275, பப. 10-35).

"ஓ மனிதர்களே கடவுள் சிலைகளை வழிபடுவீர்,
சிலைகளில் இறைவன் வாழ்கிறான். ஆதலால்
நல்லுள்ளத்துடன் வணங்குங்கள்" (வேமனர் 1:102)

என்ற கடவுள் வழிபாட்டுச் சிந்தனை திருக்குறளுடன் அடிப்படையில் ஒத்திருப்பினும், சிலை வழிபாட்டில் வள்ளுவரின் உள்ளம் இடந்தரவில்லை.

என்று ஜி.என். ரெட்டி ஒப்பிடுகிறார். தொடர்ந்து 1984-இல் என். தர்மா ரெட்டி "திருவள்ளுவர் வேமனர் ஓர் ஒப்பீட்டாய்வு" என்னும் நூலில், வேமனருக்கும் திருவள்ளுவருக்குமுள்ள ஒற்றுமைக் கருத்துகளோடு வேறுபாடுகளையும் பட்டியலிடுகிறார்.

1. திருவள்ளுவர் சித்தாந்த சிந்தனையுடையவராகவும், வேமனர் யோக நெறியுடைய அத்வைதியாகவும் காணப்படுகிறார்.
2. திருவள்ளுவர் பொதுசமயவாதியாக இருக்க, வேமனர் உலக மாயையினின்றும் விடுபட்டுப் பிரமத்தை அடையும் சிவநெறியாளராக விளங்குகிறார். சமுதாயத்துக்குத் தேவையான உண்மைகளை வெளிப்படுத்தும்போது வள்ளுவர் கல்வி, கல்லாமை, கேள்வி போன்றவற்றைக் கூற, வேமனரோ அறிவைப் பற்றித் தனித்துப் பேசவில்லை. (124, ப.40)

தொடர்ந்து ஆ.வே. இராமசாமி (திருவள்ளுவரும் வேமனரும், 1991) திருவள்ளுவரையும் வேமனரையும் ஒப்பிட்டுச் சில ஒற்றுமை, வேற்றுமைக் கருத்துகளை முன்வைக்கிறார்.

### 7.4.3 உலகமொழி

உலகில் தொன்றுதொட்டுப் பல மொழிகள் பேசப்பட்டு வருகின்றன. அவற்றுள் சில மொழிகளைப் பேசிய மக்கள் நாகரிகத்தின் கொடுமுடியில் வீறுடன் விளங்கினர். அவர்களுள் கிரேக்கரும் ஒருவர்.

### 7.4.3.1 ஹெறசியட்

கி.மு. 8-ஆம் நூற்றாண்டில் ஹெறசியட் என்பார் சிறந்த தன்னுணர்ச்சிப் பாடல்களைக் கிரேக்க மொழியில் எழுதியுள்ளார். அவை, 1. வேலையும் நாள்களும், 2. தெய்வங்களின் மரபு வழி, 3. ஹெறரா கிளிசின் கேடயம் என்பதாகும். இதனுள் "வேலையும் நாள்களும்" மட்டும் திருக்குறளுடன் ஒப்பிட்டு 1971-க்குப் பிறகு ஆய்வுகள் வந்துள்ளன.

1971-இல் க.த. திருநாவுக்கரசு "திருக்குறள் நீதி இலக்கியம்" என்னும் நூலில்,

> "ஹெறசியட்டின் சிந்தனையில் அரும்பிய கருத்துகள் சில மன்பதைப் பாவலனாகிய வள்ளுவனுடைய அறநெறிக்-கருத்துகள் சிலவற்றோடும் ஒத்துள்ளன" ...... ஹெறசியட்டிற்கும் வள்ளுவருக்கும் இடையே கருத்து வகையில் காணப்பெறும் வேறுபாடுகள் பல. அவற்றுள் இரண்டு இங்குக் குறிப்பிடத்தக்க அளவிற்குச் சிறப்பு வாய்ந்தன" (132, பக்.143-145)

என்கிறார்.

#### ஒத்த கருத்து

"பொற்காலத் திருநாட்டில் பஞ்சமோ, நோயோ, உட்பகையோ உண்டாவதில்லை" (வே.நா.230) என்பதும், "உறுபசியும் ஓவாப்பிணியும்

செறுபகையும் சேரா தியல்வது நாடு" (குறள். 734) என்பதும் ஒத்த கருத்துகளையுடையனவாக இருக்கின்றன.

மாறுபட்ட கருத்துகள்

திருவள்ளுவர் பெண்ணினத்தைப் பெருமைப்படுத்திப் பேசும் பாவலர் ஆவார். அறத்துப்பாலில் 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள?' என்ற வினாவை எழுப்பி, பொருட்பாலில் 'பெண்ணே பெருமையுடைத்து' (குறள். 907) என்று சுட்டிக்காட்டி, காமத்துப்பாலில் 'பெண்ணின் பெருந்தக்கது இல்' (குறள். 1137) என்று அறுதியிட்டு உறுதியாக் கூறுகிறார் வள்ளுவர்.

ஆனால், ஹெறசியட் "பெண்களை நம்பாதே! முகமன் கூறுவோர்களை நம்பினால் உண்டாகும் கேடு, பெண்களை நம்பினால் உண்டாகும்" (வே.நா. 375) என்று அறிவுறுத்துகிறார்.

7.4.3.2 செனான்கோ, மார்க்கசு

கிரேக்க நாட்டில் கி.மு. ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், ஐந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் வாழ்ந்த மெய்யுணர்வாளர்கள், மெய்ப்பொருள் ஆராய்ச்சிக் கருத்துகளைக் காப்பிய யாப்பில் பாடினர். அவர்களுள் செனான்கோ, மார்க்கசு போன்றோர்களும் குறிப்பிடத்தக்கவர்கள்.

1967-இல் தனிநாயக அடிகள் "திருவள்ளுவர்" என்னும் கட்டுரையில்,

"கிரேக்கத் தத்துவ ஞானிகள் மெய்யுணர்வு வல்லுநர்போல் பொருளை ஆராய்கின்றனர். திருவள்ளுவரோ ஒழுக்கவியல் வல்லுநர்போல் ஆராய்ந்து ஆசான்போல் மக்கள் கடைபிடிக்க வேண்டிய அறங்களைக் கூறுகின்றார். ஆயினும், திருக்குறள் காட்டும் ஒழுக்க இயலுக்கும், கிரேக்க நூல்கள் காட்டும் மெய்யுணர்வு போன்ற வளம்பெற்ற மெய்யுணர்வே அடிப்படையாக இருந்திருத்தல் வேண்டும்" (127, பக்.23-24)

என்கிறார். செனான்கோ, மார்க்குஸ் அவுரேலியஸ் போன்ற தத்துவ ஞானிகள், நேரத்தையும் காலத்தையும் வீண்போக்காது அறத்திலும் மெய்யுணர்விலும் ஈடுபடுதல் வேண்டும் என்றும், வாழ்க்கை நிலையாமை உடையது என்றும் கூறுவதும், வள்ளுவர்,

"வீழ்நாள் படாஅமை நன்றாற்றின்" (குறள்.38)

"அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க" (குறள்.36)

என்று தம் குறள்களில் கூறுவதும் ஒத்து வருகின்றன என்று தனிநாயகம் கூறுகிறார். மேற்கண்ட ஆய்வின் வழி செனான்கோ மார்க்கசு - திருவள்ளுவருக்கும் அடிப்படையில் ஒற்றுமையிருப்பினும் மெய்யுணர்வு ஒழுக்கவியலில் வேற்றுமையுள்ள அறிஞர்களாக உள்ளதைக் காணமுடிகின்றது.

7.4.3.3 இலத்தீன்

இலத்தீன் மொழி இந்தோ - ஐரோப்பிய மொழிக்குழுவின் வழித்தோன்றலாகும். இலத்தீன் மொழியில் கி.மு. 95-55-க்கும் இடைப்பட்ட காலத்தில் லுக்ரீஉஷியஸ் என்ற கவிஞர் வாழ்ந்துள்ளார்.

இவர் எழுதிய 'பொருள்களின் இயற்கை' என்னும் நூலுடன் திருக்குறளை ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

1971-இல் க.த. திருநாவுக்கரசு "திருக்குறள் நீதி இலக்கியம்" என்னும் நூலில்,

> "லுக்ரிஉஸின் பொருள்களின் இயற்கையை அறநூல் என்பதைவிட ஓர் ஆராய்ச்சிநூல் என்று கூறுதலே பொருந்தும். அதில் அறத்தைப் பற்றிப் பேசப்பெறும் பகுதி முழுநூலில் கால் பகுதியாகும். அது ஒரு சமூக இயல் பற்றிய ஆராய்ச்சி நூலாகவே தோன்றுகிறது. இதனால் அதைத் திருக்குறளுக்கு ஒப்பானதோர் அறநூல் என்று கூறமுடியாது" (132,ப.202)

என்கிறார். இவர் திருக்குறளை முதன்மைப்படுத்திக் கூறினாலும்,

> "தனிமனிதன் செம்மையானதும் முழுநிறைவுடையதுமான வாழ்க்கையைப் பெற்று இன்பத்தை அடையவேண்டும்"
>
> (லுக்கிரிஉஸ்)

என்பது, "அறத்தான் வருவதே இன்பம்", "வாலறிவன் நற்றாளைத் தொழுவதன் மூலம் பேராவியற்கைப் பெருநிலையை அடைவதே வாழ்க்கையின் குறிக்கோள்" என்னும் வள்ளுவச் சிந்தனையுடன் ஒப்புடையது என்கிறார்.

லுக்கிரிஉஸ் உலகமும், கடவுளும், வானும் உலகத்திலுள்ள உயிர்களும் அணுக்களின் சேர்க்கையாலே உண்டாயின. வேறெந்த ஆற்றலோ கடவுளோ அவற்றைப் படைக்கவில்லை என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டுள்ளார். ஆனால், வள்ளுவரோ, பரந்து கெடுக உலகியற்றியான்' என்றும், அகர முதல எழுத்தெல்லாம்' என்பதின் வழி இறைவன் இருப்பதை அழுத்தமாகக் கூறியுள்ளதைக் கொண்டு வள்ளுவர் லுக்கிரிஉஸூம் மாறுபடுவதைச் சான்று காட்டுகிறார்.

இந்த மாறுபாடு பொருத்தமானதாகத் தோன்றவில்லை. ஏனென்றால், உலகையும் உயிர்களையும் கடவுள் படைத்ததாக எங்கும் வள்ளுவர் கூறவில்லை. 'உலகியற்றியான்' என்னும் உலக நெறிகளை இயற்றியான் எனப் பொருள்கொள்ள இடம் அளிப்பதாகும். முதற்குறளில், உயிரினத் தோற்றத்திற்கு ஓர் அடிப்படை ஆற்றலாகத்தான் திருவள்ளுவர் இறைவனைச் சுட்டுகின்றாரேயன்றி, உயிர்களைப் படைப்பதாகக் கூறவில்லை.

### 7.4.3.4 சீனமொழி

சீனமொழிப் பழமையானது. கருத்துகளை உணர்த்தும் ஓவியங்களே அம்மொழியின் எழுத்துகளாகப் பயன்படுத்தப் பெறுகின்றன. சீன இலக்கியத்தை அறிவுறுத்தும் இலக்கியம், இன்புறுத்தும் இலக்கியம் என இருவகையாகக் கூறுவர். இவற்றுள் அறிவுறுத்தும் இலக்கியங்களை மட்டும் திருக்குறளுடன் ஒப்பிட்டு 1966-க்குப் பிறகு ஆய்வுகள் வந்துள்ளன.

1966-இல் ஆல்பர்ட் சுவைட்சர் "இந்தியர் சிந்தனையும் வளர்ச்சியும்" என்னும் நூலில் இந்திய நெறிகளுடன் சீன நெறிகளையும் சேர்த்துக்கொண்டு திருக்குறளை ஆராய்கிறார். அவர் இந்திய நெறிகளுக்குள் ஒரு பொதுத்தன்மையுண்டு. அதாவது அறம், ஒழுக்கம், நல்லன செய்தல் ஆகியவற்றின் விளைவால் மறுமை இன்பம், பிறவி இல்லாது ஒழிதல், வீடுபேறு ஆகியன கிடைக்கும். இவ்வாறு ஒரு பயனைக் கூறுவதே இந்தியச் சீன நெறிகளிலுள்ள பொதுத்தன்மை. இதே பயனைத் திருவள்ளுவர் சில இடங்களில் கூறினாலும், இதுவே திருக்குறளில் முழுதும் ஆதிக்கம் பெற்ற ஒன்றாகக் கருதமுடியாது" என்கிறார். (262, ப. 197)

மேற்கண்ட ஆய்வில் திருக்குறளும் சீன நெறிகளும் ஒரு சில கருத்துகள் ஒத்தவைகளாக இருப்பினும் முழுதும் அவ்வாறு கொள்ள இயலாது என வேறுபடுத்திக்காட்டுவதை இனங்காண முடிகிறது.

### 7.4.3.4.1 கன்பியூசியஸ்

கன்பியூசியசு புகழ்பெற்ற சீனப்பெரியார். இவர் எழுதிய சில பழமொழிகளுடன் திருக்குறளை ஒப்பிட்டுள்ளனர்.

1971-இல் க.த. திருநாவுக்கரசு "திருக்குறள் நீதி இலக்கியம்" என்னும் நூலில், கன்பியூசியசும்-திருவள்ளுவரும் ஒத்த, வேறுபடும் கருத்துகளைக் கூறுகிறார். (132, ப.235)

"நம்முடைய மூதாதையர் தங்கள் உள்ளக் கருத்துகளை உலகிற்குத் தம் உரையின் மூலம் உபதேசம்

செய்வதற்குத் தயங்கினர். ஏன் தெரியுமா? தாங்கள் சொல்லியவண்ணம் வாழ்ந்துகாட்ட இயலாமற் போனால் என்ன செய்வது என்பதற்காகவே அவர்கள் அஞ்சினர்"

(முது. 4:21)

என்னும் கருத்தை,

"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணஞ் செயல்" (குறள். 664)

என வள்ளுவரும் அறிவுறுத்தியுள்ளார். ஆனால், தீமையை நேர்மையால்தான் வெல்ல வேண்டும்' என்னும் கன்பியூசியசின் கருத்து, "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண நன்னயம் செய்து விடல்" (குறள். 314) என்னும் வள்ளுவர் கருத்தோடு முரண்படுகிறது என்கிறார். க.த. திருநாவுக்கரசு கன்பியூசியசின் கருத்து திருக்குறளுடன் ஒத்தும், மாறுபட்டுள்ளதையும் இனங்காட்டுகிறார். தொடர்ந்து 1987-இல் கு. மோகனராசு "கன்பியூசியசும் திருவள்ளுவரும் கண்ட உயர்ந்தோர்" என்னும் நூலில் கன்பியூசியசையும் திருவள்ளுவரையும் ஒப்பிட்டுச் சில முடிவுகளைத் தருகின்றார்.

ஒற்றுமை

புலன் அழுக்கற்ற அந்தணாளர்களை பொய்தீர் ஒழுக்க நெறி நிற்கும் மெய்யுணர்வாளர்களை உருவாக்குவதே கல்வியின் மீதுயர் குறிக்கோளாகக் கன்பியூசியசும் திருவள்ளுவரும் கருதுகின்றனர்.

(178.ஆ, ப.13)

வேறுபாடுகள்

கன்பியூசியசும் திருவள்ளுவரும் கடவுள் ஏற்பாளர்கள்; கன்பியூசியசு தம் கல்வி தொடர்பான கருத்துகளைப் பெரிதும் அரசியல் செம்மையை நோக்கியனவாக் அமைத்துக் கொள்வதால், அவர் சமயம் சார்ந்த மெய்ப்பொருள் சிந்தனைகளில் நாட்டம் செலுத்தவில்லை.

திருவள்ளுவர் அரசியல் செம்மையோடு சமயச் செம்மையையும் நோக்கியனவாகத் தம் சிந்தனைகளை அமைத்துக் கொள்வதால், சமயம்சார் மெய்ப்பொருள் சிந்தனைகளின் தாக்கம் அவருடைய கல்வி தொடர்பான சிந்தனைகளிலும் எதிரொளிக்கின்றது. (178.ஆ,ப.125)

7.4.3.4.2 லாவோட்சே

லாவோட்சே என்னும் சீன அறிஞர் கி.மு. 604-இல் வாழ்ந்தவர். இவர் தம் "வாழ்க்கை நெறி" என்னும் நூலுடன் திருக்குறளை ஒப்பிட்டுக்கூறும் க.த. திருநாவுக்கரசு,

> "சீனாவின் சிறப்புமிக்க சித்தர் லாவோட்சே. அவர் இயற்றிய 'வாழ்க்கை நெறியும்' தமிழகத்தின் மெய்யுணர்வாளர்களுள் தலைசிறந்தவரான திருவள்ளுவர் இயற்றிய திருக்குறளும் வடிவத்தால் பெரிதும் ஒத்த இயல்புடையன" (132, ப.293)

என்கிறார்.

மக்கள் மாண்புடன் வாழ்வதற்கு வழிகாட்டுவதையே திருக்குறளும், வாழ்க்கை நெறியும் குறிக்கோளாகக் கொண்டுள்ளன. 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்பதில் அவை இரண்டும் கருத்தொற்றுமை உடையனவாகும். சிறப்பாக வாழ்வது எப்படி? என்று மக்களுக்கு வழிகாட்டுவதிலேயே அவை இரண்டும் வேறுபடுகின்றன என்கிறார்.

லாவோட்சு வாழ்க்கையைத் துன்பவியல் நோக்குடன் பார்த்தார். வள்ளுவரோ வாழ்க்கையை இன்பவியல் நோக்கோடு அணுகினார். அதனால்தான் லாவோட்சுவின் கொள்கை அவர் காலத்திலேயே பழிக்கப்பட்டது. சீன நாட்டு அறிஞர்களுள் சிலர் "அறவே வெறுத்தொதுக்கத்தக்க மூடக்கருத்து" என்று அதைக் குறைகூறினர். இச்செய்தியை அவரே தம்முடைய நூலின் அறுபத்தேழாம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

## 7.5 வளர்ச்சி நிலை

திருக்குறளைப் பிற இலக்கியங்களோடு ஒப்பிடும்பொழுது ஒன்றைக் காட்டிலும் மற்றொன்று கருத்து வளர்ச்சி பெற்ற நிலையிலிருக்கும். இத்தகைய நோக்கில் 1950-களுக்குப் பிறகே ஆய்வுகள் வந்துள்ளன.

### 7.5.1 தமிழ் இலக்கியம்

தமிழ் இலக்கியங்களுள் சங்க இலக்கியத்துடன் திருக்குறளை ஒப்பிட்டுக் 'கருத்து வளர்ச்சி' நோக்கில் ஆய்வுகள் மேற்கொண்டுள்ளனர்.

7.5.1.1 கலித்தொகை

1953-இல் தெ.பொ. மீனாட்சிசுந்தரம் "திருக்குறள் காமத்துப்பால்" என்னும் கட்டுரையில், திருக்குறளையும் கலித்தொகையையும் ஒப்பிட்டு எழுதியுள்ளார். அவர் தரும் சான்றுகள். (168 அ,பப.30-65)

"நோக்குங்கால் நோக்கின் அணங்காக்கும் சாயல்" (கலி.131)

"ஒருநோக்கு நோய்நோக்கு" (குறள். 1091)

எனும் இரண்டு பாடல்கள் கருத்துகளை ஒப்பிட்டுக் கலித்தொகையிலும், குறளின் கருத்து வளர்ச்சி பெற்றுள்ள நிலையினைக் குறிப்பிடுவதாகக் கூறியுள்ளார் (ப.154).

தொடர்ந்து, 1988-இல் கு. மோகனராசு "திருவள்ளுவர் காலம்" என்னும் தொடர்கட்டுரையில் கருத்துவளர்ச்சி நோக்கில் ஆய்வினை மேற்கொண்டுள்ளார் (257, ப.10).

இவர், "ஆண், பெண் சமன்மையை விழைந்த வள்ளுவர், பல பெண்டிரோடு தொடர்பு கொள்ளும் ஆடவரைப் 'பரத்தன்' எனத் துணிந்து வழங்க முன்வருகின்றார். அதன் விளைவுதான் அவர் வழங்கும் 'பரத்த' (குறள்.1131) என்னும் சொல்லாட்சி. இச்சொல்லாட்சி திருக்குறளைச் சங்கத் தொகை நூல்களிலும் பிற்பட்டதாகக் கூற வந்த கருத்து வளர்ச்சி நிலை ஆய்வைக் குறிக்கும்" என்கிறார்.

7.00 முடிவுரை

1. திருக்குறளில் சங்க இலக்கியத்தின் தாக்கம் குறளில் காணப்படுகிறது என்று 1970-களில் மு.வை. அரவிந்தன், கு. மோகனராசு இருவர் மட்டுமே ஆய்வு மேற்கொண்டு உள்ளனர். முனைவர் கு. மோகனராசு ஒத்த கருத்து, தொடர்களைக் கொண்டும், சங்க இலக்கியத்திற்குப் பிற்பட்டது குறள் என்று சான்றோர் பலரின் முடிவைக் கொண்டும் ஆய்வு மேற்கொண்டுள்ளார்.

2. வடமொழி இலக்கியத்தின் தாக்கம் குறளில் காணப்படுகிறது என்று 1952-இல் எஸ். வையாபுரிப்பிள்ளை மடல் சான்றாகக் காட்டுகிறார். தொடர்ந்து நா. இராமலிங்கம், எஸ். ஜெயலட்சுமி போன்றோர் ஒத்த கருத்துகளைக் கொண்டே முடிவு கூறுகின்றனர்.

3. தமிழ் இலக்கியங்களில் திருக்குறளின் தாக்கம் பற்றிய முதல் ஒப்பாய்வு 1906-இல் சி. கணேசய்யரால் தொடங்கப் பெறுகின்றது. பின்னர் தமிழிலுள்ள அனைத்து இலக்கியங்களுடனும் ஒப்பிட்டு ஆய்வுகள் வந்துள்ளன.

4. திருக்குறளுடன் ஒப்புமைக் காணும்போக்கில் கெம்பு ஆறுமுகம் 1969-இல் மேற்கொண்ட ஆய்வு குறிப்பிடத்தக்கது.

5. 1970-இல் க.ப. அறவாணன் திருக்குறளையும் நீதிநெறிவிளக்கத்தையும் ஒப்பிட்டுச் சில வேற்றுமைக்

கருத்துகளைக் கூற முயன்றுள்ளார். இவர் திருவள்ளுவரை அற இலக்கியங்களின் தாய்மைக் கவிஞர் என ஏற்கவியலாது; மாறாக தலைமையானவர் எனலாம் என்று வேறுபடுத்துகிறார்.

6. 1948-இல் வள்ளுவப் பதிப்பகத்தார், இறையனார், புலவர் குழந்தை, பெ.ந. அப்புஸ்வாமி போன்றோர் மனு திருக்குறளிலிருந்து வருணப்பாகுபாடு, பிறப்பு பற்றிய கருத்துகளில் வேறுபடுவதைக் குறிப்பிடுகிறார்கள்.

7. 1960-களில் ப. அருணாசலம், அ. தவமணிதேவி, இரா. வேலு போன்றோர் அர்த்தசாத்திரம் திருக்குறளுடன் ஒத்தும் மாறுபட்டும் வரும் கருத்துகளைக் கூறியுள்ளனர்.

8. 1970-களில் ஜி.என். ரெட்டி, என். தர்மா ரெட்டி போன்றோர் தெலுங்கு இலக்கியமான வேமனர் படைப்புகளுடன் திருக்குறளை ஒப்பிட்டு ஒத்த - மாறுபடும் கருத்துகளை இனங்காட்டுகிறார்கள்.

9. 1971-இல் க.த. திருநாவுக்கரசு கிரேக்க இலக்கிய அறிஞர் ஹெறசியட்டின் பெண்களைப் பற்றிய சிந்தனையில் திருவள்ளுவரின் கருத்து மாறுபட்டுள்ளதைக் குறிப்பிடுகிறார். இலத்தீன் இலக்கிய அறிஞர் லுக்கிரிஉடிஸ், சீன அறிஞர் கன்பியூசியசு போன்றோர் கருத்துகள் ஒத்தும் வேறுபட்டும் காணப்படுவதை க.த. திருநாவுக்கரசு குறிப்பிடுகிறார்.

10. 1987-இல் கு. மோகனராசு கன்பியூசியசு - திருவள்ளுவர் இருவரும் கண்ட 'உயர்ந்தோர்', 'கல்வி' பற்றிய சிந்தனைகளை ஒப்பிட்டு ஒத்த, மாறுபட்ட கருத்துகளை இனங்காட்டுகிறார்.

***

00.1 ஆய்வின் போக்குகள்

தமிழ் இலக்கியத்தில் தனக்கென ஓர் இடத்தைப் பெற்றுள்ளது திருக்குறள். இந்நூலுக்கு நூற்றுக்கு மேற்பட்ட உரைகளும், ஆயிரத்துக்கு மேற்பட்ட ஆய்வு நூல்களும், பத்துக்கு மேற்பட்ட இதழ்களும் இதுவரை வெளிவந்துள்ளன; வந்துகொண்டிருக்கின்றன. இவற்றைப் பற்றிய வரலாற்றை நாம் இனங்காண வேண்டும். அப்பொழுதுதான் இனி என்னென்ன நோக்குகளில் ஆய்வு மேற்கொள்ளலாம் என்ற நிலைக்கு வழி ஏற்படும். ஆய்வின் எல்லை கருதி திருக்குறள் ஒப்பாய்வு - இலக்கியங்களுடன் ஒப்பிட்டு இதுவரை வந்துள்ள ஆய்வின் வரலாற்றை மட்டும் தலைப்பாகக் கொண்டு இந்த ஆய்வு அமைந்துள்ளது.

திருக்குறளில் ஒப்பீட்டாய்வுகள் பழைய உரையாசிரியர்களால் கி.பி. 10 - 15-ஆம் ஆண்டுகளில் தொடங்கப்படுகிறது. அதன் பிறகு 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் - 1898-இல் - சைவசமதத் திரல்காரி என்பவரால், முதற்குறளைத் சிவஞான போதம் பாடலுடன் ஒப்பிட்டு, சைவதக் கருத்துக்கு ஆதரவாக ஆய்வு தொடங்கப்படுகிறது. 1909-இல் சி. அயோத்திதாஸ், திரிபிடகம்-போன்று திருக்குறளும் எழுதப்பட்டுள்ளது என்று கூறித் திருக்குறள் புத்தமதச் சார்புடையது என்கிறார்.

மு. இராகவையங்கார், சி. கணேசய்யர், வ. சுப்பையா பிள்ளை போன்றோர் தனிமனித அறச்சிந்தனை நோக்கில் திருக்குறளைப் பிற இலக்கியங்களுடன் ஒப்பிடுகின்றனர். 1917-இல் இலட்சுமணப்பிள்ளை

காப்பியத்தையும் திருக்குறளையும் ஒப்பிட்டுத் திருக்குறளின் காலத்தைக் கூறுகிறார். தொடர்ந்து ச. சோமசுந்தர பாரதி, ஆர்.நரசிம்மன் ந. கந்தையா பிள்ளை போன்றோர் திருக்குறளினைச் சங்க இலக்கியம், காப்பியங்களுடன் ஒப்பிட்டுத் திருக்குறளின் காலத்தைக் கூறுகின்றனர்.

1930-களில் திருக்குறளைச் சமண நூல் என்று நிறுவ அ. சக்கரவர்த்தி, சி. அனந்தநயினார் போன்றோர் முயலுகின்றனர். தொடர்ந்து 1940-களில் வள்ளுவப் பதிப்பகத்தார், இறையனார், கீ.இராமலிங்கனார் மனு, அர்த்தசாத்திரங்களுடன் ஒப்பிட்டுத் திருக்குறள் அவ்விலக்கியங்களின் அடிப்படைக் கொள்கைகளிலிருந்தும் மாறுபடுவதை இனங்காட்டுகிறார்கள்.

1948-இல் ச. வையாபுரிப்பிள்ளை திருக்குறளை நாலடியார், வடநூல்களுடன் ஒப்பிட்டுத் திருக்குறளின் காலத்தினை மிகப் பிற்பட்டது எனக்காட்ட முனைந்துள்ளார். இக்காலகட்டத்தில் க. வச்சிரவேலு முதலியார் திருக்குறள் சைவசித்தாந்தக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டது என்று நிறுவ முயன்றுள்ளார். 1955-இல் பு.அமிர்தலிங்கனார் திருவள்ளுவர் ஓர் உயிர்நூற் புலவர் என்றும் உயிரியல் சிந்தனைகளுக்கு அவர் எழுதிய குறட்பாக்களில் பல சான்றுகள் உள்ளன என்றும் ஒப்பிட்டுக் கூறுகிறார்.

1969-இல் ஞா. தேவநேயன் வடநூற் கருத்துகளை மறுத்துத் திருக்குறளுக்குத் தமிழ் மரபு நோக்கில் உரை எழுதியுள்ளார். கு.ச. ஆனந்தன் சமன்மைப் பொருளியச் சிந்தனை நோக்கிலும், புலவர் குழந்தை, இரா. நெடுஞ்செழியன் போன்றோர் பரிமேலழகரின் வடநூற் கருத்துகளை மறுத்துப் பகுத்தறிவுச் சிந்தனையில் தமிழ் இலக்கியங்களுடன் திருக்குறளை ஒப்பிட்டும் உரை எழுதியுள்ளார்கள்.

தனிநாயகம் கிரேக்க இலக்கியத்துடனும், கு.மோகனராசு சீனமொழி இலக்கியத்துடனும், க.த. திருநாவுக்கரசு கிரேக்கம், இலத்தீன், சீனம் ஆகிய மூன்று மொழி இலக்கியங்களுடனும், ப.முருகன் ஆங்கில மொழி இலக்கியத்துடனும் திருக்குறளை ஒப்பிட்டு ஒற்றுமை வேற்றுமைகளை இனங்காட்டியுள்ளனர்.

1970-களில் சோ.ந. கந்தசாமி திருக்குறளைப் பௌத்தத்துடன் இணைத்துக் கூறியுள்ளார். அ.மு.பரமசிவானந்தம், இரா.சாரங்கபாணி கோ. சுந்தரமூர்த்தி போன்றோர் திருக்குறளைத் தமிழ், வடநூல் அரசியல் கருத்துகளுடனும், பா. சூரியநாராயணன் கிரேக்க அரசியல் கருத்துகளுடனும் ஒப்புமைப்படுத்தியுள்ளார்.

1985-இல் மு. தெய்வநாயகம் திருக்குறளைச் சைவசித்தாந்தம், விவிலியத்துடன் ஒப்பிட்டு விவிலியத்தை ஒதன்மைப்படுத்தித் திருக்குறள் கிறித்தவ நூல் என கூறினார். கிரா. கேசவ அய்யங்கார் திருக்குறளை வைணவத் தொடர்பான தமிழ், வடநூல் இலக்கியக் கருத்துகளுடன் ஒப்பிட்டுத் திருக்குறளை வைணவ நூல் என்று கூற முனைந்துள்ளார்.

## 00.2 இயல்களின் வழி அறியப்படுவன

பழைய உரையாசிரியர்களுள் பரிமேலழகர் ஒருவரே தம் உரையில் மிகுதியான மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளார். பழைய உரையாசிரியர்கள் பழந்தமிழ், இடைக்கால இலக்கியங்களிலிருந்தும், வடநூல்களிலிருந்தும் சான்றுகள் தருகின்றனர். ஆனால், புதிய உரையாசிரியர்கள் தம்கால இலக்கியங்களிலிருந்தும் சான்றுகள் தருகின்றனர். இது உரையாசிரியர்களின் எண்ணிக்கை வளர்ச்சியும் காலமும் மாற பிற இலக்கியங்களை எடுத்தாளும் ஒப்பீட்டு நோக்கு வளர்ச்சி பெறுவதைக் காட்டுகிறது.

பரிமேலழகரின் உரையில் வடமொழிச்சார்பைக் கொண்டுள்ள குறட்பாக்களை மறுக்கும் நோக்கில் புலவர் குழந்தை, தேவநேயன், இரா. நெடுஞ்செழியன் போன்றோர் உரை எழுதியுள்ளனர். இதனால் வடநூலின் தாக்கம் திருக்குறளில் கிடையாது என்ற கருத்து வெளிப்படுகிறது.

கு.ச. ஆனந்தன் தம் திருக்குறள் உரையில் பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து சான்றுகள் தந்து திருக்குறள் கொள்கையினைச் சமன்மைப் பொருளியச் சமூகச் சிந்தனை நோக்கில் கூற முனைந்துள்ளார். இவருக்குப் பின் இந்நோக்கில் ஆய்வுகள் தொடர்ந்து வெளிவரவில்லை.

மு. கோவிந்தசாமி பிற இலக்கிய உரைகளுள் திருக்குறள் மேற்கோள்கள் இடம்பெற்றுள்ளதைத் தொகுக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார்.

திருக்குறளின் காலத்தினை அறிய புத்தமதச் சார்பு இலக்கியக் கருத்துகளுடன் திருக்குறளை 1954-இல் மா. இராசமாணிக்கனார் ஒப்பிட்டுள்ளார். மணிமேகலையில் திருக்குறள் கருத்துகள் காணப்படுவதைக் கொண்டும், மணிமேகலையில் உரியரான மதக்கருத்துகள் உள்ளது என்றும் ஒப்பிடும் ஆய்வு புதிய சிந்தனையுடையது. ஆயினும், இந்நோக்கில் தொடர்ந்து ஆய்வுகள் வெளிவரவில்லை.

சங்கப் புலவர்களான ஔவையார், அம்மூவனார், நக்கீரர், கபிலர் போன்ற புலவர்களின் பாடல்களுடன் திருக்குறள் கருத்தொப்புமையைக் கொண்டு கால ஆய்வுகள் கூறியுள்ளனர். இவை ஏற்கத்தக்கனவாகத் தோன்றவில்லை. 1989-இல் பே.க. வேலாயுதன் சங்க காலத்தில்

